# நேஷனல் தமிழ் மாலை



ஐந்தாம் படிவம்



பொதுப் பகுதி

பதிப்பாசிரியர் :
டாக்டர் மா. இராசமாணிக்கனர்
பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை.







நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி
6, கொண்டி செட்டித் தெரு, சென்னை-1

# நேஷனல் தமிழ் மாலை

## ஐந்தாம் படிவம் : பொதுப் பகுதி

பதிப்பாசிரியர் :
டாக்டர் மா. இராசமாணிக்கனுர்,
M. A., L. T., M. O. L., Ph. D.
தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை





நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி
6, கொண்டி செட்டித் தெரு, சென்னை-1



1954

[விலை ரூ. 1-4-0

# முன்னுரை

1. நேஷனல் தமிழ் மாலை என்னும் பெயருடன் வெளிவரும் இச்செய்யுள்—உரை மாலை ஐந்தாம் படிவம்—பொதுப் பகுதிக்கு உரியது; கல்வித் துறையினர் அண்மையில் (4—7—'52) வெளியிட்ட பாட இயலை உளங்கொண்டு கோவை செய்யப்பட்டது.

2. பொதுப் பகுதியில் 400 வரிகளைக் கொண்ட செய்யுட் பகுதி வேண்டும் என்பது பாட இயலின் விதி. இந்நூலில் ஏறத்தாழ **450** வரிகள் தரப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து மனப்பாடத்திற்கு உரிய 100 வரிகளைத் தமிழாசிரியர் தம் விருப்பம் போலத் தேர்ந்தெடுத்துப் பிள்ளைகளை மனப்பாடம் செய்யச் சொல்லலாம். ஒவ்வொரு செய்யுட் பகுதியின் முதலில் ஆசிரியர் குறிப்பும், நூலின் விளக்கமும், ஈற்றில் அருஞ்சொற்பொருள், கேள்விகள், பயிற்சி என்பனவும் தரப்பட்டுள்ளன. அருஞ்சொற் பொருள் என்னும் தலைப்பில் தேவையான இலக்கணக் குறிப்புக்கள் சிலவும் தரப்பட்டுள்ளன.

3. உரை*ப் பகுதி 'இராயல்' 50 பக்க அளவில் பலவகைப் பாடங்களைக் கொண்டதாதல் வேண்டும் என்பது பாட இயலின் விதி. இதனை உளங்கொண்டே இந்நூலில் ஏறத்தாழக் குறிப்பிட்ட அளவில் வருமாறு 14 பாடங்கள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடத்தின் முதலில் ஆசிரியர் குறிப்பும், ஈற்றில் அருஞ்சொற் பொருள், கேள்விகள், பயிற்சி என்பனவும் தரப்பட்டுள்ளன.

4. ஆசிரியர் ஒரு பாடத்தைக் கற்பிக்குமுன் மாணவர் தாமே முயன்று படித்தறிதற்கு உறுதுணையாகவே முன்னுரை, அருஞ்சொற் பொருள் முதலியன தரப்பட்டுள்ளன. மாணவர் ஊக்கத்துடன் பயிற்சிகளை விடாது செய்வாராயின், கட்டுரை வரையும் திறமை கைவரப் பெறுவர்.

5. தத்தம் பாடல்களையும் உரைப் பாடங்களையும் இந்நூலில் சேர்த்துக்கொள்ளத் தம் இசைவு தந்துதவிய பெருமக்களுக்கு எனது உளமார்ந்த நன்றி உரியது. இதனை என்னுடன் இருந்து பரிசோதித்து, நன்முறையில் வெளிவர உதவி புரிந்த வித்துவான் சி. முருகேசனார்க்கும் (தமிழாசிரியர், முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளி, சென்னை), வித்துவான் பு. செல்வராசனார்க்கும் (தலைமைத் தமிழாசிரியர், அப்துல் ஹக்கீம் உயர்நிலைப் பள்ளி, சென்னை) எனது நன்றி என்றும் உரியது.

6. இந்நூலை மாணவர்க்குப் பயன்படச் செய்யும் அறிஞர் அனைவர்க்கும் என் பணிவார்ந்த வணக்கமும் நன்றியும் உரியவாகுக.

தியாகராசர் கல்லூரி,
மதுரை.

மா. இராசமாணிக்கம்

---

* உரைநடை - வாசக நடை (Prose style)—Lexicon I, P. 452. எனவே உரை, வசனம் எனப் பொருள்படும்.

# உள்ளுறை

| எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|


**பா மாலை**

I. வாழ்த்து
- 1. கடவுள் வாழ்த்து ...
  - (1) திருவிசைப்பா ... 1
  - (2) வில்லிபாரதம் ... 2
  - (3) சீருப் புராணம் ... 2
  - (4) சேசுநாதர் அந்தாதி வெண்பா ... 3
- 2. தமிழ்த்தாய் வாழ்த்து ... 3

II. அறவுரை
- 1. சாணக்கிய நீதி ... 5
- 2. நாலடியார் ... 7
- 3. பழமொழி நானூறு ... 9
- 4. திருக்குறள் ... 11

III. கதை
- 1. ஆசிய ஜோதி—புத்தரும் மகனிழந்த தாயும் ... 15
- 2. கம்ப ராமாயணம்—கும்பகருணன் அறவுரை ... 19
- 3. பெரிய புராணம்—மநுநீதிச் சோழன் ... 22

IV. புனைந்துரை
- 1. வேத்தரங்கு ... 27
- 2. வண்டுகளின் செயல்கள் ... 27
- 3. செக்கர் வானம் ... 27
- 4. இரவுப் பெண் ... 28

V. சிறு நூல்கள்
- 1. சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம் ... 29
- 2. தஞ்சைப் பெருவுடையார் உலா ... 31
- 3. பிள்ளைத் தமிழ்
  - (1) சேசுநாதர் பிள்ளைத் தமிழ் ... 33
  - (2) திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ் ... 34

VI. பலசுவை
- 1. சீட்டுக் கவி ... 36
- 2. சிவபிரான் திருமணச் சிறப்பு (காஞ்சிப்புராணம்) 37
- 3. பெண்கள் விளையாட்டு (தில்லை உலா) ... 38

| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|

## உரை மாலை


1. வஞ்சிமாநகர் ... 40
—டாக்டர் மா. இராசமாணிக்கனர் அவர்கள், M.A., L.T.. M.O.L., Ph. D.

2. ஜப்பானில் கல்வி முறை ... 45
—திரு. சு. இராமசுவாமி நாயடு அவர்கள், முன்னுள் மேயர், சென்னே.

3. மாதரி வீட்டில் கோவலனும் கண்ணகியும் ... 50
—டாக்டர் மு. வரதராசனர் அவர்கள், M.A., M.O.L., Ph. D.

4. தமிழன் கண்ட மலேயா (கடிதம்) ... 55
—திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள், M.A., M.Litt.

5. கவரி வீசிய காவலன் ... 59
—வித்துவான் அன்பு கணபதி அவர்கள்

6. திருச்சிராப்பள்ளி ... 65
—திரு. T. V. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள்

7. சீருப் புராணம் ... 69
—ஜனுப் K. M. K. அப்துல் காதர் அவர்கள், M.A.

8. கூட்டுறவு இயக்கம் ... 75
—திரு. K. S. நாகராசன் அவர்கள், B.A., B.Sc.

9. சோழமாதேவி ... 81
—திரு. வி. நரசிம்ம ஐயர் அவர்கள், M.A.

10. விபுலானந்தரின் நற்பண்புகள் ... 85
—வித்துவான் R. பழநியாண்டி முதலியார் அவர்கள்

11. மலையமான் திருமுடிக்காரி ... 91
—வித்துவான் ஆ. பூவராகம் பிள்ளையவர்கள்

12. பால் ... 96
—திரு. R. K. விசுவநாதன் அவர்கள், M.A.

13. சோழர் காலத்து ஓவியமும் சிற்பமும் ... 104
—திருவாட்டி R. ஜனுபாய் அம்மையார் அவர்கள், B.Sc. (Hons.)

14. சொற்பொழிவு ... 112
—திரு. N. D. சுந்தரவடிவேல் அவர்கள், M.A., L.T.

15. களவியல் கிடைத்த வரலாறு (இறையனர் களவியல் உரை) ... 120
—முசிரி ஆசிரியர் நீலகண்டனர்

## இசைவு பெற்றுப் பதிக்கப்படுபவை

| பா மாலை | இசைவளித்தோர் |
|---|---|
| 1. தமிழ்த்தாய் வாழ்த்து | கரந்தைக் கவியரசு R. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள், தஞ்சை. |
| 2. ஆசிய ஜோதி : புத்தரும் மகனிழந்த தாயும் | K. குமாரசுவாமி பிள்ளையவர்கள், புத்தேரி. |
| 3. புனைந்துரை : 4 பாடல்கள் | வித்துவான் குழந்தை அவர்கள், பவானி. |

| உரை மாலை | |
|---|---|
| 1. வஞ்சிமாநகரம் | வானொலி நிலையத்தார், சென்னை. |
| 2. ஜப்பானில் கல்வி முறை | திரு. சு. இராமசுவாமி நாயடு அவர்கள், முன்னாள் மேயர், சென்னை. வெள்ளையன் பதிப்புக் கழகம், கண்டனூர். |
| 3. மாதரி வீட்டில் கோவலனும் கண்ணகியும் | டாக்டர் மு. வரதராசனார் அவர்கள், M.A., M.O.L., Ph.D., சென்னை. |
| 4. தமிழன் கண்ட மலேயா | திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள், M.A., M.Litt., சென்னை. |
| 5. கவரி வீசிய காவலன் | வித்துவான் அன்பு கணபதி அவர்கள், சென்னை. |
| 6. திருச்சிராப்பள்ளி | திரு. T. V. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள், அண்ணாமலைநகர். |
| 7. சீறாப் புராணம் | ஜனாப் K.M.K. அப்துல்காதர் அவர்கள், M.A., சென்னை. |
| 8. கூட்டுறவு இயக்கம் | திரு. K. S. நாகராசன் அவர்கள், B.A., B.Sc., சென்னை. |
| 9. சோழமாதேவி | பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. |
| 10. சோழர் காலத்து ஓவியமும் சிற்பமும் | திருவாட்டி R. ஜனாபாய் அம்மையார், B.Sc. (Hons.), திருச்சிராப்பள்ளி. |
| 11. சொற்பொழிவு | திரு. N. D. சுந்தரவடிவேல் அவர்கள், M.A., L.T., சென்னை. |
| 12. பால் | திரு. R. K. விசுவநாதன் அவர்கள், M.A., அண்ணாமலைநகர். |
| 13. படங்கள் : (1) தஞ்சைப் பெரிய கோவில். (2) கங்கை கொண்ட சோழேச்சரம். (3) இராசராசேச்சரம். தாராசுரம். | Copyright, Department of Archaeology, Madras. |

# நேஷனல் தமிழ் மாலை

## ஐந்தாம் படிவம் : பொதுப் பகுதி



## பா மாலை

## I. வாழ்த்து

### 1. கடவுள் வாழ்த்து

#### (1) திருவிசைப்பா

திரு + இசைப்பா - இறைவன் புகழைப் பேசும் அழகிய பாடல்கள். கங்கை கொண்ட சோழன், தான் புதிதாக அமைத்த கங்கை கொண்ட சோழபுரத்தில் பெரிய சிவன் கோவிலைக்கட்டினான். அதன் பெயர் கங்கை கொண்ட சோழேச்சரம். அத்திருக்கோயிற் சிவபிரான்மீது அக் காலத்தவரான கருவூர்த் தேவர் என்ற சைவப் பெரியார் 11 பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றுள் கீழ்வரும் பாடல் ஒன்று. இவ்வாசிரியர் காலம் கி. பி. 11-ஆம் நூற்றாண்டு. இப்பாடல் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாந் திருமுறையைச் சேர்ந்தது.

அன்னமாய் விசும்பு பறந்தயன் தேட
அங்ஙனே பெரியநீ சிறிய
என்னையாள் விரும்பி யென்மனம் புகுந்த
எளிமையை என்று(ம்)நான் மறக்கேன் ;
முன்ன(ம்)மால் அறியா ஒருவனும் இருவா !
முக்கணா ! நாற்பெருந் தடந்தோள்
கன்னலே ! தேனே ! அமுதமே ! கங்கை
கொண்டசோ ழேச்சரத் தானே !

## (2) வில்லி பாரதம்

வில்லி - வில்லிபுத்தூராழ்வார் ; கி. பி. 14-ஆம் நூற்றுண்டினர் ; நடு நாட்டில் சனியூரிற் பிறந்தவர் ; வக்கபாகையை ஆண்ட வரபதியாட் கொண்டான் என்னும் சிற்றரசனுல் போற்றப்பட்டவர் ; வடமொழி - தென் மொழிப்புலவர் ; பாரதத்தைத் தமிழிற் பாடியவர்.

வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொருளும்
அப்பொருள் விதங்களும் பஞ்ச
பூதமும் புலனும் புலன்களின் பயனும்
அப்பயன் பொலிவுற நுகரும்
ஞாதமும் உலகம் படைத்தளித் தழித்து
ஞானமாய் அகிலமும் நிறைவுற்(று)
ஆதியும் நடுவும் முடிவுமாய் நின்ற
ஆதியான் அடியிணை பணிவாம்.

## (3) சீருப் புராணம்

'ஸீரத்' என்னும் அரபிமொழியே 'சீரு' என மருவியது. ஸீரத் - வாழ்க்கை வரலாறு ; நபி நாயகத்தின் வாழ்க்கை வரலாறு கூறும் நூல் என்பது பொருள். இது 5027 செய்யுட்களைக் கொண்டது. இதனைப் பாடியவர் எட்டயபுரம்-சமஸ்தானப் புலவரான உமறுப் புலவர் என்பவர்; கி. பி. 17-ஆம் நூற்றுண்டினர்.

திருவினும் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த
மருவினும் மருவாய் அணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி அனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினும் கருவாய்ப் பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே.

### (4) சேசுநாதர் அந்தாதி வெண்பா *

சென்ற நூற்றுண்டில் தஞ்சை மாவட்டத்தில் வாழ்ந்த பெரியசாமி உடையார் என்ற கிறித்துவப் புலவர் இந்நூலைப் பாடினர். இந்நூல் அந்தாதித் தொடையில் அமைந்த 100 வெண்பாக்களைக் கொண்டது.

உற்றதுணை நீயல்லால் உண்டோமற்(று) இவ்வுலகில்
பெற்றவரின் மிக்க பெருந்தயைகொள்—நற்றவனே !
பாசவழி சேராமற் பாங்குடனே போற்றுவிசு
வாசவழி சேரவருள் வந்து.

## 2. தமிழ்த்தாய் வாழ்த்து

இதனை இயற்றியவர் அரங்க - வேங்கடாசலம் பிள்ளையவர்கள் ; கரந்தைத் தமிழ்ச்சங்கப் புலவர் ; 'கவியரசு' என்ற பட்டம் பெற்றவர் ; அகநானூறு முதலிய பழந்தமிழ் நூல்கட்கு உரை கண்ட பெரியார் ; பல பாடல்களும் கட்டுரைகளும் எழுதிவருபவர் ; கரந்தைப் புலவர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராக இருந்து அண்மையில் உயிர்நீத்தவர்.

ஆற்றிடினும் தீயிடினும் அன்பர்தமைக் காத்தே
அவர்வேண்டும் பேறருளும் அன்பே!புன் மாக்கள்
போற்றிடினும் தூற்றிடினும் பொருள்செய்யாப் பொறையே !
பூவிலிணை மொழியில்லாப் பொலிவுடைய பொற்பே!
மாற்றறியாப் பொன்னே!நன் மணியே!செஞ் சுடரே !
வாடாத மணமலரே ! மணந்தருதென் காலே !
ஏற்றிவிளங் கோலமுடன் என்றென்றும் வாழ்வாய்
எங்கரந்தைத் தமிழ்ச்சங்கத் தினிதுறைசெந் தமிழே !

#### அருஞ்சொற்பொருள்

1. அயன் - பிரமதேவன். விசும்பு - ஆகாயம். ஆள் - ஆள ; ஆட்கொள்ள. இருவா - உமையொடு இருவராய் இருக்கும் தன்மையன். சிவபெருமானுக்கு நான்கு கைகள் இருப்பதாகக் கூறுவது நூல்வழக்கு. கன்னல் - கரும்பு. கங்கைகொண்ட சோழேச்சரம் - திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உடையார் பாளையத்தை அடுத்து உள்ளது.

---

* இந்நூல் இப்பொழுது அச்சில் இல்லை. இதன் பழைய பிரதி ஒன்றை எனக்கு உதவியவர், திருச்சிராப்பள்ளி, அர்ச் : சூசையப்பர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்-திருவாளர் ரம்போலோ மாஸ்கரேனஸ், M. A. அவர்களாவர்.

2. பஞ்சபூதம் - மண், நீர், நெருப்பு, காற்று, வானம் என்பன. ஐம்புலன்கள் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. ஞாதம் - அறிபவன். அகிலம் - உலகம் முழுவதும். ஆதி - முதல்.

3. திரு - செல்வம். மரு - மணம். மதித்திடா - மதிப்பிட முடியாத. பொருவினும் - ஒத்திருப்பினும். புரந்த - பாதுகாத்த (பாதுகாக்கும்). பொருந்துதல் - மனதில் பதியவைத்தல்.

4. பாசம் - உலகப்பற்று ; பொருளின்மேற் செல்லும் மனவிருப்பம். விசுவாச வழி - தெய்வ அன்புநெறி.

5. பூ - பூமி. தென்கால் - தென்றற் காற்று.

## கேள்விகள்

1. கருவூர்த் தேவர் "என்றும் நான் மறக்கேன்" என்று எதனைக் கூறுகின்றார் ?

2. ஆதியான் எவ்வெப் பொருள்களாக விளங்குகிறான் என வில்லி புத்தூராழ்வார் குறிப்பிடுகிறார் ?

3. சீறாப்புராண ஆசிரியர் இறைவன் இயல்பினை எவ்வாறு விளக்கு கிறார் ?

4. ஆசிரியர் சேசுநாதரிடம் வேண்டிக்கொள்ளும் வரம் யாது ?

5. செந்தமிழ்த் தாய் எப்பெருமைகளை உடையவள் ?

## பயிற்சி

1. பிரித்து எழுதுக :—அப்பொருள், படைத்தளித்தழித்து, அடி யிணை, அழிவிலா, மனத்தளவு, நற்றவன், பெருந்தயை, செஞ்சுடர்.

2. சேர்த்து எழுதுக :—மெய் + பொருள், மால் + அறியா, மூன்று + காலம், பல + உயிர், நீ + அல்லால், பூ + இல், மணம் + மலர்.

3. மேற்கண்ட ஐந்து செய்யுட்களையும் உங்கள் சொந்த வாக்கியங் களில் உரைநடைப்படுத்தி எழுதுக.

4. வாக்கியங்களிற் பயன்படுத்துக :—எளிமை, கன்னல், தடந் தோள், விளம்பும், பொலிவுற, நிறைவுற்று, பிறப்பிறப்பு, உற்ற துணை, பேறு, பொலிவுடைய, இளங்கோலம், செந்தமிழ்.

5. ஐம்பொறி, ஐம்புலன், நவமணி—இவை இன்னவை எனக் கூறுக.

6. எதிர்ச்சொல் தருக : ஆதி, அளித்து, மெய்ப்பொருள், அழி விலா, பிறப்பு, துன்பம், எளிமை, பெருந்தோள், மறக்கேன்.

# II. அறவுரை

## 1. சாணக்கிய நீதி

இது வடமொழி நூலைத் தழுவித் தமிழிற் செய்யப்பட்டது. இதனைத் தமிழிற் பாடியவர் யாழ்ப்பாணத்துச் சுன்னுகம் குமாரசுவாமிப் புலவர்; சிறந்த பெரும்புலவர்; பல நூல்களைத் திறம்படத் தமது புத்துரையுடன் வெளியிட்டவர் ; ஏறத்தாழ 30 ஆண்டுகட்குமுன் உயிர் வாழ்ந்தவர்.

சுற்றத்தவன்

வேந்தர் கடைத்தலையில், வெம்போரில், நல்குரவில்,
ஏய்ந்த துயரில், இடுகாட்டில்,—வாய்ந்துவகை
பற்றும் விழாவில், பரிவுகொண்டு நிற்பவனே
சுற்றத் தவனென்று சொல். (1)

நாணொழித்தல்

உண்ணும் தொழிற்கண்ணும், ஓதும் தொழிற்கண்ணும்,
எண்ணுதன தானியங்கள் ஈதலினும்—நண்ணுமுறை
பூணும் தொழிற்கண்ணும், புத்திமான் எப்பொழுதும்
நாணம் இலாதிருக்கை நன்று. (2)

சிந்தித்த காரியம்

செவ்வனுற நெஞ்சகத்தில் சிந்தித்த காரியத்தை
எவ்வெவர்க்கும் வாயால் இயம்பற்க—இவ்வுலகில்
பல்லோர் அறியிற் பழுதாம் ; பயன்படலும்
இல்லைஎனச் சொன்னுர் எடுத்து. (3)

முயற்சி

செய்யும் தொழில்எவையும் திண்ணம் பெறமுயற்சி
செய்து நலம்அடையும் சிங்கம்போல்—வையகத்தில்
செய்யும் தொழிலைச் சிறிதுபெரி தென்னுது
செய்க முழுமுயற்சி சேர்ந்து. (4)

வினைசெயல்

மீனம் வருமளவும் மெய்ஒடுக்கி நீர்க்கரையில்
மோனமுறும் கொக்கின் முயற்சிஎனத்—தானிருந்து
காலமிடம் வாய்த்திடுதல் கண்டு, வினைபுரிக
சாலும் முழுமுயற்சி சார்ந்து. (5)

## அருஞ்சொற்பொருள்

1. வேந்தர் கடைத்தலை - அரசருடைய அரண்மனை வாயில். நல்குரவு - வறுமைக் காலம். உவகை பற்றும் விழா - திருமணம் முதலிய விழாக்கள். பரிவு - அன்பு.

2. ஓதும் தொழில் - கல்வி கற்றல். தனம் - செல்வம். பூணும் தொழில் - மேற்கொண்ட தொழில்.

3. செவ்வன் உற - செம்மை பெற; நன்றாக. இயம்பற்க - சொல்ல வேண்டா. பல்லோர் - பலர்.

4. திண்ணம்பெற - உறுதிபெற. வையகம் - உலகம்.

5. மீனம் - மீன். மெய் - உடம்பு. மோனம் உறும் - மௌனமாக இருக்கின்ற. வாய்த்திடுதல் - பொருந்துதல்.

## கேள்விகள்

1. சுற்றத்தவன் என்று யாரைச் சொல்லுதல் வேண்டும்?

2. எவ்வெவ்விடத்துப் புத்திமான் நாணம் இலாதிருப்பான்?

3. இவ்வுலகில் எக்காரியம் பயன்படாது பழுதுபட்டுவிடும்?

4. சிறிய செயலையும், பெரிய செயலையும் எவ்வாறு செய்யவேண்டும்?

5. கொக்கின் இயல்பு யாது? அது போல் நாம் யாது செய்ய வேண்டும்?

## பயிற்சி

1. மேற்கண்ட செய்யுட்களில் அமைந்த கருத்துக்களைத் திரட்டிச் சிறு வாக்கியங்களில் வரைக.

2. பின்வரும் தொடர்களால் குறிக்கப்படும் கருத்துக்களை விளக்குக: ஏய்ந்த துயரில், முறை பூணும் தொழில், முழு முயற்சி, மோனமுறும் கொக்கு.

3. மேற்கண்ட 4-5-ஆம் செய்யுட்களில் அமைந்த உவமான உவமேயங்களைத் தனியே பிரித்து எழுதுக.

4. சேர்த்து எழுதுக :—கடை + தலை, வெம்மை + போர், இலாது + இருக்கை, நெஞ்சு + அகம், இ + உலகம், என + சொன்னர், பெரிது + என்னுது, நீர் + கரை.

5. பிரித்துக் காட்டுக :—தனதானியங்கள், அறியிற்பழுதாம், முழு முயற்சி, காலமிடம், சாணக்கிய நீதி.

6. வாக்கியங்களிற் பயன்படுத்துக :—கடைத்தலை, நல்குரவு, இயம்பற்க, பழுது, முழுமுயற்சி, சிறிது பெரிது, வருமளவும்.

## 2. நாலடியார்

நான்கு அடிகளைக் கொண்ட வெண்பாக்கள் 400 கொண்ட நீதிநூல். இது, இனியவை நாற்பதுபோன்ற பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இது, சமண முனிவர் பலர் செய்த பாக்களின் தொகுப்பு என்று வரலாறு கூறும். இதன் காலம் சுமார் கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றுண்டு என்னலாம். 'ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி' என்னும் வழக்கு நோக்கி, இதன் சிறப்பினை உணர்க.

### யாக்கை நிலையாமை

வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படாஅ தெழுதலால்—வாழ்நாள்
உலவாமுன் ஒப்புர வாற்றுமின் ; யாரும்
நிலவார் நிலமிசை மேல். (1)

### அறன் வலியுறுத்தல்

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க ;—கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்உதவி மற்றதன்
கோதுபோல் போகும் உடம்பு. (2)

### சினமின்மை

இளையான் அடக்கம் அடக்கம் கிளைபொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன்—எல்லாம்
ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை. (3)

### சுற்றந்தழால்

அழன்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழன்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன். (4)

### ஈயாமை

துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியும் மடவோனை—வைத்த
பொருளும் அவனை நகுமே ; உலகத்(து)
அருளும் அவனை நகும். (5)

### அருஞ்சொற்பொருள்

1. அலகா - அளவாக. ஒளிமண்டிலம் - ஒளிவட்டமான சூரியன். வீழ்நாள் - தவறிப் போகும் நாள். உலவாமுன் - அற்றுப்போகாமுன். ஒப்புரவு - உதவி.

2. அரும்பெறல் - பெறுதற்கு அருமையான. பயத்தால் - பயனைக் கொண்டு; ஆக்கத்தைக் கொண்டு. பின் உதவி - மறுமைக்கு வேண்டிய வற்றை உதவி செய்து. கரும்பு ஊர்ந்த சாறு போல் - கரும்பை ஆட்டி எடுத்த சாறுபோல.

3. அடக்கம் - புலனடக்கம். கிளைபொருள் - கிளைக்கும் பொருள். ஒறுக்கும் - அழிக்கவல்ல. மதுகை - வலிமை. உரன் - அறிவுவன்மை.

4. அழல் - வெயிலின் கொடுமையாகிய வெப்பம்; வறுமையின் வெப்பம். பழுமரம் - பழுத்த மரம்.

5. கழியான் - செலவழியான். அருள் - அவன் அடையாத அருள்.

### கேள்விகள்

1. மக்கள் ஏன் ஒப்புரவு செய்தல் வேண்டும்?

2. நாம் உடம்பை எதற்குப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும்? ஏன்?

3. எவருடைய அடக்கமும், கொடையும், பொறையும் சிறப்புடையன வாகும்?

4. நல்ல ஆண்மகனுக்குக் கடன் யாது?

5. செலவழியாது வைத்தபொருளும், உலகத்து அருளும் எவனை நகும்?

### பயிற்சி

1. மேற்கண்ட செய்யுட்களில் அமைந்துள்ள நீதிகளை எடுத்து எழுதுக.

2. யாரும் நிலவார் நிலமிசை மேல், பெரும்பயன் கொள்ளுதல், கிளைபொருள், பல்லார் பயன்றுய்ப்ப, வைத்த பொருளும் உலகத்து அருளும் நகும்—இவற்றை நன்கு விளக்கி வரைக.

3. வாக்கியங்களிற் பயன்படுத்துக:—வாழ்நாள், ஒளிமண்டிலம், இளையான், உரனுடையாளன், அழல், பயன்றுய்ப்ப, ஈகலான், நகும்.

4. பிரித்துக் காட்டுக:—ஒப்புரவாற்றுமின், அரும்பெறல், பெரும் பயன், கரும்பூர்ந்த, கொடைப்பயன், உரனுடையான், நிழன்மரன், நேரொப்ப, ஒப்பத்தாங்கி, பயன்றுய்ப்ப, நல்லாண்.

5. இவ்வைந்து செய்யுட்களின் திரண்ட கருத்தினை 15 வரிகட்குள் எழுதிக் காட்டுக.

6. எதிர்ச்சொல் கூறுக:—வாழ்நாள், எழுதல், நிலவார், கொள்க, இளையான், இல்லான், பொறை, பல்லோர்.

## 3. பழமொழி நானூறு

பழமொழி நானூறு - ஒவ்வொரு செய்யுளிலும் ஒரு பழமொழியைக் குறிக்கும் 400 செய்யுட்களைக் கொண்ட நூல். இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. இதனைச் செய்தவர் **முன்றுறை அரையனார்**; கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டினர்.

**கல்வி**

ஆற்றவும் கற்றார் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை—அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில். (1)

**கல்லாதார்**

கற்றாற்று வாரைக் கறுப்பித்துக் கல்லாதார்
சொல்தாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல்—எற்றெனின்
தானும் நடவான் முடவன் பிடிப்பூணி
யானையோ(டு) ஆடல் உறவு. (2)

**அமைச்சர்**

செயல்வேண்டா நல்லன செய்விக்கும் தீய
செயல்வேண்டி நிற்பின் விலக்கும்; இகல்வேந்தன்
தன்னை நலிந்து தனக்குறுதி கூறலால்
முன்னின்னா மூத்தார்வாய்ச் சொல். (3)

**பகைத் திறம்**

தமரல் லவரைத் தலையளித்தக் கண்ணும்
அமராக் குறிப்பவர்க் காகாதே தோன்றும்
சுவர்நிலம் செய்தமையக் கூட்டியக் கண்ணும்
உவர்நிலம் உட்கொதிக்கு மாறு. (4)

**அறஞ்செய்தல்**

பலநாளும் ஆற்றார் எனினும் அறத்தைச்
சிலநாள் சிறந்தவற்றாற் செய்க—கலைதாங்கி
நைவது போலும் நுசுப்பினாய்! நல்லறம்
செய்வது செய்யாது கேள். (5)

### அருஞ்சொற்பொருள்

1. ஆற்றவும் - மிகுதியும். அஃது உடையார் - அறிவுடையவர். ஆறு + உணா = ஆற்றுணா - வழி உணவு. "கற்றார்க்கு ஆற்றுணா வேண்டுவது இல்"—பழமொழி.

2. கறுப்பித்து - கோபமூட்டி. சொல்......எழுதல் - சொற்களை மிகுத்துக்கொண்டு மாறுபட்டு மிக்கு எழுதல். யானையோடு ஆடல் உறவு - யானையோடு உறவாடுதலை ஒத்தது. "முடவன் பிடிப்பு ஊணி யானையோடு ஆடல் உறவு"—பழமொழி.

3. செயல் வேண்டா நல்லன - செய்ய முடியாத நல்லனவற்றை. முன் இன்னா - முதலில் துன்பம் தரும். (பின் இன்பம் தரும்.) மூத்தோர் - அறிவால் முதிர்ந்த அமைச்சர். "முன் இன்னா மூத்தோர் வாய்ச்சொல்"—பழமொழி.

4. அமரா குறிப்பு தோன்றும் - விரும்பாத குறிப்பே தோன்றும். தமர் அல்லவர் - தமக்கு உறவு அல்லாதவர். உவர் நிலம் உள் கொதிக்கும் - உவர் மண் உள்ளே கொதித்து உதிர்ந்துவிடும். "சுவர் நிலம் செய்தமையக் கூட்டியக் கண்ணும் உவர் நிலம் உட்கொதிக்குமாறு"—பழமொழி.

5. கலை - மேகலை. நுசுப்பு - இடை. நல்லறம் செய்வது கேள் செய்யாது - நல்லறம் செய்யும் நன்மையைச் சுற்றத்தாரும் செய்யார். "நல்லறம் செய்வது செய்யாது கேள்"—பழமொழி.

### கேள்விகள்

1. யாருக்கு ஆற்றுணா வேண்டுவதில்லை? ஏன்?
2. முடவன் யானையோடு உறவாடுதலைப் போன்றது எது?
3. அமைச்சருடைய சொல் என்ன என்ன நன்மைகளைச் செய்யும்?
4. பகைவர்க்கு நன்மை செய்யினும் பயனில்லை—ஏன்?
5. நல்லறம் செய்வது சுற்றத்தாரும் செய்யார் ஆதலால் நாம் யாது செய்தல் வேண்டும்?

### பயிற்சி

1. பொருள் கூறுக:—ஆற்றவும், கற்றார், ஆற்றுணா, கற்றாற்றுவார், இகல்வேந்தன், முன்னின்னா, தலையளித்தல், உட்கொதிக்கும், கேள்.

2. எதிர்ச்சொல் கூறுக:—கற்றார், அறிவுடையார், வேற்றுநாடு, நடவான், உறவு, விலக்கும், இன்னா, ஆற்றார், செய்க.

3. மேற்கண்ட ஐந்து செய்யுட்களிலும் உள்ள பழமொழிகளை எடுத்து எழுதி, அவற்றின் பொருளும் எழுதுக.

## 4. திருக்குறள்

திருக்குறள் உலக மக்கள் அனைவர்க்கும் ஏற்ற நல்லுரைகளைக் கூறுவது. அதனால் இது மேனாட்டு மொழிகளிலும் கீழ்நாட்டு மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இஃது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பிரிவுகளைக் கொண்டது; 1330 குறட் பாக்களை உடையது. இதன் ஆசிரியர் திருவள்ளுவர். இவர் காலம் ஏறத்தாழ 1800 ஆண்டுகட்கு முன் என்னலாம்.

### (1) இனியவை கூறல்

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். (1)

அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்(து)
இன்சொலன் ஆகப் பெறின். (2)

முகத்தான் அமர்ந்தினிது நோக்கி யகத்தானும்
இன்சொ லினதே யறம். (3)

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. (4)

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்(கு)
அணியல்ல மற்றுப் பிற. (5)

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். (6)

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். (7)

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும். (8)

இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. (9)

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (10)

(2) செய்ந்நன்றியறிதல்

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. (1)

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. (2)

பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது. (3)

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். (4)

உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. (5)

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு. (6)

எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு. (7)

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று. (8)

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும். (9)

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (10)

(3) ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (1)

பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை. (2)

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். (3)

மறப்பினும் ஓத்துக் கொளலாகும்' பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும். (4)

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு. (5)

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படும்பாக் கறிந்து. (6)

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. (7)

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். (8)

ஒழுக்கம் உடையவர்க்(கு) ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். (9)

உலகத்தோ(டு) ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். (10)

அருஞ்சொற்பொருள்

(1) இனியவை கூறல் என்பது பிறர்க்கு நன்மை பயக்கும் இனிய சொற்களைச் சொல்லுதல்.

1. இன்சொலால் = இன்சொல் + ஆல்; இன்சொல்லாவது. படிறு - வஞ்சனை. செம்பொருள் - அறம்.

2. அகம் - அகன். முகம் - முகன் - போலி. அகன் அமர்ந்து - மனம் விரும்பி. முகன் அமர்ந்து - முகம் இனிமை பொருந்தி.

3. அகத்தான் ஆம் இன்சொல் - மனத்தோடு பொருந்திய இன்சொல்.

4. துவ்வாமை - நல்குரவு; வறுமை. இன்பு உறாஉம் - இன்பத்தை அதிகப்படுத்துகின்ற.

6. அல்லவை - பாவம்.

7. நயன் - நீதி. நன்றி - அறம். பயன் - நன்மைப்பயன். தலைப் பிரிதல் - நீங்குதல்.

8. சிறுமையுள் நீங்கிய இன்சொல் - பிறர்க்குத் தீங்கு செய்யாத இன்சொல்.

9. எவன்கொல் - என்ன காரணத்தால்.

(2) செய்ந்நன்றியறிதல் என்பது தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாமை.

1. வையகம் - இப்பூவுலகம். வானகம் - வான் உலகம்.

2. ஞாலம் - பூமி. காலத்தினால் - இறுதிக் காலத்தில்.

3. தூக்கார் - ஆராயாதவராய். தூக்கின் - ஆராய்ந்து பார்த்தால்.

4. தினை, பனை - அளவுகள்.

7. விழுமம் - துன்பம்.

8. நன்று ஒன்று உள்ள - நன்மை ஒன்றை நினைக்க.

9. உய்வு - தப்பிப் பிழைக்கும் வழி.

(3) ஒழுக்கம் உடைமை—நல்லொழுக்கத்தை உடையவராய் இருத்தல்.

1. விழுப்பம் - மேன்மை.

2. பரிந்து ஓம்பி - வருந்திப் பாதுகாத்து.

3. குடிமை - குலத்தின் பெருமை. இழுக்கம் - ஒழுக்கத்தினின்றும் தவறுதல்.

4. ஒத்து - வேதம்.

5. ஆக்கம் செல்வம்.

6. ஒல்கார் - சுருங்கார். உரவோர் - மனவலிமை உடையவர். படுபாக்கு - உண்டாதல்.

8. நன்றி - அறம். வித்து - காரணம். இடும்பை - துன்பம்.

9. வழுக்கியும் - மறந்தும். ஒல்லா - முடியா.

10. ஒட்ட - பொருந்த.

## கேள்விகள்

1. இன்சொல் எனப்படுவது யாது?
2. மனம் விரும்பிக் கொடுத்தலைவிடச் சிறந்தது எது?
3. இன்சொல் உடையவர்க்கு எத்துன்பம் இல்லாது நீங்கும்?
4. ஒருவற்கு அணி எனப்படுவது எது?
5. "அல்லவை தேய அறம் வளரும்"—எப்பொழுது?
6. பண்பின் நீங்காத சொல் எவற்றைக் கொடுக்கும்?
7. எது மறுமையும் இம்மையும் இன்பந் தரும்?
8. கனி யிருப்பக் காய் கவர்தலைப் போன்றது எது?
9. 'செய்ந்நன்றியறிதல்' என்பதன் பொருள் யாது?
10. மண்ணுலகும் விண்ணுலகும் எதற்கு ஈடு ஆகாது?
11. ஞாலத்தினும், கடலினும் பெரியவை எவை?
12. அறிஞர் எதனை ஏழு பிறப்பினும் நினைப்பர்?
13. எவர்க்கு உய்வு உண்டு? எவர்க்கு உய்வு இல்லை?
14. "ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்."—ஏன்?
15. ஒழுக்கத்தினின்றும் தவறினால் வரும் தீங்குகள் எவை?
16. ஒழுக்கத்தினால் வரும் நன்மைகள் எவை?
17. பல கற்றும் அறிவில்லாதவர் யாவர்?

## பயிற்சி

1. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—இனிது நோக்கி, துவ்வாமை, இன்சொல், அணி, அல்லவை. எவன்கொல், செயப்பட்டார், எய்தாப்பழி, உரவோர்.

2. செய்ந்நன்றி அறிதல் என்ற அதிகாரத்தில் அமைந்துள்ள கருத்துக்களை 15 வரிகளில் ஒரு கட்டுரையாக வரைக.

3. ஒழுக்கமுடைமை அல்லது இனியவை கூறல் என்ற அதிகாரத்தின் கருத்தை அமைத்து ஒரு கட்டுரை எழுதுக.

# III. கதை

## 1. ஆசிய ஜோதி

### புத்தரும் மகனிழந்த தாயும்

ஆசிய ஜோதி - ஆசியாக் கண்டத்தில் பேரறிவுச் சுடரைத் தம் அன்புரைகளால் பரப்பிய பெரியவரான புத்தர் வரலாறு கூறும் செய்யுள் நூல். இதனைச் செய்தவர் நாஞ்சில் நாட்டுக் கவிஞர் - கவிமணி - தேசிகவிநாயகம் பிள்ளை என்பவர். இவர் சிறந்த புலவர்; பாவலர்; ஆராய்ச்சியாளர்; இப்பொழுதும் கவிகள் புனைந்துகொண்டிருப்பவர்.

[கதை விளக்கம்: சுஜாதை என்பவள் அரவு தீண்டி இறந்த தன் மைந்தனை எடுத்துவந்து பிழைக்கச் செய்யுமாறு புத்தரை வேண்டினள். அவர் அவளுக்கு உலக இயல்பை உணர்த்த வேண்டி, இறப்பு நிகழாத வீட்டிலிருந்து ஒரு பிடி கடுகு வாங்கிவரின் மகனை எழுப்புவதாகக் கூறினர். அவள் நகரம் முழுவதும் சுற்றி, 'இறப்பு நிகழாத வீடே இல்லை; இறப்பு இயல்பு; மாற்ற முடியாதது' என்பதை உணர்ந்து மீண்டாள். புத்தர் அதனையே வற்புறுத்தி அவளைத் தேற்றி அனுப்பினர். இந்நிகழ்ச்சியைக் கீழ்வரும் பாக்கள் உணர்த்துவன.]

### சோணை நதிக்கரையில் புத்தர்

முடமான இளமறியை முதுகில் ஏந்தி
மூவுலகும் கருணையினால் வென்ற வீரன்
திடமாகப் பலஉயிரும் அளிக்குஞ் சோணைத்
தெய்வநதிக் கரைவந்து சேர்ந்த போது, (1)

### மகனிழந்த தாய் புத்தரைக் காணுதல்

மானைப் பழித்த விழியுடையாள்—ஒரு
மாமயில் போலும் நடையுடையாள்
தேனைப் பழித்த மொழியுடையாள்—பெண்ணின்
தெய்வ மெனத்தகும் சீருடையாள். (2)

ஆருகக் கண்ணீர் வடித்துநின்ருள்—கையில்
ஆண்மக வொன்றையும் ஏந்திநின்ருள்.
தேருத உள்ளமும் தேற்றுவிக்கும்—ஞான
தேசிகன் சேவடி போற்றிநின்ருள். (3)

சந்திர மதிபோல் நின்ற தையலை நோக்கி ஐயன்
வெந்துயர் விளைந்த தென்னை விளம்புக எனலும் அன்னுள்
நைந்துநொந் துருகி யுள்ளம் நயனத்தின் வழியா யோட
மைந்தனைக் காட்டி இந்த மறுமொழி கூற லுற்ருள்: (4)

### மகனை அரவு தீண்டல்

“ சிரித்தமுக மெனமலர்ந்து செழித்தசெடி நடுவே
சிறுமகனும் விளையாடித் திரிந்திடும்அவ் வேளை
விரித்தபட மெடுத்தரவொன் றடுத்தொருகை பற்றி
விளங்குமணிக் கடகமென வளைந்துகிடந் ததுவே(5)

“ பால்மணம்மா றுதசிறு பாலகனும் அறியான்;
படஅரவை விளையாட்டுப் பண்டமெனக் கொண்
வாலினையும் தலையினையும் வயிற்றினையும் வலித்து[டான்
வருத்தமெழச் சிறுகுறும்பு செய்துவிட்டான் ஐயோ!

“ சிறுபொழுது சென்றிடஎன் செல்வமக னுடலில்
சீதமிகப் பரந்துணர்வு தீர்ந்துவிட்ட தையா!
நிறுத்தவிழி ஒருநிலையில் நின்றுவிட்ட தையா!
நீட்டியகால் மடங்காது நிமிர்ந்துவிட்ட தையா! (7)

“ கண்டாரில் மிக்கஉளக் கனிவுடையார் ஒருவர்,
‘ காரிகையே! மலைமீது காவியுடை அணிந்து
முண்டிதமாய் அலையுமொரு முனிவர்அடி பணிந்தால்
முடியாத காரியமும் முடியும்’என உரைத்தார்.”(8)

[“ஆதலால் உம்மைத் தேடி வந்தேன்” என்று கூறினள். புத்தர் அவளுக்கு உலக இயல்பை உணர்த்த விரும்பி, “இறப்பு நிகழாத வீட்டிலிருந்து ஒரு பிடி அளவு கடுகு பெற்றுக் கொண்டுவா. அதைக்கொண்டு இவனை எழுப்பலாம்,” என்றனர்.]

### அவள் கடுகு தேடிச் சென்று வருதல்

என்றுரைத்த மொழிகேட்டவ் வேழை மார்பில்
ஏந்தியணைத் திடுமகனோ டூரில் எங்கும்
சென்றுகடு கிரந்துவெறுங் கைய ளாகித்
திரும்பிமுனி திருவடியைச் சிரமேற் கொண்டு, (9)

[“ஐயா, யான் நீங்கள் கூறியவாறு வீடு வீடாகச் சென்றேன்; ‘உங்கள் இல்லம் இறப்பு நிகழாத வீடா?’ என்று வினவினேன். அவ்வளவில் அவர்கள் என்னை ஏற இறங்கப் பார்த்து,]

### ஊரார் கூற்று

" 'வினவிய தென்னே ? விரிநீர் உலகில்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்ருர்
இறந்தார் என்கை இயல்பே அம்மா !
காலேயில் உதித்த கடுங்கதிர்ச் செல்வன்
மாலேயில் தளர்ந்து மறைவதும் இலேயோ ?
இம்மா நிலத்தில் இயற்கையின் குறிப்பெலாம்
அம்மா ! நீயும் ஆய்ந்திலே போலும் !'
என்று கூறினர். என்செய ஐயா ? (10)

### தாயின் தெளிவுரை

" ஐயமிடு மனைகளிலே மரணம் என்றும்
அறியாத மனையேதும் இல்லே இல்லே ;
வையகத்தில் பிறப்புளதேல் இறப்பும் உண்டு ;
மாற்றரிய விதியிதுவென் றுணர்ந்து கொண்டேன் ;
கையமர்ந்த மகவினையும் கானில் இட்டேன் :
கண்விழியாப் பிணம்வைத்துக் காப்ப துண்டோ ?
செய்யதிரு வடிபணிந்து போற்றி இந்தச்
செய்தியினைத் தெரிவிக்க வந்தேன்." என்ருள். (11)

### புத்தர் தேற்றுதல்

மங்கைமனத் தெளிவையெலாம் உரைத்த உண்மை
வார்த்தையினுல் அறிந்தவளே நோக்கி, " அம்மா !
எங்குமிலாப் பொருள்தேடச் சென்று நீயும்
யான்நினைத்த பொருளதனைப் பெற்று வந்தாய் ;
தங்குமிந்த உலகியற்கை மாரு தம்மா !
தனயனைநீ எண்ணிமனம் தளர வேண்டா ;
அங்கமெலாம் வாயாக அழுதிட் டாலும்
அவனெழுந்து நின்துயரம் அகற்றல் உண்டோ ?" (12)

### அருஞ்சொற்பொருள்

1. முடம் - நொண்டி. மறி - ஆடு.

3. மகவு - குழந்தை. தேருத - தெளியாத. தேற்றுவிக்கும் - தெளிவிக்கும்.

4. வெந்துயர் - கொடுந்துன்பம். நைந்து - வருந்தி. நயனம் - கண். மறுமொழி - பதில்.

5. அரவு + ஒன்று = அரவொன்று. அரவு - பாம்பு. கடகம் - கையில் அணியும் ஓர் ஆபரணம்.

6. பட அரவு - படத்தையுடைய பாம்பு.

7. சீதம் - குளிர்ச்சி.

8. உளக்கனிவு - மன இரக்கம். முண்டிதம் - தலைமொட்டை. முனிவர் - புத்தராகிய முனிவர்.

9. ஏழை - பெண். இரந்து - யாசித்து.

10. வினவியது - கேட்டது. என்னை - என்ன. பிணிநோய் - மிகுந்த நோய். ஆய்ந்திலை - ஆராய்ந்தாயல்லை.

11. ஐயம் - பிச்சை. வையகம் - பூமி. மாற்றஅரிய - நீக்கமுடியாத.

### கேள்விகள்

1. மகனை இழந்த தாய் எப்படிப்பட்ட தன்மைகளை உடையவள் ?

2. மகனை இழந்த தாய் புத்தரிடம் வந்த போது எக்கோலத்தில் காணப்பட்டாள் ?

3. புத்தர் கேட்ட கேள்விக்கு மகனை இழந்த தாய் என்ன பதில் கூறினாள் ?

4. மகனை இழந்த தாய் கடுகு இரந்து கேட்டபோது ஊர்மக்கள் என்ன மறுமொழி கூறினர் ?

5. முடிவில் மகனை இழந்த தாய் எவ்வுண்மைகளைத் தெரிந்து கொண்டாள் ?

### பயிற்சி

1. பின்வரும் தொடர்களைப் பிரித்து எழுதுக :—இளமறி, மூவுலகு, சீருடையாள், மகவொன்றை, சேவடி, வெந்துயர், விளைந்ததென்னை, அவ் வேளை, அரவொன்று, கனிவுடையார்.

2. பத்து வரிகளில் கதைக் குறிப்பு எழுதுக :—முடமான இளமறியை முதுகில் ஏந்தியது, சந்திரமதிபோல் நின்ற தையலின் துயரம்.

3. இடம் கூறி விளக்குக :—"முடியாத காரியமும் முடியும்," "அம்மா நீயும் ஆய்ந்திலை போலும்," "மாற்றரிய விதியிது,', "இந்தச் செய்தியினைத் தெரிவிக்க வந்தேன்."

4. சேர்த்து எழுதுக :—கடுமை + கதிர், ஐயம் + இடும், மனை + ஏதும், பிறப்பு + உளதேல், கை + அமர்ந்து, காப்பது + உண்டோ, திரு + அடி, அறிந்து + அவளை, மனம் + தெளிவு, எங்கும் + இலா, இது + என்று.

5. வாக்கியங்களில் அமைக்க :—மாற்றரிய, மனத்தெளிவு, உலகி யற்கை, மனந்தளர, அகற்றல், பொருள் தேட, பிறப்பிறப்பு, மறுமொழி.

# 2. கம்ப ராமாயணம்

## கும்பகருணன் அறவுரை

கம்பர் + ராமாயணம் = கம்பராமாயணம் - சில விகாரமாம் உயர்திணை என்பது விதி; கம்பரால் பாடப்பட்ட இராமாயணம் என்பது பொருள். இந்நூல் 10500 பாடல்களையுடையது. இது (1) பால காண்டம், (2) அயோத்தியா காண்டம், (3) ஆரண்ய காண்டம், (4) கிஷ்கிந்தா காண்டம், (5) சுந்தர காண்டம், (6) யுத்த காண்டம் என்னும் ஆறு காண்டங்களை உடையது. இதனைப் பாடியவர் கம்பர்; கி. பி. 12-ஆம் நூற்றாண்டினர்; சோழ நாட்டினர். பிற்காலத்தில் விளங்கிய புலவருள் ஈடும் எடுப்பும் அற்றவர்.

[கும்பகருணன் சிறந்த அறிஞன்; நடுவுநிலை உடையவன். அவன் சீதையைக் கொணர்ந்த தன் தமையனை முன்னரே கடிந்து அறவுரை கூறி உறங்கச் சென்றான். அவன் விழிப்பதற்குள் இராம - இராவணப் போர் தொடங்கிவிட்டது. அதனால் இராவணன் அவனை எழுப்பிப் போர்க் கோலம் பூணச் செய்தான். தன் தமையன் தன் சொல்லைக் கேளாமையால் தனக்கும் பிறர்க்கும் அழிவைத் தேடிவிட்டான் என்பதை எண்ணி வருந்திய கும்பகருணன் மீண்டும் அறவுரை கூறினான்; இராவணன் கேட்கவில்லை. மீண்டும் இறுதியாகச் சில கூறிக் கும்பகருணன் போருக்குச் சென்றான். இவற்றைக் கீழ்வரும் செய்யுட்களால் அறியலாம்.]

### கும்பகருணன் கூற்று

" ஆனதோ வெஞ்சமர்; அலகில் கற்புடைச்
சானகி துயரினம் தவிர்ந்த தில்லையோ ?
வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ ? புகுந்ததோ பொன்றுங் காலமே ? (1)

" கிட்டிய தோசெருக் கிளர்பொற் சீதையைச்
சுட்டிய தோமுனஞ் சொன்ன சொற்களால் ?
திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோ ?இது விதியின் வன்மையே ! (2)

" கல்லலாம் உலகினை, வரம்பு கட்டவுஞ்
சொல்லலாம், பெருவலி இராமன் தோள்களை
வெல்லலாம் என்பதும் சீதை மேனியைப்
புல்லலாம் என்பது போலுமா லைய ! (3)

" தையலை விட்டவன் சரணந் தாழ்ந்துநின்
மையறு தம்பியோ டளவ ளாவுதல்
உய்திறம் ; அன்றெனில், உளது வேறுமோர்
செய்திறம் உண்டது தெளிந்து கோடியால்." (4)

இராவணன் சினம்

" உறுவது தெரியவன் றுன்னைக் கூயது ;
சிறுதொழில் மனிசரைக் கோறிச் சென்றெனக்(கு)
அறிவுடை அமைச்சனீ அல்லை ; அஞ்சினை ;
வெறுவிதுன் வீரம்",என் றிவைவி ளம்பினான் : (5)

" மானுடர் இருவரை வணங்கி, மற்றுமக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்(டு) உய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்கு மேகடன் ;
யானது முடிக்கிலேன் ; எழுதி, போதியால்." (6)

(இங்ஙனம் சினந்து கூறிய இராவணன் தானே போர்செய்யப் புறப் பட்டான்.)

அன்னது கண்டவன் தம்பி யானவன்
பொன்னடி வணங்கி," நீ பொறுத்தி யால் "என
வன்னெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினான் ;
" இன்னமொன் றுரையுள(து):" என்னக் கூறினான். (7)

கும்பகருணன் இறுதி மொழி

" வென்றிவண் வருவனென்(று) உரைக்கி லேன்;விதி
நின்றது ; பிடர்பிடித் துந்த நின்றது ;
பொன்றுவன் ; பொன்றினாற் பொலன்கொள் தோளியை
நன்றென நாயக! விடுதி நன்றரோ. (8)

" இந்திரன் பகைஞனும் இராமன் தம்பிகை
மந்திர வலியினால் மடிதல் வாய்மையால் ;
தந்திரங் காற்றுறு சாம்பர் ; பின்னரும்
மந்திர முணர்ந்துனக் குறுவ தாற்றுவாய். (9)

" என்னைவென் றுளரெனின், இலங்கை காவல !
உன்னைவென் றுயருதல் உண்மை ; ஆதலால்,
பின்னைநின் றெண்ணுதல் பிழை;அப் பெய்வளை
தன்னைநன் களிப்பது தவத்தின் பாலதே. (10)

### கும்பகருணன் விடை பெறல்

“ இற்றைநாள் வரைமுதல் யான்முன் செய்தன
குற்றமும் உளவெனிற் பொறுத்தி ; கொற்றவ !
அற்றதால் முகத்தினில் விழித்தல் ; ஆரிய !
பெற்றெனன் விடை,” எனப் பெயர்ந்து போயினுன்.(11)

### காவலன் கலக்கம்

அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்
செவ்வழி நீரொடுங் குருதி தேக்கின ;
எவ்வழி யோர்களும் இரங்கி ஏங்கினுர் ;
இவ்வழி அவனும்போய் வாயில் எய்தினுன். (12)

### அருஞ்சொற்பொருள்

1. வெஞ்சமர் - கொடியபோர். அலகு இல் - அளவு இல்லாத. சானகி - சனகமன்னன் மகள் ; சீதை. பொன்றும் - அழியும்.

2. கிட்டியதோ - நெருங்கியதோ. திட்டியின் விடம் - திட்டிவிடம் என்னும் பாம்பு ; கண்ணுல் பார்த்துக் கொல்லும் பாம்பு ;

3. கல்லலாம் - தோண்டலாம். மாலைய - தன்மையுடையன.

4. தையலை - சீதையை. சரணம் - கால். உய்திறம் - பிழைக்குந் திறம். கோடியால் - கொள்வாயாக.

5. உறுவது - வந்துசேர்வது. கூயது - கூப்பிட்டது. மனிசர் - மனிதர். கோறி - கொல்லுவாய். வெறுவிது - வீண்.

6. கூன் உடைக் குரங்கு - முதுகு வளைந்த குரங்கு. ஊன் - ஊனம் ; குற்றம். உம்பி - உன்தம்பி. எழுதி - எழுவாய். போதி - போவாய்.

8. பிடர் பிடித்து உந்த - பிடரியைப் பிடித்துத் தள்ள. பொன்றுவன் - இறப்பேன். பொலன் - அழகு.

9. இந்திரன் பகைஞன் - இந்திரஜித்து என்னும் மேகநாதன் ; இராவணனுடைய முதல் மகன். தந்திரம் - அரக்கர் படை.

12. நாட்டம் - கண். குருதி - இரத்தம். ஏங்கினர் - வருந்தினர்.

### கேள்விகள்

1. முதலில் கும்பகருணன் இராவணனை நோக்கி என்ன கூறினுன் ?
2. கும்பகருணன் உரைகளைக் கேட்டு இராவணன் கூறியன யாவை ?
3. இறுதி மொழியாகக் கும்பகருணன் எவற்றைக் கூறினுன் ?
4. கும்பகருணன் இராவணனிடம் என்ன சொல்லி விடைபெற்ருன் ?

### பயிற்சி

1. பின்வருவனவற்றை விளக்கி எழுதுக :—சானகிதுயர், திட்டியின் விடம், ஊனுடைய உம்பி, மந்திரம் உணர்ந்து.

2. இடங்கூறி விளக்குக :—“ அறிவுடை அமைச்சன் நீ அல்லை.” “ பின்னை நின்றெண்ணுதல் பிழை.” “ தந்திரம் காற்றுறு சாம்பர்,” “ யான் முன் செய்த குற்றமும் உளஎனிற் பொறுத்தி.”

# 3. பெரிய புராணம்

## மநுநீதிச் சோழன்

பெரிய புராணம் - செயற்கரிய செய்த பெரியோரைப் பற்றிய புராணம். புராணம் - பழைய வரலாறு. இந்நூல் 63 நாயன்மார் வரலாறுகளை ஏறத்தாழ 4000 செய்யுட்களில் விரித்துரைப்பது; எளிய இனிய செய்யுள் நடை உடையது. துங்கபத்திரையாறு முதல் குமரிவரையுள்ள நாடுகள், ஊர்கள், யாறுகள், சிவஸ்தலங்கள், பலதிறப்பட்ட மக்களுடைய பழக்க வழக்கங்கள் முதலியவற்றைக் குறித்துச் சொல்வதில் இணையற்ற நூல். இதனைச் செய்தவர் கி. பி. 12-ஆம் நூற்றுண்டில் சோழப் பேரரசனுக இருந்த இரண்டாம் குலோத்துங்கனுக்கு முதல் அமைச்சராயிருந்த குன்றத்தூர்ச் சேக்கிழார் என்பவர்; பெரும்புலவர். இவரது இப்பெரு நூல் சைவர்க்கும் தமிழர் அனைவர்க்கும் ஆராய்ச்சியாளர்க்கும் பெருவிருந் தாகும். தன்மகன் ஓட்டிச் சென்ற தேர்க்காலில் தானுக வந்து இறந்த பசுக்கன்றின் உயிருக்காக, அம்மகனைத் தேர்க்காலில் இட்டுத் தானே தேரூர்ந்து கொன்ற மநுநீதிச் சோழன் வரலாறு கீழே தரப்பட்டுள்ளது.

### வீதிவிடங்கன் பிறப்பு

அறம்பொருள் இன்ப மான
 அறநெறி வழாமல் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற
 வையகம் காக்கும் நாளில்
சிறந்தநல் தவத்தால் தேவி
 திருமணி வயிற்று மைந்தன்
பிறந்தனன் உலகம் போற்றப்
 பேரரிக் குருளை அன்னுன். (1)

### மைந்தன் கலைபல கற்றல்

தவமுயன் றரிதில் பெற்ற
 தனியிளங் குமரன் நாளுஞ்
சிவமுயன் றடைந்து தெய்வக்
 கலைபல திருந்த ஓதிக்
கவனவாம் புரவி யானை
 தேர்ப்படைத் தொழில்கள் கற்றுப்
பவமுயன் றதுவும் பேறே
 எனவரும் பண்பில் மிக்கான் (2)

அளவில்தொல் கலைகள் முற்றி
அரும்பெறல் தந்தை மிக்க
உளமகிழ் காதல் கூர
ஓங்கிய குணத்தால் நீடி
இளவர சென்னுந் தன்மை
எய்துதற் கணிய னாகி
வளரிளம் பரிதி போன்று
வாழுநாள் ஒருநாள் மைந்தன், (3)

மைந்தன் தேரிற் செல்லுதல்

திங்கள்வெண் கவிகை மன்னன்
திருவளர் கோயில் நின்று
மங்குல்தோய் மாட வீதி
மன்னிளங் குமரர் சூழக்
கொங்கலர் மாலை தாழ்ந்த
குங்குமக் குவவுத் தோளான்
பொங்கிய தானை சூழத்
தேர்மிசைப் பொலிந்து போந்தான். (4)

[அப்பொழுது ஒரு பசுக்கன்று தேர் உருளையில் அகப்பட்டு இறந்தது. அதுகண்ட மைந்தன் உளம் நடுங்கிக் கீழிறங்கிச் செய்வது அறியாது தவித்தான். அவ்வளவில்,]

அரசன் அறநெறி

தன்னுயிர்க் கன்று வீயத்
தளர்ந்தஆத் தரியா தாகி
முன்நெருப் புயிர்த்து விம்மி
முகத்தினில் கண்ணீர் வார
மன்னுயிர் காக்குஞ் செங்கோல்
மனுவின்பொன் கோயில் வாயில்
பொன்னணி மணியைச் சென்று
கோட்டினால் புடைத்த தன்றே. (5)

[மணியோசை கேட்ட மன்னன் உடனே வெளியில் வந்து பார்த்தான். அப்பொழுது அமைச்சர் நடந்ததை நவின்றனர். அதுகேட்ட அரசன் துடிதுடித்தான். அமைச்சர்கள் மைந்தன் பாவத்தைப் போக்கப் பிராயச் சித்தம் செய்வதே வழக்கு என்றனர். அரசன் சினந்து, அவர்களை நோக்கி,]

" வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ?
இழக்கின்றேன் மைந்தனைஎன் றெல்லீருஞ் சொல்லியஇச்
சழக்கின்று நானிசைந்தால் தருமந்தான் சலியாதோ ?" (6)

" மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ ?" (7)

" என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயஇசைந்தே
அன்னியன்ஓர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால்,
'தொன்மனுநூல் தொடைமனுவால் துடைப்புண்ட தெ'னும்வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர் மந்திரிகாள் வழக்கெ"ன்றான்.(8)

[அமைச்சர்கள் மேலும் பலவாறு கூறியும் கேட்காது,]

மன்னவன்தன் மைந்தனையங் கழைத்தொருமந் திரிதன்னை,
" முன்னிவனை அவ்வீதி முரண்தேர்க்கால் ஊர்க"என,
அன்னவனும் அதுசெய்யா தகன்றுதன்னுர் உயிர்துறப்பத்
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்தான்.(9)

### அரசன் அறநெறி

ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
தருமம்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமம்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன் ;
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான் ! (10)

### இறைவன் காட்சி தருதல்

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் ; வானவர்பூ மழைசொரிந்தார் ;
அண்ணலவன் கண்ணெதிரே அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான்.(11)

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடனெழலும்
இன்னபரி சானன்என் றறிந்திலன்வேந் தனும்;யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ ! (12)

## அருஞ்சொற்பொருள்

1. வழாமல் - தவருமல். புல்லி - பற்றி ; மேற்கொண்டு. மறம் - தீநெறி. கடிந்து - நீக்கி. பேர் அரி குருளை - பெரிய சிங்கக்குட்டி.

2. சிவம் - நன்மை. தெய்வக்கலை - தெய்வத்தை அடைய வழி காட்டும் நூல்கள். கவன வாம் புரவி - வேகத்தோடு தாவுகின்ற குதிரை. பவம் முயன்றதும் - பிறப்படைய முயன்ற முயற்சியும்.

3. தொல் - பழைமை. கூர - மிக. பரிதி - சூரியன்.

4. கவிகை - குடை. கோயில் - அரண்மனை. மங்குல் - மேகம். கொங்கு - பூந்தாது.

5. ஆ - பசு. நெருப்பு உயிர்த்து - நெருப்புப் போலச் சூடாகப் பெருமூச்சு விட்டு. கோடு - கொம்பு. புடைத்தது - அடித்தது.

6. குழக்கன்று - இளங்கன்று. கோ - பசு. சழக்கு - குற்றம். சலித்தல் - வெறுத்தல், அசைதல் என்றும் கொள்ளலாம்.

7. பரிசனம் - அரசாங்க அதிகாரிகள். உயிர் - விலங்கு முதலான உயிர்.

8. தொன்மனுநூல் தொடை - பழைய மனுவினுல் தொகுக்கப்பட்டு வழங்கிவரும் விதி. துடைப்புண்டது - அழிந்தது.

9. தேர்க்கால் - தேர்ச்சக்கரம். மறுகு - வீதி.

10. மருமம் - மார்பு. தேர்ஆழி - தேர்ச்சக்கரம். அருமந்த - அரு மருந்து அன்ன என்பதன் மரூஉமொழி.

11. அளி - கருணை. மண்ணவர் - மண்ணுலகத்து மக்கள். மழ விடை - இளங்காளை. வீதி விடங்கப் பெருமான் - திருவாரூர் இறைவன் பெயர்.

12. யார்க்கும் முன்னவன் - சிவபெருமான். இன்ன பரிசு......வேந் தனும்—அரசன் தான் இன்ன நிலையை அடைந்தோம் என்பதனை அறியாதவன் ஆனுன் ; மிகுந்த மகிழ்ச்சியடைந்தான் என்பது கருத்து.

## கேள்விகள்

1. வீதிவிடங்கன் இளமைப் பருவத்தில் எதைக் கற்ருன் ?

2. கன்று இறந்ததை அறிந்த தாய்ப்பசு என்ன செய்தது ?

3. பிராயச்சித்தம் செய்யச் சொல்லிய அமைச்சர்களை நோக்கி மன்னன் கூறியன யாவை ?

4. மாநிலங்காக்கும் மன்னன் எவ்வாறு நாட்டைப் பாதுகாத்தல் வேண்டும் ?

5. 'அரசாட்சி எளிதன்று ; அரிதே ஆகும்' என்பது எதனுல் புலப் படுகிறது ?

6. வீதிவிடங்கப் பெருமான் காட்சியளித்தபோது நிகழ்ந்தன யாவை ?

### பயிற்சி

1. பொருள் கூறுக :—அரிக்குருளை, புரவி, கூர, அணியன், பரிதி, கவிகை, மங்குல், தானை, கொங்கு, வீய, குழக்கன்று, ஆழி.

2. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—மணி வயிறு, தனி யிளங்குமரன், இளவரசு, குமரர் சூழ, தேர்மிசை, கண்ணீர் வார, மறுகு, அறிந்திலன்.

3. இடங்கூறி விளக்குக :—"கோட்டினுற் புடைத்தது," "கோவுறு நோய் மருந்தாமோ," "தொன்மனுநூல்தொடை மனுவால் துடைப் புண்டது," "முன்னிவனை அவ்வீதி முரண்தேர்க்கால் ஊர்க," "முன்ன வனே முன்னின்ருல் முடியாத பொருள் உளதோ ?"

4. வீதிவிடங்கனை (அரச குமரனை)க் குறிக்கும் தொடர்களை எழுதி, அவற்றின் பொருளையும் வரைக.

5. மநுவேந்தனைக் குறிக்கும் தொடர்களைக் காட்டி, அவற்றின் பொருளை எழுதுக.

6. சோழ வேந்தன் அமைச்சர் கூற்றை மறுத்துப் பேசியவற்றை உங்கள் சொந்த மொழியில் வரைக.

7. சோழவேந்தன் செயல் சரி அல்லது தவறு என்பதைக் காரணங் காட்டி விளக்கி எழுதுக.

8. இவ்வரலாற்றை மநுச் சோழனே நமக்குக் கூறுவது போலக் கூறுக.

9. இவ்வரலாற்றை அரசிளங்குமரன் எழுதுவது போல எழுதிக் காட்டுக.

10. இக்கதை நிகழ்ச்சியை இறந்த அமைச்சன் சொல்வது போல வரைக.

11. அமைச்சர்கட்கும் அரசனுக்கும் நடந்த பேச்சினை உரையாடல் முறையில் எழுதிக் காட்டுக.

12. பிரித்துக் காட்டுக :—இளங்குமரன், தேர்ப்படை, இளவரசு, வெண்கவிகை, கொங்கலர், தன்னுயிர், மன்னுயிர், பொன்னணி, தொன் மனுநூல், அங்கழைத்து.

# IV. புனேந்துரை

கீழ்வரும் பாடல்களைப் பாடியவர் வித்துவான் குழந்தை அவர்கள்; பவானி நாட்டாண்மை உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர். இவர் பத்தாண்டுப் பருவத்திலேயே கவிபாடும் ஆற்றலைப் பெற்றவர். அவ்வாற்றலே இவருடைய தமிழ்ப் புலமைக்குத் தூண்டுகோலாகும். இவருடைய பாடல்கள் செந்தமிழ் நடையாலியன்றவை; படிக்கப் படிக்க இன்பந் தருபவை.

## 1. வேத்தரங்கு

மாவிலிளங் குயில்பாட மயில்கூத் தாட
    மணியாழின் இசைவண்ண வண்டர் பாடப்
பூவைகிளி பின்பாடப் போத்துத் தாளம்
    போடமணிப் புறவுமுழ வதிரச் சுள்ளி
ஓவெனவொத் தூதிடமற் றுயிர்மெய் காண
    ஒளிமுத்த விளக்கேந்தத் திரையு லாவ
மூவரசர் எனவசுணங் கொலுவி ருக்க
    முல்லையொடு மல்லிகைதூ வினதென் காலே. (1)

## 2. வண்டுகளின் செயல்கள்

மல்லிகையின் தாதூதித் தமிழ்வாய் வண்டு
    மங்கலப்பண் பாடியதன் மருங்கே யுள்ள
முல்லையிலே சென்றூத முகைப்பொன் வண்டு
    முத்தமிட அஃதுமெதிர் முத்தம் தந்தே
புல்லுமுழை விளரியிளி தாரம் துத்தம்
    பொருந்துகுரல் கைக்கிளையாம் இசையோர் ஏழும்
ஒல்லும்வகை பாடியெனை உவப்பித் தொய்யென்(று)
    உதடினிக்கப் போயினவோர் புதரி னூடே. (2)

## 3. செக்கர் வானம்

“ இட்டடியின் வழிச்செல்வோர்க் கெதிர தாக
    இருட்கள்வர் போதுமுனே இனிது நீங்கள்
சட்டெனநும் இருப்பிடத்தைச் சார்வீர் ” என்னத்
    தான்சாற்று வதுபோலச் செக்கர் வானம்

ஒட்டியவான் பெருவெளியி னூடே மேற்கில்
ஒளிகாட்டச் செங்கதிரும் உவந்தே யுள்ளம்
வட்டமிடும் மேல்கடலுள் மூழ்கி இந்த
வையமதைக் கைவிட்டு மறைந்த தம்மா ! (3)

## 4. இரவுப் பெண்

செங்கதிரோன் போய்மறையச் செவ்வா னேகத்
திங்களிளம் பிறைநுதலைத் தெரியக் காட்டிக்
கங்குலெனப் புலவர்சொலும் இரவுப் பெண்ணும்
காரிருளுங் குழல்விரித்துக் களிக்கை வீசிப்
பொங்கொளிவிண் மீன்களெனும் முத்துப் பற்கள்
புறந்தோன்ற வேசிரித்துப் போந்தாள் போத
மங்கையவள் புன்னகையால் மயங்கி இந்த
வையகமே ஆழ்துயிலில் வைகிற் றம்மா (4)

### அருஞ்சொற்பொருள்

1. மா - மாமரம். வண்ண - அழகிய. வண்டர் - வண்டு. பூவை - நாகணவாய்ப் பறவை. போத்து - செம்போத்து. புறவு - புரு. சுள்ளி - சிள்வண்டு. அசுணம் - இஃதொரு பறவை ; விலங்கு என்றும் கூறுவர். தென்கால் - தென்றல் காற்று.

2. தமிழ்வாய் - (தேனை உண்டதால்) இனிய வாயையுடைய ; தமிழ் - இனிமை. முகை - மொட்டு. புல்லும் - தழுவும். உழை, இளி, விளரி- தாரம், துத்தம், குரல், கைக்கிளை—என்பன ஏழிசை. உவப்பித்து - மகிழ் வித்து. ஒல்லும் - இயலும்.

4. கங்குல் - இரவு. குழல் - கூந்தல். களி - மகிழ்ச்சி. போத - வர. துயில் - தூக்கம். வைகிற்று - தங்கியது.

### கேள்விகள்

1. அசுணம் கொலுவிருக்கையில் நடந்த நிகழ்ச்சிகள் யாவை ?
2. சோலையில் வண்டுகள் செய்த செயல்கள் யாவை ?
3. செக்கர்வானம் யாது சொல்வதுபோல் தோன்றிற்று ?
4. இரவுப் பெண்ணைப் பற்றி ஆசிரியர் கூறுவது யாது ?

### பயிற்சி

1. நான்கு செய்யுட்களிலும் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகளை 25 வரி கட்குள் எழுதுக.

2. பிரித்துக் காட்டுக :—இளங்குயில், மணிப்புறவு, முழவதிர, ஒத் தூதிட, விளக்கேந்த, திரையுலாவ, மூவரசர், இட்டடி, வழிச்செல்வோர், செங்கதிர், மீன்களெனும், புறந்தோன்ற.

# V. சிறு நூல்கள்

## 1. சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்

சரபேந்திர பூபாலன் - தஞ்சையை ஆண்ட மகாராஷ்டிர மன்னன்; சரபோஜி என்ற பெயரினன்; சிறந்த கலா ரசிகன்; மருத்துவத்திலும் தமிழ் - வடமொழி நூல்களிலும் சிறந்த பற்றுடையவன்; பலவகை நூல்களைத் தனது சரசுவதி மஹாலில் சேர்த்து வைத்தவன்; சென்ற நூற்றாண்டினன். இவனைப் பற்றி இந்நூலைப் பாடிய சிவக்கொழுந்து தேசிகர் கொட்டையூர் என்னும் பாடல் பெற்ற தலத்தினர்; சிறந்த புலவர்; கோவை, உலா, குறவஞ்சி நாடகம் முதலியன பாடியவர்.

குறவஞ்சி - குறப்பெண்; குறப்பெண் தன் மலை முதலியன பாடித் தலைவிக்குக் குறி கூறுவதாகவும், அக்குறத்தியைத் தேடிக்கொண்டு குறவன் வந்து சந்தித்து மகிழ்வதாகவும் நாடக முறையில் செய்யப்படும் செய்யுள் நூல் குறவஞ்சி எனப் பெயர் பெறும். குற்றாலக் குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி முதலிய நூல்கள் இத்தகையன.

**குறத்தி தான் வாழும் மலையைக் கூறுதல்**
**பல்லவி**

குடிசைவைத்து வாழுமலை கூறுவன்பூங் கொடியே!
கோகிலமே! அனப்பெடையே! குலவுமிளம் பிடியே!

**சரணங்கள்**

தங்கமகா மேருவினில் தண்குடிசை தொடுத்தோம்;
சாபமலை என்றுரைத்தார் தாபமொடு விடுத்தோம்;
சங்கரனார் கைலைமலை தனிலுறையச் சென்றோம்;
தவப்பூத கணங்கள்கண்டோஞ் சிவப்பிரீதி என்றோம்;
(குடிசை) (1)

திங்களணி காளத்தி கண்டதனை நயந்தோம்;
'திண்ணன்கண்ணைப் பறித்ததுமுன் இன்னதெ'ன்றார் பயந்தோம்
அங்குலவு குற்றால மலையினுறப் போனோம்;
'அருவியின்மூழ் கிடுவிரெ'ன்றார் நழுவிவர லானோம்.
(குடிசை) (2)

ஏறிவட வேங்கடத்தில் இருக்கவிடம் பார்த்தோம்;
'இன்னதுமால் கொண்டமலை' என்றுரைத்தார் தீர்த்தோம்;
பாரிலுயர் பழனிமலை யினிதெனவே குறித்தோம்;
'இடும்பன்மலை' எனப்புகன்றார்; திடங்கொளதை வெறுத்தோம். (3)

தூறுமுகில் சூழுமொரு தூயமலை தொட்டோம் ;
' தூங்கன்மலை யீங்கிதென்றார் ' ஆங்கதனை விட்டோம் ;
கூறுபுகழ்ச் சேரலன்றன் குவடணைந்தோம் அப்பால்
' கொல்லியிது ' என்றுரைத்தார் ; தள்ளிவந்தோம் இப்பால். (4)

விராலிமலை சோலைமலை ஸ்வாமிமலை அம்மே ;
விளங்குமெங்கள் குலவள்ளிக் குகந்தளித்தோம் அம்மே !
பிரான்மலையுஞ் சிராமலையும் பிறமலையும் அம்மே !
பிறைமுடிமேல் வைத்திருக்கும் பிரான்மலைகள் அம்மே !
(குடிசை) (5)

தராதலம்போற் றிடமேவுந் தஞ்சையிலெந் நாளும்
தங்குசர போஜிமன்னர் சிந்தைமகிழ்ந் தாளும்
புராதனமா மலையாகிப் புகழ்தவத்தோர் முந்தப்
பொருந்திவளர் நேரியெங்கள் சிறந்தமலை அம்மே !
(குடிசை) (6)

நேரிமலை மேற்குடிசை நிலைக்கவைத்தோம் அம்மே !
நீடும்அது எங்கள்குடி தழைக்கவைத்த தம்மே !
தாரகைகள் போலமுத்தந் தயங்குமதில் அம்மே !
சந்தமுறு நேரியெங்கள் சொந்தமலை யம்மே ! (குடிசை) (7)

### அருஞ்சொற்பொருள்

1. கோகிலம் - குயில். அனம் - அன்னம். சாபமலை - (சாபம் பெற்ற மலை) வில்லாக வளைக்கப்பட்ட மலை. பிடி - பெண்யானை. தாபம் - மனத் துன்பம். பூதகணம் - சிவனுடைய படைகள்.

2. திண்ணன் - கண்ணப்ப நாயனார்.

3. மால் - திருமால் (மயக்கம்). இடும்பன் - முருகனுடைய காவல் தெய்வம்.

4. முகில் - மேகம். தூங்கல் மலை - மலையின் பெயர் ; (தூங்குந் தன்மையுடையது). கொல்லி - மலையின் பெயர். (கொல்லுந் தன்மை யுடையது.)

5. விராலிமலை - திருச்சி மாவட்டத்தில் இருப்பது. பிரான்மலை - இராமநாதபுர மாவட்டத்தில் உள்ளது. சிராமலை - திருச்சிராப்பள்ளிமலை. பிரான் - சிவபெருமான்.

6. தராதலம் - பூமி. நேரி - மலையின் பெயர்.

7. தாரகை - நட்சத்திரம். முத்தம் - முத்து. சந்தம் - அழகு.

## 2. தஞ்சைப் பெருவுடையார் உலா

உலா-கடவுள் அல்லது அரசன் அல்லது வள்ளல் உலா வரும்போது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்னும் ஏழு பருவ மாதரும் அவனைக் கண்டு அன்பு கொண்டதாகச் செய்யப்படும் பிரபந்தம். தஞ்சைப் பெருவுடையார் - தஞ்சாவூர்ப் பெரிய கோவிலில் உள்ள சிவபெருமான் பெயர். இவர் உலா வரும் பொழுது பேதைப் பருவமுடைய (5-7 வயதுடைய) பெண் இவருடைய சடையிலுள்ள பிறைத்திங்கள், மழுவாயுதம், மான் என்பனபற்றித் தன் தாயாரைக் கேட்டுத் தெரிந்து, மானை வாங்கித் தருமாறு வேண்டுகிருள். தாய்மார் அம் மான் சாதாரண மான் அன்று என்பதை விளக்கி, வேறு மான் பிடித்துத் தருவதாகக் கூற, பேதை வருந்துகிருள். அவ்வளவில் இறைவர் தேர் அப்பாற் செல்கிறது. இதுவே கீழ்வரும் அடிகளில் கூறப் படும் செய்தியாகும்.

இதனைச் செய்தவர் முற்பகுதியிற் குறிக்கப் பெற்ற சிவக்கொழுந்து தேசிகர்.

### பேதை

* * * —'அஞ்சலென்னே ?

நீடிமரப் பாவை விளையாட நீவருகென்<br>
ருடி நிழலை அழைத்திடுவாள்—கூடித்தாய்ப் (1)

பாலுண் கிலதெனது பாவைமருந் தூட்டுமென்று<br>
சேலுண்கண் அன்னையர்பாற் செப்புவாள்—கோலமுறு (2)

பூவைக்கு மின்னுர்சொல் போதித்தல் கண்டெதிரே<br>
பாவைக்கு தன்சொல் பயிற்றுவாள்—மேவுமிவள் (3)

ஆதிதனை அன்னையர்கள் அஞ்சலிக்க அஞ்சலித்துத்<br>
தாதிவர்பூங் கொன்றையரைத் தான்பார்த்துச்—சோதியணி (4)

மின்னேர் சடாமகுட வெண்பிறையை யென்னிதென்ருள்<br>
மன்னேர் மருவு மதியென்ருர்—பின்னர் (5)

வலங்கையினில் ஓங்கு மழுவையென்னி தென்ருள்<br>
இலங்கி யிடும்பரசி தென்ருர்—நலங்கொளிடம் (6)

தன்னில் வளருமுழை தன்னையிது வென்னென்ருள்<br>
கன்னி யிதுகலைமான் கன்றென்ருர்—இன்னதனை (7)

வாங்கியெனக் கிப்போது வண்பாவை தன்னுடனே
தாங்கிவிளை யாடத் தருகென்றாள்—ஆங்கவரும் (8)

மாங்குயிலே இம்மான் வனமா னினமல்ல
ஓங்கு முனிவரர்கள் ஓமத்தில்—ஆங்கெழுந்து (9)

தேனையுற்ற பூங்கொன்றை வேணிச் சிவபெரு
மானையன்று பாய்வதற்கு வந்ததுகாண்—ஆனநெடு (10)

வன்கண்மை உள்ளதிவர் மாமலர்க்கை போலவே
நின்கை யினிலடங்கி நிற்குமோ—என்குறித்தாய் (11)

வாங்கி அளித்தவுடன் மன்னும் உனையுநின்றன்
பாங்குறுபொற் பாவையையும் பாய்ந்திடுங்காண்–நாங்களினி (12)

வானத் தெழுந்து வருங்கலைமா னைப்பிடித்துத்
தானிற்றை நாளே தருகின்றேம்—தேனேவா (13)

என்ன வெடுத்தார் இவளிருகண் முத்துதிர்த்தாள்
அன்னவரும் இன்சொலா லாற்றினர்—கன்னல்விற் (14)

பஞ்சசரன் ஆதியோர் பாங்குவரத் தஞ்சைச்
செஞ்சடையா னந்தத் தெருவகன்றான். (15)

அருஞ்சொற்பொருள்

1. ஆடி நிழல் - கண்ணாடி நிழல்.

2. பாவை - கிளி. அன்னையர் - செவிலித் தாயர். சேல் உண்கண் - சேல் மீன் போன்ற மையுண்ட கண்.

3. பூவை - நாகணவாய்ப்புள். மின்னார் - தோழிப் பெண்கள்.

4. ஆதி - சிவபெருமான். அஞ்சலித்து - கை குவித்து வணங்கி. தாது + இவர் = தாதிவர் ; தாது பொருந்திய.

5. சடாமகுடம் - சடையாகிய முடி. மதி - சந்திரன்.

6. இலங்கியிடும் - விளங்குகின்ற. பரசு - மழு என்னும் ஒருவகை ஆயுதம்.

7. உழை - மான்.

9. வன மான் இனம் = காட்டு மான் வகை. ஓமம் - யாகம்.

11. வன்கண்மை - கொடுமை.

13. கலைமான் - சந்திரனில் உள்ள மான்.

15. கன்னல் வில் - கரும்பு வில்; (மன்மதனுக்குரியது). பஞ்சசரன் - ஐந்து மலர் அம்புகளையுடைய மன்மதன்.

# 3. பிள்ளைத் தமிழ்

## (1) சேசுநாதர் பிள்ளைத் தமிழ்

சேசுநாதர் - ஏசுநாதர். பிள்ளைத்தமிழ் - கடவுள், அரசன், வள்ளல் இவர்களைப் பிள்ளைப்பருவமுடையவராகப் பாவித்து 100 செய்யுட்களிற் பாடப்படும் பிரபந்தம். இது, (1) ஆண்பால் பிள்ளைத் தமிழ், (2) பெண் பால் பிள்ளைத் தமிழ் என இருவகைப்படும். ஆண்பால் பிள்ளைத் தமிழில் (1) காப்புப் பருவம், (2) செங்கீரைப் பருவம், (3) தாலப் பருவம், (4) சப்பாணிப் பருவம், (5) முத்துப் பருவம், (6) வருகைப் பருவம், (7) அம்புலிப் பருவம், (8) சிற்றிற் பருவம், (9) சிறுபறைப் பருவம், (10) சிறுதேர்ப் பருவம் எனப் பத்துப் பருவங்கள் வரும். பெண்பால் பிள்ளைத் தமிழில் கடைசி மூன்றும் (8) அம்மானைப் பருவம், (9) நீராடற் பருவம், (10) ஊசற் பருவம் என வரும்.

### சப்பாணிப் பருவம்

பிள்ளையைக் கைகொட்டி விளையாடுமாறு வேண்டும் பருவம். சப்பாணி கொட்டுதல் - கைசேர்த்துக் கொட்டுதல். இது குழந்தை பிறந்த ஒன்பதாம் மாத நிகழ்ச்சியாகக் கூறப்படுவது.

திருவளரு மூவுலகுந் தாங்குந் திறக்கையிது ;
    தீதர்வரை கையும்இதுவே ;
சேரஒரு கற்றூணில் கட்டிடு மலர்க்கையிது ;
    தீக்களை தறிக்கவருகை ;
மருவலர்கள் சிலுவைதனை வைக்கவே தாங்கவரு
    வண்ணமுறு கையும்இதுவே ;
வரையின்மீ தேகுரிசில் அறையவரு கையுமிது ;
    மாதாதை தாதையர்க்குப்
பொருவரிய மோட்சக் கபாடந் திறக்கவரு
    பொற்கைஇது ; வெற்றிவாகை
பூணவரு கையுமிது ; புவியுற்ற பாதகரைப்
    புன்னரக கிடுங்கைஇதுவே ;
தருமமுறு புண்ணியர்க் காசிதரு கைகொண்டு
    சப்பாணி கொட்டியருளே ;
சாவியதி பாவிகளை மேவிவரும் ஏசுவே !
    சப்பாணி கொட்டியருளே.

## (2) திருக்குடந்தை

## ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ்

இதனைப் பாடியவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்; திருவாவடுதுறை ஆதீன வித்துவான்; ஏறத்தாழ 15 ஆயிரம் பாடல்களைப் பாடியவர்; சென்ற 19-ஆம் நூற்றாண்டினர்.

### நீராடற்பருவம்

மலிதரு விரைசெய்ய சாந்திகுளை மாதர்பலர்
மண்ணுவினை நிற்காற்றலால்,
மற்றினைய நதிசோணை நதியாகி, வெண்முத்தம்
வண்கமல ராகமாகி,
ஒலிதரு கடிப்புனல் உறப்பாய்ந்த செறுவெலாம்
உறுவெண்ணெல் செந்நெலாகி,
ஔிர்வெண் கரும்பெலாம் செங்கரும் பாகியுடன்
உறைவாணி ஆக்கமாகி,
வலிதரு கடற்குட்டம் உற்றபல் வல்லிகளும்
வண்பவள வல்லியாகி,
மாண்புண்ட ரீகங்கள் கோகநக மாகிமதி
மருவுறும் பருதியாகிப்
பொலிதர வுவப்பூற எங்கள்கோ மளவல்லி!
பொன்னிநீர் ஆடியருளே;
புகரில்மந் திரபீட நிகரில்மங் களமாது!
பொன்னிநீர் ஆடியருளே.

### அருஞ்சொற்பொருள்

1. தீதர் - பாவிகள். வரை - (தம் பாபம் போக்க) விரும்பும். தீக்களை - தீயகளைகள், மனிதர் செய்த பாவங்கள். தறிக்க - நீக்க. மருவலர் - பகைவர். வண்ணம் - அழகு. உறு - பொருந்திய. மாதாதை - பாட்டன். தாதை - தகப்பன். பொருஅரிய - சமானமற்ற. கபாடம் - கதவு. வெற்றிவாகை - வெற்றிற்குரிய வாகைப்பூமாலை. புன்னரகு - புன்மை + நரகு = கீழ்த்தரமான நரகம். மேவி - (இரட்சிப்பதற்காக) பொருந்தி, (விரும்பி.)

2. விரை - வாசனை. செய்ய - சிவந்த. சாந்து - வாசனைப் பொருள்கள் பல கொண்டு அரைத்த கலவை. இருளைமாதர் - தோழியர். மண்ணுவினை - நீராட்டுந் தொழில். இனைய - இத்தகைய. சோணை -

கங்கையிற் கலக்கும் துணையாறு ; அதன் நீர் செந்நிறம் பெற்றிருக்கும் போலும் ! கமலராகம் - இரத்தினக்கல். கடி - மணம். புனல் - நீர். செறு- வயல். உற-பொருந்த. உறு - பொருந்திய. வலிதரு - வலிமை மிகுந்த. குட்டம்-ஆழம். வல்லி - கொடி. புண்டரீகம் - வெண்டாமரை. கோகநகம் - செந்தாமரை. மருவுறும் - பொருந்திய. பருதி - சூரியன். உவப்பு ஊற - மகிழ்ச்சி பொருந்த. பொன்னி - (பொன்னைக் கொழித்துக்கொண்டு வரும்) காவிரியாறு. வாணி - கலைமகள். மங்களாம்பிகை சிவந்த கலவைநீர் ஆடுதலால் திருமகளைப்போலாகின்ருள். ஆக்கம் - செல்வம், ஈண்டுத் திரு மகளை உணர்த்தியது.

## கேள்விகள்

1. மேருமலையிலும் கைலை மலையிலும் குறத்தி குடிசை அமைத்து வாழாமைக்குக் காரணங்கள் எவை ?

2. காளத்தி, குற்ருலம், வேங்கடம், பழனிமலை—இவற்றில் குறத்தி தங்கி வாழாததன் காரணங்கள் எவை ?

3. குறவர் குல வள்ளிக்கு விரும்பிக் கொடுத்த மலைகள் எவை ?

4. நேரி மலையின் சிறப்புக்கள் எவை ?

5. பேதைப் பருவப் பெண் சிவபெருமானைக் கண்டபின் தாயாரைப் பார்த்துக் கேட்ட கேள்விகள் எவை ?

6. சிவபெருமானிடத்து உள்ள மானை வாங்கி அளிக்க மறுத்த தாயார் என்ன காரணங்களைக் கூறினர் ?

7. ஏசுநாதருடைய கைகள் என்ன பெருமையுடையன ?

8. மங்களாம்பிகைக்குத் தோழியர் நீராட்டுதலால் எவை எவ்வாறு நிறம் மாறுபடுகின்றன.

## பயிற்சி

1. குறத்தி கூறிய கூற்றுக்களை நும் சொந்த மொழியில் 20 வரி களில் ஒரு கட்டுரையாக வரைக.

2. “ தஞ்சைப் பெருவுடையார் உலா ”விற் காணப்படும் பழங்காலப் பெண்கள் இயல்புகளைக் குறிப்பிடுக.

3. சேசுநாதர் பிள்ளைத் தமிழிலிருந்து தெரியும் அவர் வரலாற்றுக் குறிப்புக்களை 15 வரிகளுக்குள் எழுதுக.

4. மங்களாம்பிகை பிள்ளைத் தமிழில் குறிப்பிடப்படும் வெண்ணிறப் பொருள்களையும், செந்நிறப் பொருள்களையும் தனியே எடுத்து எழுதுக.

5. பிரித்து எழுதுக :—மூவுலகம், கற்றூண், மலர்க்கை, பொரு வரிய, மோட்சக்கபாடம், பொற்கை, புவியுற்ற, புன்னரகு, புண்ணியர்க் காசி, கொட்டியருள், சாந்திகுளை, செறுவெலாம், வண்பவளம், உவப்பூற, ஆடியருள், செங்கரும்பு.

# VI. பலசுவை

## 1. சீட்டுக்கவி

கீழ்வரும் பாடல் இராமநாதபுரம் சமஸ்தான வித்துவானுக இருந்த அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர், யாழ்ப்பாணத்து வைத்தியலிங்கம் என்னும் செல்வருக்கு எழுதி விடுத்த சீட்டுக்கவி. புலவர் இதனில், (1) கவிச்சுவை அறியார்மீது தமக்குள்ள வெறுப்பு (2) தம் ஆசிரியர்மீது தமக்குள்ள பக்தி, (3) தமக்கு வேண்டுவன என்ப வற்றை அழகுறக் கூறியுள்ளமை காண்க.

* * *

நயமதுரம் அறியாத முழுமடையர் செவியெனும்
நல்லபாம் புப்புற்றிலே
நளினத் திருந்தமிழ்ச் செந்தேன் குழம்பையொரு
நாளுங் கவித்திடாதோன்
நாவலந் தீவினுள் நாடெலாம் புகழ்பெறு
நராதிபர் வணங்குதுல்யன்
நாவலர் குழாம்பல துதிக்கும்அட் டாவதா
னப்பிரபவ சார்வபூமான்
இயலா யிரங்கோடி பிரபந்த முழுதுமோர்
இமைப்பொழு தினிற்பாடுவோன்
இலக்கண சமுத்திரஞ் சோமசுந் தரகுருவென்
ஐயனடி மைக்குமடிமை
ஏகசக் ராதிபதி சரவணப் பெருமாட்க
வீச்சுரன் செங்கையோலை
இந்திரதரு யாழ்ப்பாண மேவிய வைத்தியலிங்
கேந்திரனெதிர் கொண்டு காண்க:
வயமான கையிலே மூக்குள்ள தொன்றுதிரு
மாயன் பிறப்பிலொன்று
வாற்புறமோர் கொம்புந் தலைப்புறமோர் கொம்புமுள
வாகனந் தன்னிலொன்று
வலியார் புரங்களைச் சுடுகின்ற பொருளொன்று
வாரமது தன்னிலொன்று
வரவுடன் வெளுத்தசந் திரனென்று நீயின்ன
வரிசைதந் தருள்புரிவையே.

### அருஞ்சொற்பொருள்

கவியின் சுவை அறியாதோர் செவி பாம்புப் புற்றுக்கு ஒப்பு. ஆத லால் நல்ல பாம்பின் நஞ்சைப் போன்ற கொடுஞ்சொல் கேட்கும் செவி என்பது கருத்து. நளினம் - தாமரை. நராதிபர் - அரசர் ; நரர் + அதிபர். நர + அதிபர் = நராதிபர். துல்யன் - தூய்மையுடையவன். சார்வபூமான்- பேரரசன். இந்திரதரு - இந்திரனுக்குரிய கற்பகத் தருவைப் போன்றவன்; வயமான.........ஒன்று - துதிக்கையிலே மூக்கு உடைய யானை ஒன்று. திருமாயன்.........ஒன்று - குதிரை. வாற்புறம் ஓர் கொம்பும்......ஒன்று - இருபுறமும் தாங்கும் கொம்புகளையுடைய பல்லக்கு. வலியார் புரங்களை... ......ஒன்று - சிவபெருமான் முப்புரங்களை எரித்த சிரிப்பு - நகை ஒன்று. வாரமது தன்னில் ஒன்று - வெள்ளி; வெண்பொற்காசு. வெளுத்த சந்திரன் ஒன்று - வெண்மையான கலை ஒன்று. கலை - சந்திரன் ; ஆடை.

## 2. சிவபிரான் திருமணச் சிறப்பு

கீழ்வரும் பாடல்கள் காஞ்சிப் புராணத்தில் இருப்பவை. சிவபிரான்- பார்வதி திருமணத்தைக் காண எல்லோரும் இமயமலைக்கு வந்துவிட்டதால் தென்திசை நிலம் உயர்ந்துவிட, அதைச் சரிப்படுத்தச் சிவபிரான் அகத்தி யரைத் தெற்கில் செல்லுமாறு பணித்தார். அகத்தியர் இறைவனது திருமணச் சிறப்பினைப் பலவாறு குறிப்பிட்டு, அவற்றைக் காண இயலாத படி தம்மைப் போகச் செய்தல் முறையோ என்று கூறி வருந்தினர். அவர் வருந்திக் கூறிய பாடல்களுட் சில இங்குத் தரப்பட்டுள்ளன.

காஞ்சிப் புராணத்தைப் பாடியவர், திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சிவஞான முனிவர் ; வடமொழி - தென்மொழிகளில் வல்லவர் ; சிறந்த இலக்கணப் புலவர் ; பல செய்யுள் நூல்களை இயற்றியவர் ; 18-ஆம் நூற்றாண்டினர்.

“ பாடுவர் சிலரன்பர் ; பரவுவர் சிலரன்பர் ;
ஆடுவர் சிலரன்பர் ; அழுகுவர் சிலரன்பர் ;
ஓடுவர் சிலரன்பர் ; உவரொடு மகிழாமே,
வாடுற அடியேனைத் தள்ளுதல் மரபேயோ ? (1)

“ ஒருவர்முன் அணிசாந்தம் ஒருவர்தம் முது(கு)அப்ப,
பருவிலை மணியாரம் பட்டுடல் வடுஆக,
நிரல்பட மிடைகுற்றார் தொழுநிலை காணுமே,
பருவர அடியேனைத் தள்ளுதல் பண்பேயோ ? (2)

“ குடையொடு குடைதாக்க, கொடியொடு கொடிதாக்க,
படையொடு படைதாக்க, பண்ணவர் குழுவோடும்

விடைமிசை வருகோலம் விழிஎதிர் காணுமே,
கடைபட அடியேனைத் தள்ளுதல் கவினேயோ ? (3)

" வாரண நிரைசூழ, வாம்பரி நிரைசூழ,
தேரணி நிரைசூழ, தேவர்கள் புடைசூழ,
ஏரணி நகர்சூழும் நினதெழில் காணுமே,
ஆரஞர் உறஎன்னைத் தள்ளுதல் அமைவேயோ ?" (4)

அருஞ்சொற்பொருள்

1. உவர் - மேற்சொல்லப்பட்டவர்.

2. பருவிலை - மிக்க மதிப்புள்ள. நிரல் - வரிசை. மிடைகுற்றார் - நெருங்கியிருப்பவர். பருவர - மனத்துன்பம் அடையும்படி.

3. பண்ணவர் - முனிவர். கோலம் - அழகு.

4. வாரணம் - யானை. நிரை - வரிசை. வாம்பரி - தாவுகின்ற குதிரை. ஏர் அணி - மிக்க அழகு. ஆரஞர்-பொறுத்தற்கரிய துன்பம். உற-அடைய. அமைவு - பொருத்தம்.

## 3. பெண்கள் விளையாட்டு

பண்டைத் தமிழகத்துப் பெண்கள் அம்மானை, ஊசல், பந்து முதலியன ஆடும்பொழுது தங்கள் நாடு, ஊர், தாம் வழிபடு கடவுள் சிறப்புக்களைப் பாடுவது மரபு. இதனைச் சிலப்பதிகாரம் போன்ற பண்டை நூல்களைக் கொண்டு அறியலாம். பிற்காலச் சோழர் காலத்திலும் அப் பழக்கம் இருந்தது என்பதைச் சோழர் காலத்துப் பிரபந்தமாகிய தில்லையுலா தெரிவிக்கின்றது. இச் சிறுநூல் முழுவதும் கிடைக்கவில்லை ; தஞ்சை நாமகள் மண்டபத்து நூல்நிலையத்தில் ஏட்டளவில் உள்ளது. இதனைப் பிழையறக் கரந்தைத் " தமிழ்ப் பொழில் " பத்திரிகையில் பண்டிதர் உலகநாத பிள்ளையவர்கள் பதிப்பித்தார்கள். நடை எளிய இனிய செந் தமிழ் நடையாகும். தில்லை - சிதம்பரம். உலா - சிவபெருமான் உலா வருதல். மங்கைப் பருவமுடைய பெண் மேற்சொல்லியபடி பாடி ஆடிக் கொண்டிருந்தபொழுது, அவ்வழியே தில்லை நடராசப் பெருமான் திருவுலா வந்தான் என்பதைக் கீழ்வரும் அடிகள் உணர்த்துகின்றன.

—ஈசன்

கயிலை மலைபாடிக் காவேரி பாடிப்
பயிலுமொரு சோணாடு பாடி—உயர்தவத்தால்
முக்கட் சிவனுடனே மூவா யிரமறையோர்
ஒக்கக் குடியிருக்கும் ஊர்பாடிக்—கைக்கனலே
கொங்கவிழுங் கொன்றையந்தார் பாடிக் குரகதமும்
வெங்களிறு மான விடைபாடிச்—சங்கரற்கு

மேலாய வகமாம் வெற்றிக் கொடியுடையான்
பாலாழி சேர்ப்பன் பதம்பாடி—மேலோர்
எழுதரிய வேதத் தினமுரசு பாடி
பழுதில் திருவாணை பாடிச்—செழுமுகில்தோய்
அந்தண் பொழிலிடையே அம்மனையும் ஊசலும்
பந்தும் பயிலும் பருவத்து—வந்தான்
உவரோத வேலைவிடம் உண்டிருண்ட கண்டன்
சிவலோகன் தேவாதி தேவன்.

### அருஞ்சொற்பொருள்

சோணுடு - சோழநாடு. மூவாயிர மறையோர் - சிதம்பரத்தில் முற்காலத்தில் சிவன் கோவிலைச் சூழ்ந்துள்ள வீதிகளில் வாழ்ந்த மூவாயிரம் அந்தணர். கொங்கு - தேன். குரகதம் - குதிரை. விடை - காளை. சிவபெருமானுக்கு விடையே குதிரையாகவும் யானையாகவும் உள்ளது. வெற்றிக்கொடி - காளை எழுதப்பெற்ற கொடி. பாலாழி சேர்ப்பன் - உபமன்னியருக்குப் பாற்கடலை வரவழைத்துக் கொடுத்தவன். உவர் ஓதம் வேலை விடம்- உப்பும் ஓதமும் உடைய கடலில் தோன்றிய விடம். அம்மனை - அம்மனையாடுதல் ; பந்துகளை உயர எறிந்து விளையாடுதல். பந்து - பந்தினைக் கீழடித்தல், உதைத்தல், மேலெறிதல் முதலியன செய்து விளையாடும் பெரிய ஆட்டம்.

### கேள்விகள்

1. சரவணப் பெருமாட்கவீச்சுரன் வைத்தியலிங்கேந்திரனிடம் எவற்றைத் தரவேண்டுமெனக் கூறியுள்ளார் ?

2. சரவணப் பெருமாள் கவிராயர் தாம் என்னென்ன பெருமைகளை உடையவர் எனக் குறிப்பிடுகிருர் ?

3. சிவபெருமானுடைய திருமணத்தில் இருந்தால் எவற்றைக் காணல் கூடுமென அகத்தியர் குறிப்பிடுகிருர் ?

4. அம்மனையும், ஊசலும், பந்தும் ஆடும்போது எவற்றைச் சொல்லிப் பாடுவதாக உலா ஆசிரியர் குறிப்பிடுகிருர் ?

### பயிற்சி

1. சீட்டுக்கவி ஆசிரியர் தமிழன்பும், தம் ஆசிரியர்மீது அன்பும் உடையவர் என்பதைப் புலப்படுத்துக.

2. சிவபிரான் திருமணச் சிறப்பு என்ற பகுதியில் அமைந்த செய்யுட் கருத்துக்களைத் திரட்டி எழுதுக.

3. பிரித்து எழுதுக :—நராதிபர், இமைப்பொழுதில், கவீச்சுரன், மணியாரம், நினதெழில், ஆரனுர், சோணுடு, முக்கண், உவரோதம்.

# உரை மாலை

---

## 1. வஞ்சிமா நகர்*

டாக்டர் மா. இராசமாணிக்கனுர், M.A., L.T., M.O.L., Ph.D.

[இவ்வாசிரியர் மதுரை தியாகராசர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர்; பல நூல்களின் ஆசிரியர்; ஆராய்ச்சியாளர்; சொற்பொழிவாளர்.]

1. தமிழ்நூல் ஆராய்ச்சியாளர், கி. பி. முதல் இரண்டு நூற்றுண்டுகளைத் தமிழக வரலாற்றிற் **சங்ககாலம்** என்பர். அக்காலத்தில் தமிழ்நாடு சேர, சோழ, பாண்டியர் என்னும் முப்பெரு வேந்தரால் ஆளப்பட்டுவந்தது. சேரர் ஆண்ட சேரநாடு என்பது, மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் அரபிக் கடலுக்கும் இடைப்பட்டு, வடக்கே ஏறத்தாழ மங்களூரையும், தெற்கே கன்னி முனையையும் எல்லைகளாகப் பெற்றிருந்தது.

2. சேர நாடு கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றுண்டு கட்கு முன்பிருந்தே கடல் வாணிகத்திற் சிறந்திருந்தது. சேரநாடு மலைநாடு. அங்கு மிளகு மிகுதியாக விளைந்தது. காடுகளில் அகில், சந்தனம், தேக்கு, யானைத்தந்தம் என்பன மிகுதியாகக் கிடைத்தன. இவை கிழக்கு நாடுகட்கும் மேற்கு நாடுகட்கும் கப்பல்களில் ஏற்றுமதியாயின; அயல் நாடுகளி லிருந்து கண்ணுடிப் பொருள்கள், இயந்திரப் பொறிகள், வாசனைப் பொருள்கள் முதலியன இறக்குமதியாயின. சேர நாட்டுத் துறைமுக நகரங்களான தொண்டி, முசிறி, நாரா (நறவு), பகாரே (வைகரை) என்பன இக்கடல் வாணிகத்தில் மிகுதியாக ஈடுபட்டிருந்தன.

3. கடல் வாணிகத்தில் சிறந்து விளங்கிய சேர நாட் டிற்கு **வஞ்சிமா நகரம்** என்பது கோநகரமாக இலங்கியது. அது பேரியாற்றங்கரையில் அமைந்திருந்தது. பேரியாற்றுக் குச் சுள்ளி, ஆன்பொருநை என்னும் வேறு பெயர்களும் வழங் கின. வஞ்சிமா நகரம் கோட்டையைத் தன்னகத்தே கொண்ட அக நகரையும், அதற்கு அப்பாற்பட்ட புற நகரையும் கொண் டிருந்தது. புற நகரில் அழகிய பூஞ்சோலைகளும் இயந்திர

---

* இது, சென்னை வானெலி நிலையத்திற் பேசிய பேச்சின் ஒரு பகுதி யாகும்.

வாவிகளும், சைவ வைணவக் கோவில்களும் பௌத்த விகாரமும் சமணப் பள்ளியும் இருந்தன. அங்கு அருந்தவம் மேற்கொண்ட முனிவரும் மன அடக்கம் பெற்ற துறவிகளும் இருந்து இல்வாழ் மக்கட்குச் சமணக் கொள்கைகளைப் புகட்டிவந்தனர். அப் புற நகரில் கிழக்குக் கோட்டைவாயிலை அடுத்திருந்த 'குணவாயிற் கோட்டம்' என்ற சமணத் துறவிகள் வாழ்ந்த கோட்டத்தில் செங்குட்டுவன் தம்பிய ரான இளங்கோவடிகள்-சிலப்பதிகார ஆசிரியர் வாழ்ந்தார். புற நகரின் வேருெரு பக்கத்தில் 'வேள் ஆவிக்கோ மாளிகை' என்ற பெயர்கொண்ட வளமனை ஒன்று இருந்தது. சேர வேந்தர் குடும்பத்தினர் அம்மாளிகையிற் சென்று அவ்வப் பொழுது தங்குவதுண்டு. அப் புறநகரில் வேதவாதி, சைவ வாதி, வைணவ வாதி முதலிய மதவாதிகள் தங்கியிருந்து, தத்தம் சமயக் கொள்கைகளைப் பிரசாரம் செய்துவந்தனர்.

4. **அகழி :** புறநகரை அடுத்து, அகநகரைச் சூழ ஆழமான அகழி இருந்தது. அந்த அகழியில் கராம், இடங்கர் என்னும் முதலை வகைகளும் பலவகை மீன்களும் வாழ்ந்தன. தாமரை, ஆம்பல் முதலிய கொடிவகைகள் இருந்து, தம் மலர்களால் அவ்வகழியை அழகு செய்தன. அந்நகரில் வாழ்ந்த மக்கள் பயன்படுத்திய பலவகை நீர்களும் நிலத்தின் அடியில் அமைக்கப்பட்டிருந்த கழிநீர்ப்பாதை வழியாக வந்து அகழியிற் கலந்து வந்தன. இதனுல் அகழியில் நீர் என்றும் வற்ருதிருந்தது. அகழியை அடுத்து அகநகரின் கோட்டை மதில் வானுற ஓங்கியிருந்தது.

5. **கோட்டை :** மதுரைக் கோட்டை மதில்மீது பலவகைப் பொறிகள் பொருத்தப் பெற்றிருந்தன. மதில்மீது அங்கங்கே காவலர் இருந்து காவல்காக்க அறைகள் இருந்தன. வெள்ளி வெற்பொன்றை நடுவிற் பிளந்தாற் போல வெண்ணிற மதிலின் நடுவில் கோட்டைவாயில் உயர்ந்து அகன்று காணப்பட்டது. அவ்வாயிலின்மீது சேரரது விற்கொடி வானளாவப் பறந்துகொண்டிருந்தது. கோட்டை மதிலுக்கும் மக்கள் வாழ்ந்த தெருக்களுக்கும் இடையில் பசுமைக் காட்சி நல்கிக் கண்ணைக் கவரும் காவற்காடு ஒன்று காணப்பட்டது. கோட்டையைக் காக்கும்

வீரர்கள் அக்காட்டில் தத்தம் போர்க்கருவிகளுடன் காவலிருந்தனர்.

6. தெருக்கள்: காவற்காட்டை அடுத்துக் கோட்டை வாயிலைக் காத்துவந்த காவலர் வீடுகளைக்கொண்ட தெருக்கள் இருந்தன. அவற்றை அடுத்துப் பரதவர், உப்பு விற்பவர், கள் விற்பவர், பிட்டு வாணிகர், அப்பவாணிகர், இறைச்சி விற்பவர், வெற்றிலை விற்பவர், பலவகை வாசனைப் பொருள்களை விற்பவர் வாழும் தெருக்கள் தனித்தனியே இருந்தன. அவற்றை அடுத்து வேட்கோவர், செம்புக்கன்னர், வெண்கலக் கன்னர், பொற்கொல்லர், தச்சர் என்பவர் வாழும் தெருக்கள் இருந்தன. அவற்றுக்கு அப்பால் மண் முதலியவற்றைக் கொண்டு பாவை முதலியவற்றைச் செய்யும் சிற்பத் தொழிலாளரும், ஓவியரும், தோலைக்கொண்டு பல பொருள்கள் செய்பவரும், தையற்காரரும் வாழும் தெருக்கள் காணப்பட்டன. அவற்றை அடுத்துப் பலவகை மாலை கட்டுவோரும், சோதிடரும், பாணரும், வாழ்ந்த தெருக்கள் வளமுற்றுக் காணப்பட்டன. அவற்றிற்கு அப்பால் சங்குகளை அறுப்பவரும், முத்து, பவளம் கோப்பவரும் உறைந்த தெருக்கள் இருந்தன. அவற்றை அடுத்து, வேத்தியல், பொதுவியல் என்னும் இருவகைக் கூத்துகளிலும் பயிற்சி மிகுந்த நாடக மகளிர் வாழ்ந்த தெருக்கள் வளமுற்றுத் திகழ்ந்தன. அவற்றை அடுத்து, எண்வகைக் கூலங்களை வேறுவேறு பகுதியாகப் பிரிக்கப்பெற்ற கூலக் கடைத்தெரு இருந்தது. அதற்கு அப்பால், அரசவையில் நின்று பாடும் மாகதர், இருந்து பாடும் சூதர், பல்வகைப் பாடல்களுக்கும் தாளங்களுக்கும் பொருத்தமாக ஆடும் வைதாளிகர் என்னும் மூவகையினரும் வாழும் தெரு காணப்பட்டது. அடுத்து, பார்ப்பதற்கு அருமையான நுண்ணிய நூலைக்கொண்டு பல நிற ஆடைகளை நெய்யும் நெசவுத்தொழிலாளர் தெருக்களும் இருந்தன. அடுத்து, பொன்னை உரைத்துப் பார்த்து அதன் மாற்றினைக் கூறவல்லார் வாழும் வளமிகுந்த தெரு காணப்பட்டது. அதற்கப்பால், மணிகளை விற்கும் வணிகர் வாழும் வளமுற்ற தெரு, நான்மறைவல்ல அந்தணர் வாழும் தெரு, அரசமரபினர் வாழும் அகன்ற பெருந்தெரு, அமைச்சர்,

தானைத் தலைவர் முதலிய அரசாங்க உயர் அலுவலர் வாழ்ந்த தெருக்கள் என்பன வரிசை வரிசையாக விளங்கின. அவற்றை அடுத்து, புதியனவாகக் கொண்டுவந்த கரிகளையும், பரிகளையும் பழக்கும் யானைப்பாகரும், வாதுவரும் வாழும் அகன்ற தெருக்கள் அமைந்திருந்தன.

7. **அம்பலம் முதலியன :** இத்தெருக்களினிடையில் ஆங்காங்கு அம்பலங்களும், முச்சந்திகளும், நாற்சந்திகளும் இருந்தன. மிக்க உயரத்திலிருந்து கீழே விழும்படி அமைக்கப்பட்ட அருவிகளைப் பெற்ற கட்டுமலைகளும், விழிகட்குப் பசுமையும் மூக்கிற்கு நறுமணமும் ஒருங்கே ஊட்டும் பசிய பூஞ்சோலைகளும், சுவைமிக்க நீரினை உடைய பொய்கைகளும், அன்ன சத்திரங்களும், சமய உண்மைகளை ஓவியங்களைக்கொண்டு மக்களுக்கு உணர்த்தும் அறச்சாலைகளும் அகநகரிடை ஆங்காங்கு இருந்தன.

8. **அரண்மனை :** நகரத்தின் நடுநாயகமாகச் சேர மன்னரது அரண்மனை விளக்கமுற்று இருந்தது. அதன் வாசல் மிக உயர்ந்து காணப்பட்டது. அரண்மனைக்குள் வானுற ஓங்கி, வளம்பெற விளங்கிய மாடமாளிகைகள் மிக்கிருந்தன. அரசமாதேவியர் முதலிய பெண்மணிகள் வாழும் அந்தப்புர மாளிகைகளும், அரசனின் நாளோலக்க மண்டபமும், அரண்மனை வாழ்நர், வழிபாடு இயற்றும் கோவில், நாடக அரங்கு, நறுமணச் சோலைகள் முதலியனவும் பொலிவுற்று விளங்கின.

9. சங்க காலத்துப் புகழ்பெற்று விளங்கின சேரன்—செங்குட்டுவன் காலத்தில் இக்கோநகரம் மிக்க சிறப்புற்று விளங்கியதாகச் சிலப்பதிகாரம் செப்புகிறது. இது மேற்குக் கரையில் இன்றுள்ள பேரியாறு (சுள்ளியாறு) கடலொடு கலக்குமிடத்தில் தெற்கு வடக்காக அமைந்திருந்தது என்றும், பிறகு நாளடைவில் அழிந்துபட்டது என்றும், அவ்விடத்தை அகழ்ந்து பார்த்ததில் பண்டைக்கால நாணயங்களும், வேறு பொருள்களும் கிடைத்தனவென்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

## அருஞ்சொற்பொருள்

இலங்கியது - விளங்கியது. அகநகர் - உள்நகர். வாவி - குளம். விகாரம் - கோவில். பள்ளி - கோவில். குணவாயில் - கிழக்கு வாசல். கோட்டம் — கோயில். வேள் - வேளிர் மரபினர் ; சிற்றரசன். வாதி - வாதம் புரிபவன். ஆம்பல் - அல்லி. பொறி - இயந்திரம். நல்கி - கொடுத்து. வேட்கோவர் - மட்பாண்டத் தொழிலாளர். பாவை - பதுமை. உறைந்த - வசித்த. வேத்தியல் - அரசர்க்கு ஆடும் கூத்து. பொதுவியல் - பொது மக்களுக்காடும் கூத்து. எண்வகைக்கூலம் - நெல், கம்பு, வரகு, தினை, சோளம், சாமை, துவரை, மூங்கிலரிசி. கூலம் - தானியம். நவ மணிகள் - இரத்தினம், புஷ்பராகம், வயிரம், வைடூரியம், மரகதம், மாணிக் கம், நீலம், முத்து, பவளம். தானை - சேனை. கரி - யானை. பரி - குதிரை. வாதுவர் - குதிரைப்பாகர். அம்பலம் - பொது இடம். நாளோலக்க மண்டபம் - கொலு மண்டபம். பொலிவு - விளக்கம். கோநகர் - அரசன் இருக்கத்தக்க தலைநகரம்.

## கேள்விகள்

1. சேரநாட்டிலிருந்து ஏற்றுமதியான பொருள்கள் யாவை?
2. சேரநாட்டின் துறைமுகங்கள் யாவை?
3. புறநகரில் இருந்த கட்டடங்கள் யாவை?
4. புறநகரில் வாழ்ந்தவர்கள் யாவர்?
5. அகழிபற்றி யாது அறிவீர்?
6. 'வெள்ளிவெற்பொன்றை நடுவிற் பிளந்தாற்போல'—இஃது எதனை விளக்கவந்தது?
7. அகநகரில் வாழ்ந்த பலவகை வணிகர் யாவர்?
8. அகநகரில் வாழ்ந்த பலவகைத் தொழிலாளர் யாவர்?
9. சூதர், மாகதர், வைதாளிகர் என்போர் யாவர்?
10. எண்வகைக் கூலங்கள் யாவை?
11. நவமணிகள் எவை?
12. வஞ்சிமாநகரம் எங்கு இருந்ததாக ஆராய்ச்சியாளர் கூறு கின்றனர்?

## பயிற்சி

1. வாக்கியங்களில் பயன்படுத்துக :—தொடர்ச்சி, இடைப்பட்டு, வளமனை, கழிநீர்ப்பாதை, வானளாவ, தனித்தனியே, வளமுற்று, நறு மணம், பொலிவுற்று.

2. அகநகர்—அகழி—கோட்டை—தெருக்கள்—அம்பலம் — அரண் மனை முதலியன : இக்குறிப்புக்களைக் கொண்டு ஒன்றரைப் பக்கத்திற்குள் இப்பாடப்பொருளை ஒரு கட்டுரையாக வரைக.

3. நீங்கள் வாழும் நகர அமைப்பைப்பற்றி ஒன்றரைப்பக்க அளவில் ஒரு கட்டுரை எழுதுக.

# 2. ஜப்பானில் கல்விமுறை

திரு சு. இராமசுவாமி நாயடு அவர்கள்

[இவ்வாசிரியர் சென்னை 'மேயராக'வும் 'ஷெரீப்'பாகவும் இருந்து தொண்டு ஆற்றியவர்; ஜப்பான் முதலிய கீழை நாடுகட்குச் சென்று வந்தவர். ஜப்பானைப்பற்றி இரண்டு நூல்கள் எழுதியுள்ளார். இப்பாடப் பகுதி இவர் எழுதியுள்ள 'ஜப்பானில் சில நாட்கள்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.]

1. **ஜப்பானியர் அனைவரும் கற்றவர் :** ஜப்பான் நாட்டிலே கல்லாதவர் எவருமில்லை. ஜின் ரிக்ஷா இழுத்தோடும் எளியவனும் அங்குக் கற்றவனாகவே இருக்கிறான். அவன் தனக்கு ஓய்வு கிடைக்கும்போது, செய்தித்தாள் படித்து உலகியல் அறிவைப் பெருக்கிக்கொள்கிறான். ஜப்பானியர் கல்வி கற்பதைத் தங்கள் இன்றியமையாக்கடமைகளுள் ஒன்றெனக் கருதுகின்றனர். கல்லாதவரை இழிந்தவராகக் கருதும் மனப்பான்மை அங்கு வளர்ந்து வருகிறது. எனவே ஆண்டில் முதிர்ந்தவரும் கல்லாதவராக இருக்க மனமின்றி எங்ஙனமேனும் எழுதப்படிக்கக் கற்றுக்கொள்கின்றனர். ஒவ்வொரு குடும்பத்தினரும் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பத் தவறுவதில்லை.

2. **ஜப்பானில் கல்வி முறை :** ஜப்பானில் கல்வி முறை விஞ்ஞான அறிவு பெருகவும் பொது அறிவியல் வளரவும் உடலுரம் மட்டுமின்றி உள்ள உரமும் பெருகவும் தக்கவாறு அமைக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய கல்வியைப் பெறுங்காலம் பதினாறு ஆண்டுகள் என ஒதுக்கப்பட்டுள்ளது. இப்பதினாறு ஆண்டிற்கு உரிய கல்வி நான்கு பிரிவுகளாகக் கற்பிக்கப்படுகிறது.

3. **தொடக்கக் கல்வி :** முதற் பிரிவுக் கல்வியை ஆறு ஆண்டுகள் படித்தல் வேண்டும். இது தொடக்கக் கல்வி எனப் பெயர் பெறும். தாய்மொழி, சமூக அறிவியல், கணக்கு, விஞ்ஞானம், இசை, ஓவியம், சிறு கைவேலைகள் (Crafts), கைத்தொழில் (Industry), உடற்பயிற்சி முதலியவை தொடக்கக் கல்வியின் கட்டாய பாடங்களாகக் கற்பிக்கப்படுகின்றன. இக் கல்வி கற்பிக்கும் பள்ளிக்கூடங்கள் இருபதி

ஞயிரம்வரை நாடெங்கும் இருக்கின்றன. இவற்றில் ஜப்பா னியக் குழந்தைகள் அனைவரும் கல்வி பயில்கின்றனர்.

4. கீழ்நிலைக் கல்வி: இரண்டாம் பிரிவுக் கல்வியை மூன்று ஆண்டுகள் படித்தல்வேண்டும். இதுவும் கட்டாயக் கல்வியே. இதற்குக் கீழ்நிலைக் கல்வி என்பது பெயர். இங்கு, தொடக்கக் கல்வி பெற்ற குழந்தைகளின் உள்ள வளர்ச்சியை உணர்ந்து, குழந்தைகளின் திறமை எத்துறையில் மிகுந் துள்ளதோ, அத்துறைக் கல்வி விரிவாக்கப்படுகிறது. கீழ் நிலைக் கல்வி இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒன்று கட்டாயக் கல்வி. மற்றொன்று விருப்பக் கல்வி. தொடக்கக் கல்வியில் படித்தவை அனைத்தையும் விரிவாகக் கற்பிப்பது கட்டாயக் கல்வியாகும். வெளிநாட்டுமொழி—சிறப்பாக ஆங்கிலம் கற்பது, எழுத்தாளராவது, கைத்தொழில் திறமை பெறுவது முதலியவை விருப்பக் கல்வியில் அடங்கும். இக் கீழ்நிலைக் கல்வி கற்பிக்க ஜப்பானில் பதினையாயிரம் கல்வி நிலையங்கள் இருக்கின்றன.

5. மேல்நிலைக் கல்வி: தொடக்கக் கல்வியை ஆறு ஆண்டுகளும், கீழ்நிலைக் கல்வியை மூன்று ஆண்டுகளுமாக ஒன்பது ஆண்டுகள் படித்து முடிக்கும் மாணவர் மேல்நிலைக் கல்வியை மூன்று ஆண்டுகளில் பெறலாம். இக்கல்வியும் இருவகைப்பட்டதே. ஒன்று பல்கலைக் கழகக் கல்விபெறத் தகுதியாக்கிக்கொள்ளுதல்; மற்றொன்று தொழில் துறைக்குத் தகுதியாக்கிக்கொள்ளுதல். ஒன்பதாண்டு படித்து முடித்த மாணவன் பல்கலைக் கழகக் கல்விபெற நாடினால், அதற்கேற்ப அவனுக்கு உயர்தரப் பொதுகல்வி கற்பிக்கப்படுகிறது. தொழிலில் ஈடுபட விரும்புகிறவர்களுக்கு அலுவலகங்களில் பணியாற்றுதற்குரிய முறையில் உயர்தரப் பண்பாடுகள் நிறைந்த பொதுக்கல்வி கற்பிக்கப்படுகிறது. இத்தகைய உயர்நிலைக் கல்வி கற்பிக்க ஜப்பானில் 3210 பள்ளிக்கூடங் கள் இருக்கின்றன.

6. பல்கலைக்கழகக் கல்வி: இங்ஙனம் பன்னி ரண்டு ஆண்டுகள் படித்து மேல்நிலைக் கல்வியை முடித் துக்கொண்ட மாணவரே பல்கலைக்கழகக் கல்வி பெறு தற்குத் தகுதி பெறுகிறார். உயர்ந்த இலக்கியங்கள், சட்டம்,

மருத்துவம், விஞ்ஞானம், பொறியியல் (Engineering), மருந்துகள் செய்தல், இரசாயன அறிவு, காட்டுக்கலை, உழவுத் தொழிற்கலை, விலங்கு மருத்துவம், பொருளாதாரம், வாணிகக்கலை, அரசியல் முதலிய உயர்தரக் கலைகள் அனைத்தும் பல்கலைக் கழகக் கல்வியாகக் கற்பிக்கப்படுகின்றன. மாணவர் தமக்கு விருப்பமான கலையை மேற்கொண்டு அதனை நான்கு ஆண்டுகளில் படித்துப் பட்டம் பெறலாம். இவற்றில் மிகுந்த திறமையுடையவர்க்குப் பேரறிஞர் (டாக்டர்) என்னும் பட்டம் வழங்கப்படுகிறது. பல்கலைக் கழகக் கல்வி பயிற்றுவதற்காக ஜப்பான் முழுவதிலும் அறுநூற்றுக்கு மேற்பட்ட கல்லூரிகள் இருக்கின்றன. ஜப்பானில் ஆண்களும் பெண்களும் கல்வி பயிலுகின்றனர். கல்லூரிப் பருவத்தில் பெண்களுக்கெனத் தனிக் கல்லூரி ஒன்றும் டோக்கியோவில் நிறுவப்பட்டுள்ளது.

7. **பலவகைப் பள்ளிகள்:** பள்ளிக்குச் சென்று படிக்க முடியாத நிலையில் உள்ளவர்களுக்கென்று ஓய்வு நேரத்தில் கல்வி கற்பிக்கும் தனிப் பள்ளிக்கூடங்கள் ஆங்காங்கே நிறுவப்பட்டிருக்கின்றன. இரவு நேரத்தில் மட்டும் படிக்க வசதி உடையவர்களுக்கென்று இரவு பள்ளிக்கூடங்களும் அமைந்துள்ளன. எவ்வகையிலும் வீட்டைவிட்டு வெளிப்பட முடியாத நிலையில் உள்ளவர்கள் வீட்டிலிருந்தவாறு படித்து, அரசாங்கத் தேர்வுக்கு வரக்கூடியவாறு அஞ்சல் வாயிலாகக் கற்பிக்கும் பள்ளிகளும் ஜப்பானில் பல உண்டு. எவரெவருக்கு எவ்வெவ்வாறு கல்வி கற்பிக்க முடியுமோ அவ்வவ்வாறெல்லாம் கல்வி கற்பித்து, அனைவரையும் கற்றவர்களாக ஆக்கவேண்டும் என்பது ஜப்பான் அரசாங்கத்தினரின் பெருநோக்காகும்.

8. கல்வி கற்பதற்கு அங்கு எத்தகைய கட்டுப்பாடும் இல்லை; வயது வரையறையும் இல்லை. அரசாங்கக் கல்வித் திட்டப்படி எங்ஙனமேனும் கற்று அரசாங்கத்தேர்வில் வெற்றி பெறுபவர் அந்தக் கல்விக்குரிய பட்டதாரியாவர். ரிக்ஷா இழுப்பவரும், சுரங்கத்தில் வேலை செய்பவரும் இராப்பகலாக உழைத்துப் பெருங்குடும்பங்களைக் காக்கும் பொறுப்பினை ஏற்றுள்ள பிறரும் புகழ்பெறும் அவாவினால்

படித்துத் தேர்ந்து பட்டங்கள் பெறுகின்றனர். இவ்வகையில் நாட்டு மக்கள் அனைவரும் கற்றறிவதற்கு ஜப்பான் நாட்டில் வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது.

9. தொழிற் கல்வி: ஜப்பானில் அறியாமை அகற்றப் பட்டு அனைவரும் கற்றறிந்தவராக விளங்குவதால், அங்குக் குழந்தைகட்கு ஏட்டுக்கல்வி அளிப்பதுடன் நின்றுவிடாமல் இளமை முதற்கொண்டே தொழிற் கல்வியும் சேர்த்துக் கற்பிக் கின்றனர். பின்னரும் தொழிற் கல்வியைத் தனித்துப் பயிற்றுவிக்கும் தொழிற் கல்வி நிலையங்கள் பல இருக்கின்றன. ஒன்பதாண்டு கல்வி பயின்ற மாணவர்கள் தொழிற் கல்வி நிலையங்களில் சேர்ந்து கல்வி பயிலலாம். எனவே, ஜப்பா னியர் தொழில் துறையில் மிகுந்த முன்னேற்றம் அடைந் திருப்பதற்கு, அவர்கள் பெறும் கல்வி முறையே காரண மாகும். எனவே, சிறிய குண்டூசி முதல் பெரிய போர்க் கப்பல் ஈறாக அனைத்தும் ஜப்பானில் செய்யப்படுகின்றன.

10. ஜப்பானில் பல இரசாயன ஆய்வுக்கூடங்கள் இருக்கின்றன. அவற்றுட் பல, அரசாங்கத்துடன் நேராகத் தொடர்பு கொண்டவையாகவும், சில அரசாங்க ஆதரவு பெற்றவையாகவும் இருக்கின்றன. அவற்றில் மாணவர் பலர் ஆய்வுகள் நடத்தித் தங்கள் நாட்டுத் தொழிலையும் வாணிகத் தையும் பெருக்கிச் செல்வம் கொழிக்கும் துறைகளில் தொண்டு செய்துவருகின்றனர்.

### அருஞ்சொற்பொருள்

ஜின் ரிக்ஷா - ஜப்பானில் உள்ள ஒரு வகை ரிக்ஷா. உடல் உரம் - உடல் வன்மை. உள்ள உரம் - மன வலிமை. ஓவியம் - சித்திரம். உள்ள வளர்ச்சி - மனவளர்ச்சி. அஞ்சல் - தபால். ஆய்வுக்கூடங்கள் - ஆராய்ச்சிக் கூடங்கள். ஆய்வு - ஆராய்ச்சி.

### கேள்விகள்

1. ஜப்பானில் அனைவரும் கற்றவராதற்குக் காரணம் யாது?
2. ஜப்பானில் கல்வி முறை எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது?
3. தொடக்கக் கல்வியாக எவை கற்பிக்கப்படுகின்றன?
4. கீழ்நிலைக் கல்வியில் எவை கட்டாயக் கல்வி? எவை விருப்பக் கல்வியாகும்?

5. மேல்நிலைக் கல்வியின் இரு வகைகள் எவை?

6. பல்கலைக் கழகக் கல்வியாக எவை கற்பிக்கப்படுகின்றன ?

7. ஜப்பானில் மக்கள் அனைவரும் கற்றறிவதற்கு அளிக்கப்பட்டிருக்கின்ற வாய்ப்புகள் எவை ?

8. ஜப்பானியர் தொழில் துறையில் மிகுந்த முன்னேற்றம் பெற்றிருப்பதற்குக் காரணங்கள் எவை ?

## பயிற்சி

1. சிறு குறிப்பு வரைக :—கட்டாய பாடம், விருப்ப பாடம், புகழ் பெறும் அவா, அரசாங்கத்தேர்வு, கீழ்நிலைக் கல்வி, ஆய்வுக் கூடம்.

2. பிரித்துக் காட்டுக :—இழுத்தோடும், அமையாக்கடமை, மனமின்றி, பெருங்காலம், அறிவியல், உடற்பயிற்சி, ஒன்பதாண்டு, அலுவலகம், தகுதியாக்கி, திறமையுடையவர், அரசாங்கத்தேர்வு, எவ்வகை, அவ்வாறெல்லாம்.

3. சேர்த்து எழுதுக :—கல்விக்கு + உரிய, திட்டம் + படி, இரா + பகல், ஏற்று + உள்ள, தனி + பள்ளி, ஆறு + நூறு, நூறு + கு, பல்கலை + கழகம், பொறி + இயல், கீழ்நிலை + கல்வி, எ + துறை, என + பெயர், கற்று + அறிந்தவர்.

4. வாக்கியங்களிற் பயன்படுத்துக :—முதற் கொண்டே, கல்வி முறை, முன்னேற்றம், ஆய்வுக் கூடம், தொடர்பு, ஆதரவு, கொதிக்கும், இங்ஙனம், விரிவாக்க, அலுவலகம், பண்பாடு, உயர்நிலை, எத்தகைய, வரையறை.

5. எதிர்ச்சொல் கூறுக :—வசதி, கூடியவாறு, வெளிப்பட, இன்சொல், மனமின்றி, பொது, தக்கவாறு, தொடக்கக் கல்வி, கட்டாய பாடம், கீழ்நிலை, விரும்புகிறவர், பெறுகிறார், உயர்ந்த நூல், பொறுப்பு.

6. இப் பாடப் பொருளைத் தக்க குறிப்புக்களைத் தந்து, ஒன்றரைப் பக்கத்தின் மிகாமல் ஒரு கட்டுரையாக எழுதுக.

7. நம் நாட்டின் கல்வி நிலயங்களின் பிரிவுகளையும் கற்பிக்கப்படும் கலைகளையும் குறிப்பிட்டு 25 வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

8. நம் நாட்டில் அனைவரையும் கற்றவராகச் செய்வதற்குச் செய்ய வேண்டுவனவற்றைக் குறிப்பிட்டு ஒரு சிறு கட்டுரை வரைக.

# 3. மாதரி வீட்டில் கோவலனும் கண்ணகியும்

டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள், M. A., M. O. L., Ph. D.

[இவ்வாசிரியர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர்; பல நூல்களின் ஆசிரியர்; சிறந்த ஆராய்ச்சியாளர்; இனிய - எளிய நடையில் சொற்பொழிவாற்றுபவர். இப்பாடப் பகுதி இவர் எழுதியுள்ள "கண்ணகி" என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.]

[கதைத் தொடர்பு: கோவலன் மாதவி என்னும் நாடகக் கணிகை மீது காதல்கொண்டு, தன் மனைவியான கண்ணகியைத் துறந்து, மாதவியுடன் வாழ்ந்து, தன் பொருளை இழந்தான்; அவளை விட்டுப் பிரிந்து வந்து, பின் மனைவியின் காற்சிலம்புகளில் ஒன்றை விற்று வரும் பொருளை முதலாகக் கொண்டு மதுரையில் வாணிகம் செய்து பிழைக்க விரும்பினுன்; கற்பரசியாகிய கண்ணகியும் அவன் விருப்பத்திற்கிசைந்தாள். இருவரும் எவருக்குந் தெரிவியாமல் பூம்புகாரை விட்டு மதுரை நோக்கி நடந்தனர். சமணப் பெண் துறவியாரான கவுந்தியடிகள் துணையுடன் மதுரைப் புறஞ்சேரியை அடைந்தனர். கவுந்தியடிகள் கோவலனை நோக்கி, "இவ்விடம் துறவிகட்கே உரியது. நீ நகருள் வணிகரிடம் உன்னை இன்னவன் என்று தெரிவித்தால் போதும். அவர்கள் உன்னை வரவேற்பர். கதிரவன் மறைவதற்குள் நீங்கள் இவ்விடத்தை விட்டுச் சென்றுவிடுக," என்றனர்.]

1. **அடைக்கலம்:** அப்பொழுது அங்குள்ள ஒரு தெய்வத்திற்குப் பால் படைத்துத் திரும்பும் ஆயர் மகள் மாதரி என்பவள் கவுந்தியடிகளைக் கண்டு அடிவணங்கி நின்ருள். அவளைக் கண்டதும் அந்தத் துறவியார்க்குக் கண்ணகியைக் காக்கவல்ல நற்பண்பு உடையவள் அவள் என்ற எண்ணம் எழுந்தது. பசுக்களைக் காத்துப் பால் கறந்து வாழும் ஆயர் வாழ்க்கை தீங்கற்ற வாழ்க்கை என்றும், மாதரி முதியவள் தீதற்றவள் நல்லவள் எளியவள் என்றும், கண்ணகியைச் சிலவேளை இருக்கச் செய்வதற்கு ஏற்ற இடம் என்றும் அவர் எண்ணினுர். உடனே அவர் அவளைப் பார்த்து, "மாதரி, நான் சொல்வது ஒன்று கேள். இந்தக் கண்ணகியென்னும் மங்கை ,உயர்ந்த குடும்பத்தைச் சார்ந்தவள். இவளுடைய மாமனுரின் பெயரைக்,.கேட்டால் இந்த நகரத்து வாணிகர் பெரும் பொருள் பெற்றவர்போல் மகிழ்ந்து வரவேற்று விருந்தோம்புவர். அத்தகைய பெருஞ்செல்வரின் வீட்டுக்குச் செல்

லும் வரைக்கும் இவளை உனக்கு அடைக்கலமாகத் தருகிறேன். இவளை நீராட்டி, கண்ணுக்கு மைதீட்டி, கூந்தல் வாரி, மலர் அணிந்து, தூய ஆடை உடுத்து, ஆயமும் காவலும் தாயும் எல்லாம் நீயே ஆகி இவளைக் காத்திடுவாயாக. என்னோடு வழி நடந்துவந்த இந்த இளங்கொடியைப் பற்றிச் சொல்ல வேண்டுமா ? இவளுடைய அழகிய மெல்லடிகளை இதுவரையில் நிலமகள் அறிந்ததில்லை. இத்தகையவள் இந்தக் கடு வழி எல்லாம் நடந்துவந்தாள் ; எவ்வளவு துயருற்று வருந்தியிருப்பாள் ! வெயிலும் எவ்வளவு கடுமையாக இருந்தது ! ஆயினும் தன் காதலனுக்காகத் துயருற்று நடுங்கி நாவும் உலர்ந்து வாடினாளே அல்லாமல் தன் துயரத்தைப் பொருட்படுத்தாமல் வந்தாள். இவ்வளவு உயர்ந்த பண்பு உடையவள் இவள். மகளிர்க்கு இன்றியமையாத கற்புக் கடமை பூண்ட இவளே தெய்வம். வேறு சிறந்த தெய்வத்தை யாம் கண்டதில்லை. பத்தினிப் பெண்கள் இருந்த நாட்டில் மழை பொய்க்காது, வளங்குன்றாது, அரசு கெடாது என்னும் நன்மொழி உனக்குத் தெரியாதோ ? அன்றியும் தவத்தோர் தரும் அடைக்கலம் சிறந்த பயன் தருவதாகும். ஆதலின் இவளை உன்னுடன் அழைத்துச் செல், நீட்டித்து இராதே,'' என்று கூறி மகிழ்ந்தார்.

2. கதிரவன் மேற்கே மறையும் வேளை அது. கன்றைத் தேடித் திரும்பும் பசுக்களின் குரல் கேட்டது. ஆயரும் ஆய்ச்சியரும் சூழ்ந்துவர, கொடி ஆடும் மதில்வாயிலைக் கடந்து கண்ணகியுடனும் கோவலனுடனும் மாதரி தன் வீட்டை நோக்கிச் சென்றாள் ; கண்ணகியை அடைக்கலமாகப் பெற்ற பெருமகிழ்ச்சியோடு வீட்டை அடைந்தாள்.

3. **அன்பு வாழ்க்கை :** மாதரி செம்மண் பூசி அழகிய பந்தலும் அமைந்துள்ள சிறிய வீட்டில் கண்ணகியையும் கோவலனையும் இருக்கச் செய்தாள் ; ஆய்ச்சியர் சிலரோடு கூடிக் கண்ணகிக்கு நீராட்டினாள் ; தன் மகள் ஐயை என்பவளை அறிமுகப்படுத்தி, '' இவள் நீங்கள் இட்ட வேலையைச் செய்வாள். உங்களுடன் இருப்பாள். நீங்கள் கவலை இல்லாமல் இங்கே இருக்கலாம். தவம் நிறைந்த அந்த அம்மையார் கவுந்தியடிகள் உங்கள் வழித்துயரை நீக்கித் தீங்கற்ற நல்ல

இடத்தில் சேர்த்தினர்; இனி உன் கணவராகிய இவர்க்குத் துன்பம் உண்டோ? இவர் நோன்பு உடையவர். ஆதலின் அதற்கு ஏற்பச் சமையல் செய்யவேண்டும்,'' என்றாள்.

4. உடனே சமைப்பதற்குரிய கலங்கள் வந்தன. பலாக் காய், வெள்ளரிக்காய், மாதுளம் பிஞ்சு, மாம்பழம், வாழைப் பழம், செந்நெல்லரிசி, பால், நெய் எல்லாம் கண்ணகி கொடுக் கப் பெற்றாள். பலவகைக் காய்களையும் கண்ணகி அரிந்தாள். அவளுடைய மெல்லிய விரல்கள் சிவந்தன. வைக்கோலால் அடுப்புப் பற்றவைத்த ஐயையுடன் சேர்ந்து தன் சமையல் திறனைக்கொண்டு கணவனுக்குரியவற்றைச் சமைத்து முடித் தாள். பனையோலையால் அழகுறப் பின்னிய தடுக்கு ஒன்றைத் தவிசாக இட்டுக் கணவனை உட்காரச் செய்தாள். தன் மலர்க் கையால் கணவனுடைய பாதங்களைக் கழுவித் தரையில் தண்ணீர் தெளித்து மெழுகினாள். குலை ஈனாத குமரி வாழை யின் குருத்தை விரித்து உணவு படைத்தாள். "உணவு உண்ணுங்கள்'' என விருப்புடன் வேண்டி உண்ணச் செய் தாள். முறைப்படி உணவு முடிந்தது. அன்புமிக்க அந்தக் காட்சியை மாதரியும் ஐயையும் கண்டு,

> "ஆயர் பாடியின் அசோதைபெற் றெடுத்த
> பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
> நல்லமு துண்ணும் நம்பி; ஈங்குப்
> பல்வளைத் தோளியும் பண்டுநம் குலத்துத்
> தொழுனை ஆற்றினுள் தூமணி வண்ணனை
> விழுமம் தீர்த்த விளக்குக் கொல்என''
>
> (சிலப். கொலைக். 46-51.)

வியந்து பாராட்டினர்.

5. **காதலன் கனிவு**: உண்டு மகிழ்ந்த காதலனுக்குக் கண்ணகி வெற்றிலையும் பாக்கும் கொணர்ந்து தந்தாள். அவளுடைய அன்பையும் அரிய ஒழுக்கத்தையும் கண்ட கோவலன் அப்போது மனங்கசிந்து உருகினான்; கண் ணகியை வருமாறு அழைத்து, "கல் நிறைந்த இந்த கடுவழியில் நீ என்னுடன் வந்ததை அறிந்து என் பெற்றோர் மிக வருந்தியிருப்பார்கள்; தன் மருமகளால் கொடிய காட்டு வழியில்நடந்து செல்ல எவ்வாறுமுடிந்திருக்கும் என்று கலங்கி யிருப்பார்கள். எனக்கோ நினைக்கவும் துன்பமாக இருக்

கிறது. இது மாயமோ? வல்வினையோ? என் உள்ளம் கலங்கு கிறது. எனக்கு ஒன்றும் தெரியவில்லை. பயனற்றவர்களோடு, ஒழுக்கமற்றவரோடு, வீண் பேச்சுக் கூட்டத்தில் புகுந்து சிரித்துக் காலம் போக்கினேன். கடமையை மறந்தேன். மெய்ப்பொருள் கண்டவரின் நல்லொழுக்கத்தைக் கைவிட் டேன். எனக்கும் நல்வழி உண்டோ? பெற்ற தாய் தந்தை யரின் ஏவலும் தவறினேன். அறிவுடைய வாழ்க்கைத் துணைவியாய் வாய்த்த உனக்கும் சிறுமை செய்தேன். குற்றத்தைச் சிறிதும் எண்ணிப் பார்க்காமல் மதுரை நகர்க்குப் புறப்படு என்றேன். நீயும் உடனே புறப்பட்டு வந்தாய். என்ன செய்தாய்?'' என்று வருந்தினான்.

6. காதலனுடைய கனிவுரையைக் கேட்ட கண்ணகி, ''அறவோர்க்கு அளித்தல், அந்தணர் ஓம்பல், துறவோர்க்கு எதிர்தல், விருந்து எதிர்கொள்ளுதல் ஆகிய நன்மைகளை இழந்த நிலையில் நான் இருந்தேன். அவ்வாறு இருந்த என்னை உம் தாயும் தந்தையும் அன்பு நெஞ்சம் கொண்டு அருள்மொழி கலந்து பாராட்டி என் துயரத்தைப் போக்க முயன்றனர். அவர்கள் எதிரே தோன்றுதவாறு என் துன்பத்தையும் துயரத்தையும் என் உள்ளத்தே ஒளித்து அடக்கினேன். புன்முறுவல் கொண்டு நின்றேன். உள்ளத்தே ஒளித்த நோயும் துன்பமும் சொல்வதுபோல் என் முறுவல் பொய்ப்பட்டுத் தோன்றியது. அந்தப் பொய் முறுவலைக் கண்ட அவர்களின் நெஞ்சம் வருந்தியது. இவ்வாறு பெற்றோர் உள்ளம் வருந்துமாறு தகாத ஒழுக்கம் மேற்கொண்டிருந்தீர். யான் சிறிதும் மாறுத உள்ளத்துடன் வாழ்ந்திருந்தேன். ஆகையினால் 'புறப்படு' என்றதும் புறப் பட்டு உடன் வந்தேன்'', என்றாள்.

7. இதைக்கேட்ட கோவலன் மேலும் கசிந்துருகினான். ''குடும்பச் சுற்றத்தாரையும் குற்றேவலாளரையும் அடியவரை யும் ஆயத்தாரையும் விட்டுப் பிரிந்து நீ தனியே வந்தாய்; நாணமும் மடமும் நல்லோர் ஏத்துதலும் கற்புமே பெருந் துணையாகக்கொண்டு என்னுடன் வந்தாய்; என்துயர் களைந்தாய். உன்கால் சிலம்புகளில் ஒன்றை எடுத்துக் கொண்டுபோய் விற்று வருவேன். அதுவரையில் நீ வருந்

தாமலிரு,'' என்று சொல்லி, அவளை அன்புடன் தழுவிப் பக்கத்துணை இல்லாத அவளுடைய தனிமையைக் கண்டு உள்ளம் வெதும்பினன். அப்போது கண்களில் கலங்கி எழுந்த கண்ணீரை அவள் காணுதவாறு மறைத்து, ஆயர் வீட்டை விட்டு நீங்கி வெளியே போனன்.

### அருஞ்சொற்பொருள்

ஆயர் - இடையர். நற்பண்பு - நற்குணம். முதியவள் - வயது முதிர்ந்தவள். விருந்தோம்புவர் - விருந்து அளித்து உபசரிப்பர். ஆயம் - தோழிப் பெண்கள் கூட்டம். மெல்லடிகளை......அறிந்ததில்லை - தரையிற் கால்படாத செல்வ வாழ்வு உடையவள். மழை பொய்க்காது - மழைபெய்தல் தவருது. நீட்டித்து - நேரம் செல்லத் தாமதித்து. ஆய்ச்சியர் - இடைப் பெண்கள். தொழுனை ஆறு - யமுனை ஆறு. விளக்கு - நப்பின்னைப் பிராட்டியார். சிறுமை - குற்றம். கனிவு + உரை = கனிவுரை = மனங் கனிந்த அன்பு உரை.

### கேள்விகள்

1. மாதரியைக் கண்டதும் கவுந்தியடிகள் என்ன கருதினர் ?
2. கவுந்தியடிகள் மாதரியிடம் கூறின யாவை ?
3. மாதரி கண்ணகிக்குச் செய்த உதவிகள் எவை ?
4. கண்ணகி, மாதரி வீட்டில் தன் கணவனுக்கு எவ்வாறு உணவு படைத்தாள் ?
5. உணவு உண்டு மகிழ்ந்த கோவலன் கண்ணகியை அழைத்து என்ன கூறினன் ?
6. காதலனுடைய கனிவுரையைக் கேட்ட கண்ணகி கூறியன யாவை ?
7. முடிவில் கோவலன் கண்ணகியிடம் எவற்றைக் கூறி வெளியிற் சென்றன் ?

### பயிற்சி

1. இடையர் சேரியில் ஒரு நாள் மாலைக் காலத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளை 15 வரிகளில் ஒரு கட்டுரையாக வரைக.
2. வாக்கியங்களிற் பயன்படுத்துக :—கடமையை மறந்த கணவன், செம்மண் பூசி, வளங்குன்றுது, புன்முறுவல், குமரிவாழை.
3. சிறுகுறிப்பு வரைக :—அடக்கலம், மெல்லடி நிலமகள் அறிந்ததில்லை, பொய்முறுவல், விருந்து எதிர்கொள்ளுதல்.

# 4. தமிழன் கண்ட மலேயா

## (கடிதம்)

திரு. அ. மு. பரமசிவானந்தம், M. A., M. Litt.

[இவ்வாசிரியர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த் துணைப் பேராசிரியராயிருப்பவர்; நூலாசிரியர்; சொற்பொழிவாளர். இக்கடிதம் இவர் எழுதியுள்ள "தமிழன் கண்ட மலேயா" என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.]

மலாக்கா,
31—5—'48.

அன்பின் அரசி!

1. நான் இன்னும் மலாக்காவில்தான் தங்கியிருக்கிறேன்; நாளைவரையில் இங்கேதான் இருப்பேன். மலாக்காதான் இந்நாட்டின் மிகப் பழைய ஊர். போர்த்துகீசியர் 1511-இல் போர் மூலமே இங்குள்ள சுல்தானை விரட்டி மலாக்காவில் குடியேறினர்.****

2. அவர்கள் வாணிகத்துறையில் வந்தபோது கிறிஸ்து சமயத்தைப் பரப்பப் பாதிரிமார் பலர் உடன்வந்தனர். அவருள் ஒருவர் 'சேவியர்' என்னும் செம்மலார். அவர் தம் அன்புச் சமயத்தைப் பரப்ப வந்த இடத்திலே பரனடி சேர்ந்தார்.****

3. அன்புச் செல்வி! அவரை மூடிவைத்திருந்த கல்லறையின் பக்கலில் நின்றுகொண்டு, அவரைப் புதைத்துவைத்த அந்தத் திறந்த பள்ளத்தை நோக்கும்போது அப்படியே சிறு துளிக் கண்ணீர் புறப்பட்டது. அருகிலே இருவர் இருந்தனர். இல்லாவிட்டால் 'ஒ' வென்று கதறி அழுதிருப்பேன். தந்நலம் மறந்து, செல்வமும் சீரும் மறந்து, நாடும் பிறவும் மறந்து, ஆண்டவன் பணியே அன்புப் பணியெனப் பல நாடு போந்து அன்புச் சமயத்தைப் பரப்பிய அண்ணலார் மறைந்த இடம் கண்டால் கண்ணீர் உகுக்காது என் செய்வது! உலகம் உய்யத் தன் குருதி சிந்திச் சிலுவை ஏறிய செம்மல் காட்டிய நெறியைப் பேச்சளவில் அல்லாது செயலளவில் சிறக்கக் காட்டிய 'சேவியர்' நிலை நினைத்தேன்; தமிழ் நாட்டில் இன்று அவர்தம் திருப்பெயரால் பல

கல்லூரிகளும் பள்ளிகளும் ஆக்கப்பட்டிருப்பதை எண்ணி மகிழ்ந்தேன்.

4. நீ சேவியர் ஒருவரைப்பற்றிச் சிறிது அறிந்தாய்; இது போன்று சிறந்த சமயத்தை வளர்க்க நாடு விட்டு, மக்களை விட்டு, உலகின் பல பாகங்களுக்கும் சென்ற அறிஞர் பலர் என்பதை அறிவாய். அவர்களுள் கால்டுவெல்லும் போப்பும் தமிழ் நாட்டில் கிறிஸ்து சமயம் பரப்ப வந்தவருள் தலை சிறந்தவர்கள். இருவரும் தமிழை நன்கு பயின்றவர்கள். இறக்கும் காலத்துத் 'தமிழ் மாணவன் என்ற உணர்வோடு' இறந்தார் போப்பையர். கால்டுவெல் ஒப்பிலக்கணமே, இன்றைய திராவிடன் தனது மொழி உலகிடை உயர்ந்தது என்று கூறிக்கொள்ளக் காரணமாக அமைந்தது. இப்படிக் கடந்த நான்கைந்து நூற்றுண்டுகளாக இயேசு சமயம் பரப்ப வந்து செல்லும் நல்லவர், நாட்டிற் பலர். இன்றும் எல்லா நாட்டிலும் அவர்கள் வந்து சமயப்பணி செய்கின்றனர்.****

5. மலாக்காவிற் சொற்பொழிவு நடந்த பிறகு நாங்கள் நேரே கோலாலம்பூருக்குப் புறப்பட்டோம். உணவுகொண்டு, ஓய்வுபெற்றுப் பிறகு மாலை 4-மணிக்குப் புறப்பட ஏற்பாடாகி இருந்தது. கார் மிக விரைவாகச் 'சிரம்பான்' நோக்கிச் சென்றது. அதன் வேகத்துக்கு ஈடாக எனது உணர்ச்சி அலையும் மிக்க வேகமாகப் பறந்துகொண்டிருந்தது.

6. **மலேயாவின் பழங்குடிகள் :** நான் நகரைவிட்டு மறுபடியும் சோலைகள் ஊடே புகுந்தேன். எங்கும் பசுமை தான் ; உயர்ந்த மரங்கள் ; மரங்களில் பெரும்பாலன ரப்பரும் தென்னையுமேயாகும். சிற்சில இடங்களில் நெற்பயிர் விளைவதையும் கண்டேன். எந்தப் பயிருக்கும் தண்ணீர் பாய்ச்ச வேண்டும் என்ற தேவையே அங்கு இல்லை. இயற்கையன்னை வான்வழி நீர்ப்பெருக்கை நல்கிக்கொண்டே இருக்கிறுள். வழி நெடுகப் பசுஞ்சோலைகளுக்கு இடையே சிறு வீடுகளும், சிற்றூர்களும் காணப்பட்டன. உடன்வந்த செட்டியார் அவர்கள் அவ்வியற்கையின் சிறப்பை எல்லாம் விளக்கிக் கொண்டே இருந்தார்கள். சிறு சிறு தனிக் குடில்களில் வாழ்கின்றவர்களெல்லாம் இந்நாட்டு முதற்குடிகள் என்றும், அவர்கள் மலாய்க்காரர்கள் என்றும் சொன்னுர்கள் ; மற்றும்

மலாய்க்காரர்கள் 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற மேன்மைக் கருத்தை வாழ்விடைக் கொண்டவர்கள் என்றும் கூறினர்கள். அவர்கள் பெரும்பொருள் சேர்த்து வைக்கவேண்டும் என்று எண்ணுதவர்கள். வாழ்வின் தேவைக்குச் சிறு குடிலும், சிற்றுணவும், போதுமான உடையுமே அவர்கள் விரும்புவன; உழைப்பின் பயனல் சிறிது பொருள் பெற்றதும், அதை ஓய்வில் வைத்துக்கொண்டு காலம் கழிப்பர். அவர்கள் பெரும் மாளிகை வாழ்வை விரும்பார். மக்கள் பலர் உணவின்றி வாட, உயர்ந்த குபேர வாழ்வுக்கு வழிகோலும் சுயநலம் அவர்களுக்குக் கிடையாது. அவர்கள் தனித்த சோலைகளில், பிற நாட்டாரது தொடர்பு கொள்ளாது, தனியே வாழ்பவர்கள். சீன மக்கள் தம் இனப் பெருக்கிற்கேற்ப அங்கங்கே புதுப்புது ஊர் கண்டு குடியேறுகிறுர்கள். அப்படி ஒரு சிற்றூர் அருகில் உண்டாவதைக் கண்டால், மலாய் மக்கள் அவர்களை வெறுக்காது, அவர்களோடு வாழவும் விரும்பாது, தாங்கள் அந்த இடம் விட்டு நீங்கி, வேறு தனி இடத்தில் தங்கள் குடில்களை அமைப்பார்கள். நகர வாழ்வை அவர்கள் விரும்பவில்லை. தங்கள் நாட்டை இப்படி மற்றவருக்கு விட்டுத் தாங்கள் தனித்த வாழ்வை வாழ விரும்பும் அவர்களை முன்னுக்குக் கொண்டு வர அரசாங்கம் ஆவன செய்யவேண்டும்.***

7. குழந்தாய்! இந்நிறைமனமுடைய மலேயா மக்களின் சிறு குடில்களைக் கண்டுகொண்டே மேலே சென்றேன். எதிரே வானளாவிய மலைகள் காட்சி அளித்தன. மலேயா சிறந்த மலைநாடாகவே விளங்குகிறது என்பதை அறிந்தேன். ஒரு நீண்ட தொடர் நெடுந்தொலைவில் தெரிந்தது. சென்ற பாதையானது பலப்பல வளைவுகளைக் கொண்டதாக அமைந்தது. இயற்கை வளத்தின் எழிலை எல்லாம் கண்டு மகிழ்ந்து கொண்டே பகல் ஒரு மணிக்குச் 'சிரம்பான்' என்ற ஊரை அடைந்தோம்.

### அருஞ்சொற்பொருள்

செம்மல் - சிறந்தவர். கால்டுவெல், போப்பையர் - திருநெல்வேலிச் சீமையில் கிறிஸ்துவத் தொண்டு செய்துகொண்டே தமிழ்த் தொண்டும்

செய்தவர். கால்டுவெல் திருநெல்வேலி வரலாறு, திராவிட ஒப்பிலக்கண நூல் முதலியன எழுதியவர். திராவிட ஒப்பிலக்கண நூல் ஏறத்தாழ 700 பக்கங்கள் கொண்ட ஆங்கில நூல்; தென்னிந்திய மொழிகளிற் பழமை யானது தமிழே என்பதைத் தெளிவாக விளக்கவல்ல ஆராய்ச்சி நூல். போப்பையர் திருவாசகம், நாலடியார் முதலிய நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்; இறக்கும்வரை இங்கிலாந்தில் தமிழ்த் தொண்டு செய்தவர்.

## கேள்விகள்

1. இக்கடிதத்தில் சேவியரைப்பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகள் யாவை?

2. கால்டுவெல், போப்—சிறு குறிப்பு வரைக.

3. மலேயாவின் பழங்குடிகளைப்பற்றி யாது கூறப்பட்டுள்ளது?

## பயிற்சி

1. போப்பையர், கால்டுவெல் ஐயர் வரலாறுகளைக் கொண்டுள்ள நூல்களைப் படித்து, அவர்கள் தமிழுக்குச் செய்துள்ள தொண்டினை இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரையாக எழுதுக.

2. சேவியர், கால்டுவெல், போப்பையர் போன்ற பாதிரிமார் தியாகத்தையும் திருப்பணியையும் பாராட்டி, அவர்களால் மனித சமுதாயம் அடையும் நலன்களையும் குறிப்பிட்டு ஒரு கட்டுரை வரைக.

3. நீவிர் ஓர் ஊரிலிருந்து பிறிதோர் ஊருக்குச் செய்த ஒரு 'பஸ்' பிரயாணம் பற்றி உங்கள் நண்பருக்கு ஒரு கடிதம் எழுதுக.

4. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—குடியேறு, பரப்ப வந்த, சிறுதுளி, அண்ணலார், திருப்பணி சமயப்பணி, திராவிடன், உலகிடை, சொற்பொழிவு, உணர்ச்சி அலை, பெரும்பாலன, சுயநலம், வழிகோலும், முன்னுக்கு, இயற்கைவளம்.

5. பிரித்துக் காட்டுக:—பலப்பல, நெடுந்தொலை, மனமுடைய, விரும்பவில்லை, புதுப்புது, சிற்றுணவு, வாழ்விடை, இந்நாடு, முதற்குடி, ஒப்பிலக்கணம், ஏற்பாடாகி.

6. சேர்த்துக் கூறுக:—ஒருவரை + பற்றி, பற்றி + பேசு, கூறி + கொள்ள, நான்கு + ஐந்து, பெற்று + பிறகு, நெல் + பயிர், இயற்கை + அன்னை, அழுது + இருப்பேன், அன்பு + சமயம்.

7. 'மலேயாவின் பழங்குடிகள்' என்னும் தலைப்பில் உள்ள செய்திகளை அப்பழங்குடி மக்களே நம்மிடம் கூறுவது போல எழுதிக் காட்டுக.

8. இக்கடிதச் செய்திகளிலிருந்து, இதனை எழுதிய ஆசிரியரைப் பற்றி நீங்கள் அறிவனவற்றைக் கூறுக.

# 5. கவரி வீசிய காவலன்

**வித்துவான் அன்பு கணபதி அவர்கள்**

[இவ்வாசிரியர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் துணைத் தமிழ்ப் பேராசிரியர்; எழுத்துவன்மையும் சொல்வன்மையும் உடையவர். இப் பாடப்பகுதி இவர் எழுதியுள்ள "பாவலரும் காவலரும்" என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.]

1. செந்நெல்லும் நன்னீருமே உலகில் மக்கள் உடம்பை வளர்ப்பன; உயிரை வளர்ப்பன. இவையே மக்களின் உயிர். ஆனால், அந்நெல்லும் நீரும் மக்களுக்கு உயிர் ஆகா என்று கூறுகிறார் பழந்தமிழ்ப் புலவர் ஒருவர். அங்ஙனம் நெல்லும் நீரும் மக்களுக்கு உயிராகாமைக்கு உரிய காரணம் என்ன? பின் உயிர்தான் எது? இவ்வினாக்களுக்கு அவரே விடையும் தருகிறார். நெல்லும் நீரும் ஒரு நாட்டில் எவ்வளவு தான் நிறைந்திருந்தாலும், அவை எல்லா மக்களுக்கும் வேண்டியபோது வேண்டிய அளவில் கிடைக்க வேண்டும். ஒழுங்கும் அமைதியும் நிலவும் நாட்டில்தான் இது நடைபெறக் கூடும். ஒழுங்கும் அமைதியும் நாட்டில் நிலவச் செய்பவன் நாட்டுத் தலைவன்; அரசன். அரசனுடைய செம்மையான ஆட்சியின் கீழேதான் நாடு கட்டுப்பாடும் அமைதியும் காத்து நிற்கும். ஆகவே, நாட்டைக் காத்து மக்களுக்கு நல்லபடி உணவுப் பொருள் கிடைக்க உதவும் மன்னனே உலக மக்களுக்கு உயிர் ஆவான். தான், மக்களுக்கு உயிர் என்பதை அம்மன்னனும் உணர்ந்து உலகை ஓம்ப வேண்டும். இதுவே புலவர் தரும் விடை விளக்கம்.

"நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
அதனால் யான்உயிர் என்ப(து) அறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே." (புறம். 186)

இப்பாடலின் மூலம் மேற்போந்த அரிய கருத்தை வெளிப்படுத்தியவர் மோசிகீரனார் என்ற அருந்தமிழ்ப் புலவர் ஆவார்.

2. இப்புலவரின் இயற்பெயர் கீரனார் என்பது. பழந்தமிழ் நாட்டில் மோசி என்ற ஊரில் பிறந்து வாழ்ந்தமை

யால் ஊர்ப்பெயரும் சேர்த்து மோசிகீரனுர் என இவர் அழைக்கப்பட்டார். இவர் பல்கலையும் பயின்று சிறந்த அறிஞராக விளங்கினுர். கலைச் செல்வியின் நோக்கம் முழுவதும் பெற்ற புலவரை அலைச்செல்வி கடைக்கணிக்க மறந்தனள் போலும்! கல்விச் செல்வம் நிறைந்திருந்த இவர், வாழ்க்கைக்கு வேண்டும் பொருட் செல்வம் இல்லாது வாடினுர். புலவர்களின் உடன் பிறப்பான வறுமை இவரையும் விடவில்லை. வள்ளல் பலரிடமும் சென்று, அவர்கள் அளிக்கும் பரிசில் மூலமே புலவர் தம் வாழ்க்கையை நடத்தி வந்தார்.

3. இவர் காலத்தில், தமிழ் நாட்டின் மூன்று பகுதிகளுள் ஒன்ருன சேர நாட்டினைப் பெருஞ்சேரலிரும்பொறை என்ற மன்னன் ஆண்டுவந்தான். இரும்பொறை என்பதே இம்மன்னனின் இயற்பெயர். தன் பெயருக்கு ஏற்ப, இம் மன்னன் மிகவும் பொறுமைக்குணம் படைத்தவனுக விளங்கினுன். இரும்பொறை சிறந்த வீரன்; ஈர நெஞ்சினன்; செங்கோலன்; தமிழ்நலங் கனிந்த சான்ருேனுகவும் இவன் இலங்கினன்.

4. இரும்பொறையின் வீரம், இவன் ஆற்றிய பெருஞ் செயல் ஒன்ருல் நமக்கு விளங்குகிறது. தகடூர் என்ற ஊரை ஆண்ட மன்னன் ஒருவன் இரும்பொறையை இகழ்ந்து எதிர்த்தான். எனவே, இரும்பொறை அம்மன்னன்மீது படையெடுத்துச் சென்ருன்; தகடூரை முற்றுகையிட்டான்; அம்மன்னனை முறியடித்து வென்ருன்; தகடூரை அழித்தான். இதன் காரணமாக இவன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்ற வீரப்பெயர் சூடினுன். 'தகடூர் எறிந்த' என்ற தொடர், இரும்பொறையின் வீரத்தை இன்னும் விளக்கி நிற்கிறதன்ருே?

5. தமிழ் நலம் அறிந்த இரும்பொறை தமிழ்ப் புலவர்களிடத்து மிகுதியும் ஈடுபாடு உடையவன். தன்னை நாடி வரும் புலவர்களை ஏற்று உபசரித்து நிறைந்த செல்வம் அளித்து அனுப்புவது இவன் வழக்கம். எட்டுத்தொகையுள் ஒன்ருன பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தின் தலைவனுக இவன் பேசப்படுகிருன். இரும்பொறையை இப்பத்தின் தலைவனுக

வைத்து அரிசில் கிழார் என்ற புலவர் பெரிதும் புகழ்ந்து பாடி யுள்ளார். இது பாடிய அரிசில் கிழார்க்குத் தன் அன்பின் காணிக்கையாக இம்மன்னன் ஒன்பது நூருயிரம் காணம் பரிசில் கொடுத்துச் சிறப்பித்தான். இச்செயல் ஒன்றே இவன் புலவர்களிடத்து வைத்திருந்த பெருமதிப்பினையும் அன்பின் சிறப்பினையும் நன்கு விளக்குகிறது.

6. இரும்பொறை தமிழனிடத்து வைத்திருந்த ஆராத அன்பினை ஒரு சிறந்த நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது. இவ்வரசன் காலத்தே வாழ்ந்த புலவர் மோசிகீரனுர் என்பது முன்னர்க் கூறப்பட்டது. புலவர் கீரனுர் பல வள்ளல்களி டத்தும் சென்று பொருள் பெற்று வாழும் வாழ்க்கையினை யுடையவர் என்பதையும் முன்னர் அறிந்தோம். இத்தகைய வாழ்க்கையினையுடைய புலவர் ஒருபோது, சேரநாட்டை நண்ணி இரும்பொறையைக் காண விழைந்தார். காலமோ கடுங்கோடை. ஒரு நாள் நண்பகல் நேரம்; பலவிடங்களும் சென்று சுற்றித் திரிந்த புலவர், இரும்பொறையின் கோயிலை நண்ணினுர்; உள்ளே புகுந்து தங்கிக் களைப்பாற விரும் பினுர்; வாயில் கடந்து உள்ளே நுழைந்தார். அவர் புகுந்த இடம் முரசு கட்டில் வைக்கப் பெற்றிருந்த முன்றில் ஆகும்.

7. முரசு, கொடி, குடை, அரச பீடம், முடி முதலியன அரசன் சிறப்பினை விளக்கும் சின்னங்களாம். வேந்தனும் குடிகளும் இவைகளின்மீது பெருமதிப்பும், பெருநம்பிக் கையும் கொண்டவர். இவை தெய்வத்தன்மை உடையன வாக அக்காலத்துக் கருதப்பட்டன. அரசரின் பிறந்த நாள் முதலிய பெருநாட்களில் இவற்றைத் தூய்மைசெய்து, அணிபெற மலர் முதலிய தூவி வழிபடுவது வழக்கம். மேற் கூறிய இப்பொருள்களை இகழ்ந்தவர், கேடு சூழ்ந்தவர் யாவ ராயினும் அவர்கள் அரச தண்டனைக்கு ஆளாவர்.

8. புலவர் அரண்மனையுள் புகுந்த நாள் ஒரு பெரு நாள். முரசு மண்ணிவரும்பொருட்டு வெளியே எடுத்துச் செல்லப்பட்டு இருந்தது. முரசு கட்டில் தூய்மை செய்யப் பெற்று மலர் முதலியன தூவி ஒப்பனை செய்யப்பெற்றிருந் தது. எண்ணெய் நுரையினை முகந்து பரப்பி வைத்தது

போல வெண்மையான மெல்லிய பஞ்சணே, கட்டிலின்கண் பரப்பப்பட்டிருந்தது. தூரத்தே இருந்து கட்டிலேப் பார்த்த புலவர் அது ஒரு படுக்கை எனத் தவருக எண்ணிவிட்டார். கடுவெயிலில் வழி நடந்துவந்த களேப்பும் சோர்வும் புலவர் கண்களே மறைத்துவிட்டன. கட்டிலே நெருங்கிய புலவர் ஆராய்ந்து பார்த்தாரில்லே ; அதன்மீது ஏறிஞர் ; மெல்லப் படுத்தார். உறக்கம் புலவரைத் தன்வயப்படுத்தியது. புலவர் தம்மை மறந்து தூங்கிவிட்டார்.

9. இந்நிலேயில் மன்னன் இரும்பொறை ஏதோ அலுவலாக அப்பக்கம் வந்தான். சேய்மையில் வரும்போதே முரசு, கட்டிலில் இல்லாததையும், அவ்விடத்தில் எவனே எளியவன் ஒருவன் படுத்து உறங்குவதையும் மன்னன் பார்த்துவிட்டான். இயல்பிலேயே பொறுமைக் குணம் படைத்த இரும்பொறைக்கும் இக்காட்சி எல்லே மீறிய சினத்தைத் தந்தது. வலக்கை அவனே அறியாதே வாளே உருவியது. தெய்வக் கட்டிலில் ஏறி அதனே மாசுபடுத்தியவனது சிரத்தைத் துணிக்கத் துணிந்தான் ; விரைந்து கட்டிலின் அருகே வந்தான். அங்கே துயில்கொள்ளும் உருவத்தின் முகத்தைக் கண்டான். கண்ட அளவில் மன்னன் சினம் காற்றிலடிபட்ட பஞ்செனப் பறந்தது. மாருக அவன் மனதில் இரக்கமே பிறந்தது. ஏன் ? துயில்பவர் ஒரு புலவர், அதிலும் தன் அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய அருந்தமிழ்ப் புலவர் மோசிகீரஞர் என்பதை அறிந்தான். "ஐயோ பாவம் ! எங்கெங்குச் சுற்றி அலேந்தாரோ ? எவ்வளவு களேத்து உறங்குகிருர் !" இவ்வாறு எண்ணி இரங்கிஞன் மன்னன். உருவிய வாள், தானே உறையினுள் சென்றது. புலவரின் களேப்பினே மேலும் போக்க எண்ணிஞன் ; அருகே மாட்டியிருந்த கவரியைக் கையில் எடுத்தான் ; மெல்ல வீசிஞன். வாள் எடுத்துத் தலே துணிக்க எண்ணித் துணிந்த காவலன் கை, அவ்வுருவத்தின் தாளருகே நின்று கவரி இரட்டியது ! என்னே மன்னனின் தமிழன்பு.

10. சற்று நேரம் சென்றது. புலவரின்மீது மெல்லிய காற்றுப்படவே, அவர் சோர்வு ஓரளவு நீங்கியது. மெதுவாகப் புலவர் கண் திறந்தார். பார்த்தால், எதிரே மன்னன்

தமக்குக் கவரி வீசிக்கொண்டு நிற்கிருன்! புலவர் துணுக் குற்ருர். அப்போதுதான் தம் நிலேயும், தாம் செய்த தவறும் புலவருக்குப் புலப்பட்டன. புலவர் பொறுக்கென எழுந்தார். மன்னனே நோக்கினுர்; "இரும்பொறையே! என்ன காரி யம் செய்கின்றனே! நான் செய்த தவறு சிறியதா? முரசு கட்டில் ஏறிய என் தலே இந்நேரம், உன் கைவாளால் தரை யில் உருண்டிருக்க வேண்டுமே! அது செய்யாத உன் கை எனக்குக் கவரி அன்ருே வீசுகிறது! உன் பொறைதான் என்னே! நான் கற்ற நற்றமிழின் பயனே இது? இம்மை மறுமைகட்கு இன்பம் தருவது புகழே என நம்பித் தமிழைப் போற்றுபவனல்லவா நீ? அத்தமிழை முழுதும் அறிந்தமை யால் இச்செயல் செய்தனே போலும்!" இவ்வாறு புலவர் இரும்பொறையைப் புகழ்ந்து வாழ்த்திஞர்.

11. இவ்வாறு மன்னன் செயலே வியந்து அவனே வாழ்த் திய புலவர், மன்னன் சினம் மாறினமைக்கும், வாள்பிடித்துத் தம்மை வெட்டி வீழ்த்த வேண்டிய கை கவரி தாங்கி வீசின மைக்கும் அடிப்படையான காரணம் மன்னன் தமிழ் அறிந் தமையே—அதிலும் நற்றமிழ் உணர்ந்தமையே—என்பதை நன்கு வெளிப்படுத்திஞர். இங்ஙனம் பாவலரையும் காவ லரையும் பிணிக்கும் பண்பமைந்த பைந்தமிழின் திறம்தான் என்னே!

### அருஞ்சொற்பொருள்

உயிர்த்தே - உயிராக உடையது. மலர்தலே உலகம் - பரந்த இடத்தை உடைய உலகம். வேல் + மிகு = வேன்மிகு. தானே - சேனே. வேந்தன் + கு = வேந்தற்கு. வேந்தர் + கு வேந்தர்க்கு. கலேச் செல்வி - கலேமகள். அலேச்செல்வி - திருமகள். கடைக்கணிக்க - அருள் செய்ய. பரிசில் - பரிசுப் பொருள். பொறை - பொறுமை. ஈரநெஞ்சு - அன்புடைய நெஞ்சம். இலங்கினன் - விளங்கிஞன். பதிற்றுப்பத்து - பத்துப் பாடல் வீதம் பிரிக்கப்பட்ட நூறு செய்யுட்களேயுடைய ஒரு சங்கநூல். காணிக்கை - நன்கொடை. காணம் - பொன்னே நிறுத்து அளக்கும் ஒரு வகை அளவு. ஆராத - நிறையாத, முடிவு பெருத. முரசு கட்டில் - முரசு வைக்கும் ஒரு பீடம். மண்ணி - கழுவித் தூய்மை செய்து. சேய்மை - தூரம்.

### கேள்விகள்

1. உலகத்திற்கு எவை உயிர் ஆகா? எது உயிர் ஆகும்? ஏன்?
2. வேந்தனுக்குக் கடன் யாது?
3. மோசிகீரனார் என்ற பெயர் எதனால் வந்தது?
4. இரும்பொறையின் வீரத்தை விளக்கும் நிகழ்ச்சி யாது?
5. இரும்பொறையின் சிறப்புக் கூறும் நூல் எது?
6. மோசிகீரனார் செய்த தவறு யாது?
7. கவரி வீசிய காரணத்தால் இரும்பொறையைப் பற்றி நாம் அறிவன எவை?

### பயிற்சி

1. வாக்கியங்களிற் பயன்படுத்துக :—ஈடுபாடு, காண விழைந்தார், சிறந்த நிகழ்ச்சி, பெருமதிப்பு, எல்லை மீறிய, செம்மையான, நல்லபடி, கட்டுப்பாடு, கடைக்கணிக்க, ஈரநெஞ்சம், காரணமாக, பதிற்றுப்பத்து, முறியடித்து, வழிபடுவது, தவறாக, இயல்பிலேயே, கவரி, இரட்ட, மாசு படுத்தி, உருண்டிருக்க, பண்பமைந்த.

2. பிரித்துக் காட்டுக :—செந்நெல், நன்னீர், அந்நெல், உயிரா காமை, பழந்தமிழ், நிறைந்திருந்தாலும், உணவுப்பொருள், நாட்டைக் காத்து, இயற்பெயர், ஊர்ப்பெயர், அலைச்செல்வி, இம்மன்னன், வீரப் பெயர், நிற்கிறதன்றோ, பாடியுள்ளார், எடுத்துக்காட்டுகிறது.

3. சேர்த்து எழுதுக :—வாழ்க்கை + உடைய, தங்கி + களைப்பாற, வைக்க + பெற்ற, பெற்று + இருந்த, இவற்றை + தூய்மை, ஆள் + ஆவர், செய்ய + பெற்று, என + தவறாக, கடுமை + வெயில், இ + நிலை, தெய்வம் + கட்டில், துணிக்க + துணிந்தான், அருமை + தமிழ்.

4. எதிர்ச் சொற்கள் வரைக :—மெல்ல, மெல்லிய, திறந்தார், தவறு, சிறியது, இம்மை, முழுதும், புகழ்ந்து, மாறினது, வெளிப்படுத்து, நெருங்கி, விரைந்து, சோர்வு, மாசு.

5. "காற்றிலடிபட்ட பஞ்சென"—இஃது ஒரு பழமொழி. இது போன்று நீங்கள் அறிந்த வேறு நான்கு பழமொழிகளை எழுதுக.

6. இப்பாடப் பொருளை 25 வரிகளில் ஒரு கட்டுரையாக வரைக.

7. இப்பாடச் செய்தியை இரும்பொறை கூறுவதாக எழுதிக் காட்டுக.

8. இப்பாடப் பொருளைப் புலவர் மதுரையில் இருந்த நக்கீரர்க்கு எழுதுவதுபோல ஒரு கடிதம் வரைக.

# 6. திருச்சிராப்பள்ளி

**திரு. T. V. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள்**

[இவ்வாசிரியர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறையில் இருப்பவர்; ஆராய்ச்சி அறிஞர்; கல்வெட்டுக்களைப் படிப்பதில் வல்லவர்; பாண்டியர் வரலாறு, சோழர் வரலாறு, முதற் குலோத்துங்கன் என்னும் ஆராய்ச்சி நூல்களை எழுதியிருப்பவர். இக்கட்டுரை இவரால் எழுதப்பட்டுத் "தமிழ்ப்பொழில்" என்னும் திங்கள் தாளில் வெளிவந்தது.]

1. தென்னிந்தியாவில் உள்ள புகைவண்டி நிலையங்களுள் முதன்மை பெற்று விளங்கும் திருச்சிராப்பள்ளியைப் பலரும் அறிவர். நம் அரசாங்கத்தார், சுதந்தர இந்தியாவில் ஊர்களெல்லாம் தம் பழைய பேர்களோடு நின்று நிலவவேண்டுமென்ற கருத்தினராய், இப்போது சில ஊர்களின் பெயர்களை மாற்றியுள்ளனர். அவற்றுள் திருச்சிராப்பள்ளி என்பதும் ஒன்ருகும். அப்பெருநகரின் பண்டைப் பெயர் யாது என்பதைக் கண்டு ஆராய்வோம்.

2. கடைச் சங்க நூல்களுள் ஒன்ருகிய அகநானூற்றில், 'கறங்கிசை விழவின் உறைந்தைக் குணது—நெடும் பெருங்குன்றம்' என்று உறையூருக்குக் கிழக்கே ஒரு குன்று கூறப்பட்டுள்ளதே அன்றி, அதன் பெயராதல், அஃது அமைந்துள்ள ஊரின் பெயராதல் அப்பாடலில் குறிக்கப்படவில்லை. சைவ சமய குரவர்களாகிய திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் அக்குன்றின்மேல் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமான்மீது பாடியுள்ள பதிகங்களில்தான் 'சிராப்பள்ளி' என்ற பெயர் காணப்படுகிறது. கி. பி. ஏழாம் நூற்ருண்டின் முற்பகுதியில் தொண்டை நாட்டையும் சோழ நாட்டையும் ஒருங்கே ஆட்சி புரிந்த பல்லவ வேந்தனுகிய முதல் மகேந்திரவர்மன் என்பவனே சிராப்பள்ளிப் பெருங்குன்றைக் குடைந்து, அங்குச் சிவபெருமானுக்குத் திருக்கோயில் அமைத்தவன் என்பது ஆராய்ச்சியால் அறியப்படுகிறது. வடமொழியில் சிறந்த புலமை பெற்றிருந்த அவ்வேந்தன் எட்டுச் சுலோகங்கள் இயற்றி, அவற்றைத் தான் எடுப்பித்த சிராப்பள்ளிச் சிவன் கோயிலில்

பொறித்துள்ளனன்; அச்சுலோகங்களில் தான் புறச் சமயத்தி லிருந்து திரும்பிச் சிவநெறியைக் கடைப்பிடித்துச் சைவ ணகியதையும், சிராப்பள்ளிக் குன்றின்மேல் குகைக் கோயி லில் சிவலிங்கத்தை எழுந்தருளுவித்ததையும் குறிப்பிட் டுள்ளான். அச்செய்திகளை நுணுகி நோக்குமிடத்து, அம் மன்னனது ஆட்சியின் பிற்பகுதியில்தான் சிராப்பள்ளிக் குன்றில் சிவாலயம் அமைக்கப்பெற்றிருத்தல் வேண்டுமென் பதும், அதற்கு முன்னர் அவன் சமண சமயத்தைக் கைக் கொண்டொழுகிய காலத்தில் அங்குச் சிவாலயம் இருந்திலது என்பதும் நன்கு புலனுகின்றன.

3. சிராப்பள்ளிக் குன்றின் மேலுள்ள உச்சிப் பிள்ளை யார் கோயிலுக்குப் பின்புறத்தில் பல சமண முனிவர்களின் கற்படுக்கைகள் தலையணைகளோடு இருத்தலை இன்றுங் காணலாம். அத்தலையணைகளில் அவற்றை உபயோகித்த சமண முனிவர்களின் பெயர்கள் வரையப்பட்டிருக்கின்றன. அவ்வெழுத்துக்களைக் கொண்டு அவற்றின் காலத்தை ஆராய்ந்த கல்வெட்டுத் துறை அறிஞர்கள், அவை கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் அமைக்கப்பெற்றிருத்தல் வேண்டும் என்று கூறுகின்றனர். எனவே, கி. பி. ஐந்தாம் நூற்றுண் டில் அக்குன்றின்மேல் சில சமண முனிவர்கள் தங்கித் தவம் புரிந்துகொண்டிருந்தனர் என்பது நன்கு தெளியப்படும். அவர்களுள் 'சிரா' என்ற முனிவர் ஒருவர் இருந்தமை அங் குள்ள கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. அம்முனிவர் அத் தவப்பள்ளியின் தலைவராயிருந்தமை பற்றி அது 'சிராப் பள்ளி' என்று முதலில் வழங்கத் தொடங்கி, அவர் காலத் திற்குப் பின்னரும் அப்பெயரோடு நின்று நிலவுவதாயிற்று.

4. முதல் மகேந்திரவர்மனும், தன் ஆட்சியின் முற் பகுதியில் அதனை ஆதரித்துப் போற்றிவந்திருத்தல் வேண்டும் என்பது, அவனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்று அங்குப் பொறிக்கப் பெற்றிருத்தலால், நன்கு துணியப்படும். * * * அவன் குன்றின்மேல் சிவன் கோயில் எடுப்பித்திருத்தல் வேண்டும். அச்சிவாலயமும் 'சிராப்பள்ளி' என்னும் பழைய பெயருடன் வழங்கிவருவ தாயிற்று. சைவ சமய குரவர்களாகிய திருஞானசம்பந்தரும்,

திருநாவுக்கரசரும் தம் காலத்தில் வழங்கிவந்த 'சிராப்பள்ளி' என்ற அப்பெயரைத் தாம் அக்கோயிலில் பாடியருளிய பதிகங்களில் குறிப்பிட்டுச் செல்லுவராயினர். ஆகவே 'சிரா' என்ற சமண முனிவரது தவப் பள்ளியின் பெயரா யிருந்த 'சிராப்பள்ளி' என்பது, பின்னர் முதல் மகேந்திர வர்மன் அங்கு எடுப்பித்த சிவன் கோயிலின் பெயராக மாறி விட்டமை அறியத்தக்கது.

5. நம் தமிழ்நாட்டின் சில ஊர்களிலுள்ள திருக் கோயில்களுக்குத் தனிப் பெயர்கள் முற்காலத்தில் வழங்கி வந்தன என்பது சமய குரவர் அருளிய தேவாரப் பதிகங்க ளாலும், கல்வெட்டுக்களாலும் புலப்படுகின்றது. உறையூரி லுள்ள கோயில் முக்கீச்சுரம் எனவும், கருவூரில் உள்ள கோயில் ஆனிலை எனவும் பெயர் எய்தி யிருந்தன என்பதைத் தேவாரப் பதிகங்களாலும், அவ்வூர்களிலுள்ள கல்வெட்டுக்களாலும் அறியலாம். அம்முறையில் 'சிராப் பள்ளி' என்பது கோயிற் பெயராயிருத்தலால், அக்கோயில் அமைந்துள்ள ஊரின் பெயர் யாது என்பது ஆராய்தற்குரிய தாகும்.

6. திருச்சிராப்பள்ளியில் முதல் இராசராச சோழனது ஆட்சியின் பதினாறும் ஆண்டாகிய கி. பி. 1000-இல் வரையப்பட்டுள்ள கல்வெட்டொன்று, விக்கிரமசிங்க மூவேந்த வேளாளன் என்பவன் ஒருவன் விளத்தூர் நாட்டு ஆலங்குடி யில் நிலம் விலைக்கு வாங்கி, அதனை உறையூர்க் கூற்றத்துச் சிற்றம்பரிலுள்ள சிராப்பள்ளிக் கோயிலுக்கு அளித்தனன் என்று கூறுகின்றது. அதனை ஆராயுமிடத்து, அத்தலைவனால் இறையிலி நிலம் வழங்கப்பெற்ற சிவன்கோயில், "சிராப் பள்ளி" என்னும் பெயருடையது என்பதும், அக்கோயில் அமைந்துள்ள நகர் 'சிற்றம்பர்' என்னும் பெயருடையது என்பதும், அந்நகர் உறையூர்க் கூற்றத்தில் உள்ளதென் பதும் நன்கு புலனாதல் காண்க. * * *

7. நம் தமிழ்நாட்டில் **அம்பர், இன்னம்பர்,** நல் **லம்பர்** என்ற ஊர்கள் இருத்தலைப் பலர் அறிந்திருத்தல் கூடும். அவ்வூர்களைப்போலச் **சிற்றம்பர்** என்ற ஊரும் இருந்துள்ளது. இக்காலத்தில் அவ்வூரின் பெயர் மறைந்

தொழிந்தது. எனினும், அவ்வூர் 'திருச்சிராப்பள்ளி' என்னும் பெயருடன் இஞ்ஞான்று எல்லோருக்கும் காட்சி அளித்துக்கொண்டு பெருமையுடன் விளங்குவது மகிழ்தற் குரியதாகும்.

8. இதுகாறும் ஆராய்ந்து கூறியவற்ருல், பண்டைக் காலத்தில் 'சிராப்பள்ளி' என்பது 'சிரா' என்ற சமண முனிவரது தவப்பள்ளியின் பெயராயிருந்தது என்பதும், பிறகு பல்லவ வேந்தனுகிய முதல் மகேந்திரவர்மன் அங்கு எடுப்பித்த சிவன் கோயிலின் பெயராயிற்று என்பதும், அதன் பின்னர் அத்திருக்கோயில் அமைந்துள்ள நகரின் பெயராக வழங்கிவருகின்றது என்பதும், கோயிலின் பெயர் நகரின் பெயராகப் போய்விட்டமையின், * 'சிற்றம்பர்' என்னும் அந்நகரின் பழைய பெயர் மறைந்துவிட்டது என்பதும் நன்கு விளங்குதல் காண்க.

### அருஞ்சொற்பொருள்

கறங்கு - ஒலிக்கும். விழவு - திருவிழா. உறந்தை - உறையூர் என்பதன் மரூஉ. குணது - கிழக்கில். குரவர் - ஆசிரியர். எடுப்பித்த - அமைத்த. நுணுகி - நுட்பமாய் ஆராய்ந்து. பள்ளி - சமணர் கோவில். இறையிலி - வரியற்றது. கூற்றம் - நாட்டின் உட்பகுதி.

### கேள்விகள்

1. கற்படுக்கைகள் எங்குள்ளன? அவற்றின் காலம் என்ன?
2. 'சிராப்பள்ளி' என்ற பெயர் முதலில் எதற்கு ஏற்பட்டது?
3. 'சிராப்பள்ளி' என்ற பெயர் தேவாரத்திற் காணப்படுதற்கு என்ன காரணம்?
4. கோவிற் பெயர் வேறு, அஃதுள்ள ஊர்ப்பெயர் வேறு என்பதற்குச் சான்று என்ன?
5. திருச்சிராப்பள்ளியில் உள்ள முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டு உணர்த்தும் உண்மை யாது?

### பயிற்சி

1. 'கல்வெட்டு' என்பது பற்றி நீங்கள் அறிந்தவற்றை எழுதுக.
2. 'கற்படுக்கைகள்', 'சமணமுனிவர்', 'பள்ளி'—சிறு குறிப்பு வரைக.

---

* அங்ஙனமே பட்டீச்சுரம், திருவாவடுதுறை என்னும் கோயிற் பெயர்கள் இக்காலத்தில் ஊர்களின் பெயர்களாக வழங்கிவருதல் அறியத் தக்கது.

# 7. சீறாப் புராணம்

ஜனாப் K. M. K. அப்துல் காதர் அவர்கள், M. A.

[இவ்வாசிரியர் சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராயிருப்பவர்; பேச்சிலும் எழுத்திலும் வன்மை உடையவர்.]

1. கலைவளமும் கல்வி வளமும் மலைவளமும் நிலவளமும் நிரம்பியது திருநெல்வேலிச் சீமை. இதில் எட்டயபுரம் என்னும் ஒரு பாளையப்பட்டு உண்டு. அதன் மன்னர்கள் நாயக்கர் குலத்தினர். தம் தாய்மொழி தெலுங்கு மொழியாய் இருந்தும், அவர்கள் நெடுகிலும் சிறந்த தமிழ் அன்பர்களாயும் அபிமானிகளாயும் திகழ்ந்துவந்திருக்கின்றனர்; பாவலரையும் நாவலரையும் பொன்னும் துகிலும் கொடுத்துப் போற்றினர்.

2. கி. பி. பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எட்டப்ப மன்னனின் சபையில் தலைமைத் தமிழ்ப் புலவராய்க் **கடிகை முத்துப் பிள்ளை** என்ற பெரியார் இருந்தார். அவரது பிள்ளைப் பெயர் 'முத்து' என்பது. அவர் களத்தூர்க் கோட்டத்திலுள்ள 'கடிகை' என்ற தமிழ்ச் சங்கத்தில் கற்றவர். ஆகவே, அவர் கடிகை முத்துப்பிள்ளை என்று அழைக்கப்பட்டார். 'கடிகை' என்பது குலப்பெயர் என்று கூறுவாரும் உளர். முத்துப்பிள்ளை இலக்கண இலக்கியங்களைக் கசடறக் கற்றுத் தேர்ந்தவர்; அறிவோடு திறமையும் ஆற்றலொடு அனுபவமும் வாய்ந்தவர்; எட்டப்ப பூபதிமீது பல சாதுரியமான தனிக்கவிகள் பாடியவர். சமுத்திர விலாசம், காமரச மஞ்சரி என்ற நூல்களும் இவர் இயற்றியவையே.

3. முத்துப்பிள்ளை அவர்கள் காலத்தில் எட்டயபுரத்தில் **சேகு முதலியார்** என்ற ஒரு முஸ்லிம் வணிகர் வாழ்ந்துவந்தார். அவர் அத்தர், புனுகு, சவ்வாது, ஊதுவர்த்தி முதலிய மணப்பொருள்களை விற்கும் வணிகர். அரசரும் அவரிடம் வாசனைப் பண்டங்களை வாங்கிவந்தார். அரசவையில் அணியெனத் திகழ்ந்த பிள்ளையவர்களுக்கும் வணிகருக்கும் ஏற்பட்ட அறிமுகம் நாளடைவில் ஆழ்ந்த நட்பாக மலர்ந்தது.

4. சேகு முதலியார் உமறு என்ற திருநாமம் கொண்ட தம் அருமை மகனைப் பிள்ளையவர்களிடம் தமிழ் கற்கும்படி ஏற்பாடு செய்தார். அச்சிறுவன் அடக்கமும் ஒடுக்கமும் கொண்டு பரிவுடனும் ஆர்வத்துடனும் ஆசிரியர்பால் கற்பன கற்றுக் கேட்பன கேட்டுக் காளைப்பருவம் எய்தினன்; கள்ள மற்ற பேச்சும் கலகலத்த சிரிப்பும் 'துள்ளி விளையாடும் சுறு சுறுப்பும் உடையவனாய் விளங்கினன். அவனிடம் வித்தை யின் வித்துக்கள் வேரூன்றி முளைத்துக் கிளைத்திருந்தன.

5. அக்காலை வாலைவாரிதி என்ற புலவன் வடக்கிருந்து வந்தான். அவன் வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவன்; மந்திர தந்திரமும் தெரிந்த மாயாவி. தமிழ் நாட்டிலுள்ள அரசவைகளுக்கெல்லாம் சென்று ஆங்குள்ள தமிழ்ப் புலவர்களை வாதுக்கழைத்து வென்ற பெருமிதத் தோடும் 'விருதுகளோடும் எட்டயபுரத்திற்கு வந்தான்; 'வித்தையைச் சோதித்து வெகுமதி தருக', என அரசரை வேண்டினன். அரசரும் இசைந்தார்; விவாத நாளைக் குறிப் பிட்டுத் தம் அவைக்களப் புலவர் முத்துப்பிள்ளைக்குச் சொல்லி அனுப்பினர்.

6. அன்று முத்துப்பிள்ளையவர்கள் உடல் நலிவு கொண்டு சுரங்கண்டு பாயும் படுக்கையுமானர்; 'வாலை வாரிதியுடன் வாதிடும் நாளில் இப்படியாயிற்றே!' என உள்ளூர வருந்தினர்; தம் மானத்திற்கே ஈனம் வந்தவிட்ட தாக எண்ணி எண்ணி ஏங்கினர்; தம் பக்கத்தே அமர்ந் திருந்த மாணவன் உமறிடம் தம் அவல நிலையைக் கூறி உளம் நொந்தார். மாணவர் மனத்தில் அப்பொழுது ஓர் எண்ணம் எழுந்தது. ஆசிரியர் சார்பாகச் சபைக்குச் சென்று தாம் ஏன் வாதிடலாகாது என்பதே அது. அவர் உடனே ஆசிரியரிடம் பணிவுடன் அனுமதி கேட்டார். 'இளங்கன்று பயமறியாது' என்பதுபோலத் துணிவுடன் பேசிய மாணவரது முகவிலாசத்தையும், அவர் கண்களிலே தோன்றும் உறுதியையும் கண்ட புலவர், "போய் வா, அப்பா", என்று ஆசீர்வதித்துத் தம் பல்லக்கிலேயே உமறை அனுப்பிவைத்தார். அன்றைய விவாதத்தின் முடிவு யாவரை யும் வியப்பில் ஆழ்த்தியது. உமறு வென்றார். அரசர்,

அவையிலேயே உமறைக் கட்டித் தழுவி ஆலிங்கனம் செய்தார்; பல்லக்கும் பதினாறு வாள்வீரரும் இன்னும் பல விருதுகளும் பரிசாகத் தந்தார்.

7. வெற்றியோடு திரும்பிய உமறு ஆசிரியரை வணங்கி, அன்றைய நிகழ்ச்சிகளை விவரித்தார். பிள்ளையவர்களின் ஆனந்தத்திற்கு எல்லையில்லை. அவர் மகிழ்ச்சிப் பெருக்கில் ஆழ்ந்து, "அப்பா! என் மானம் காத்த மாணவன் நீ. உன் புகழ் இனி வளர்பிறைபோல வளரட்டும்," என்று கூறி ஆசீர்வதித்தார்; தமக்கும் முதுமை வந்து விட்டதால், அரசரிடம் பேசி, உமறையே தம்முடைய இடத்தில் நியமிக்கும்படி ஏற்பாடு செய்தார். அதுமுதல் உமறுப்புலவரே எட்டப்பனது அவையில் தலைமைப் புலவராய் இருந்து பல்லாண்டுகள் தொண்டாற்றினர்.

8. அக்காலை கீழ்க்கரை என்ற நகரில் சீதக்காதி என்ற பெருவள்ளல் இருந்தார். கொடையும் நட்பும் தயையும் அவருடைய இயல்பான பண்புகள். அவர் வாய்மையும் தூய்மையும் வண்மையும் திண்மையும் ஒருங்கே பெற்றவர். ஊர் நடுவே உள்ள ஊற்றுப்போல அவரது பரந்த செல்வம் புலவர்க்கும் இரவலர்க்கும் பயன்பட்டது. வாணிகத்தால் வந்த பொருளையெல்லாம் வண்மையால் அள்ளி வீசிய அப் புரவலரைச் சூழ்ந்து புலவர்குழாம் வாழ்ந்தது.

9. புலவர் பெருமக்களின் கூட்டுறவாலும் இன்றமிழ் இலக்கியங்களைக் கேட்டு மனம் பண்பட்டதாலும், இயற்கையாகவே எழுந்த தமிழ்ப் பற்றாலும் உந்தப்பட்ட சீதக்காதி, புதிய இலக்கியங்களைப் புனையச்செய்து தமிழ்த் தாய்க்குச் சமர்ப்பித்து மகிழவேண்டும் என்ற ஆர்வம் கொண்டார். அன்றிருந்த தமிழிலக்கியங்கள் எல்லாம் பெரிதும் புராணங்களாகவும் ஒரு சமயச் சார்புடையனவாகவுமே இருந்தன. தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட முஸ்லிம்கள் அப்புராணங்களின் கவிதைச் சுவையில் மிகுதியாய் ஈடுபாடு கொண்ட பொழுதிலும், கதைப் போக்கை ஒப்புவது இயலாது போயிற்று. முஸ்லிம்களின் சரித்திரங்களும் சமயக் கருத்துக்களும் அரபி மொழியிலேயே இருந்தமையால், அம்மொழி அறியாத தமிழ் முஸ்லிம்கள் தம் சமயத்தைப் பற்றியோ,

சமயாச்சாரியரைப் பற்றியோ நேரடியாய் அறிந்துகொள்ள இடமில்லாமல் தவித்தனர். அதனால் அனுஷ்டானங்களின் நியமம் தவற ஆரம்பித்தது. நுண்ணறிவும் விரிந்த அனுபவமும் உள்ள சீதக்காதி, தமிழில் இசுலாமியச் சட்டங்களும் கருத்துக்களும் இயற்றப்பட்டாலொழியக் கழுவாய் இல்லையெனக் கண்டார். அத்துடன் இசுலாமிய எழில்நலங்களைத் தமிழுக்கு அறிமுகம் செய்து தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவவேண்டும் என்ற ஆர்வமும் அவருக்கு இருந்தது. இந்த அன்புப்பணியைச் செய்வதற்குத் துணைபுரிபவர், அரபி மொழியின் இலக்கிய இலக்கணம் தெரிந்தவராயும் தமிழிலும் தேர்ந்த வித்துவானுயும் இருக்கவேண்டும். இருமொழிப் புலமையும் இசுலாமியப் பண்பாடும் பெற்ற ஒருவரை அவரால் கண்டுபிடிக்க இயலவில்லை. தம் சிந்தையில் உதித்த செம்பணி நிறைவேறும் காலமும் வருமோ என அவர் கலங்கினர்.

10. அவர் நினைத்த காலம் வந்தது. அவர் ஒருமுறை அரச காரியமாக எட்டயபுரம் வந்தார்; அங்கு அரசரது அத்தாணிப் புலவராய் வீற்றிருந்த உமறுப் புலவரைக் கண்டார். தமிழில் தகுதிபெற்றுத் தலைமைப் புலவராய்த் திகழும் உமறைக் கண்டதும், அவரது இதயத்தில் உறங்கிக் கிடந்த எண்ணம் விழித்துக்கொண்டது. ஆனல், அதனுடன் ஓர் ஏக்கமும் தொடர்ந்து எழுந்தது. தமிழ் மேதையாகிய உமறு இசுலாமிய இலக்கிய ஞானம் கொண்டவராக இல்லை. இக்குறையைத் தவிர்ப்பதற்காகச் சீதக்காதி ஒரு வழி கண்டார்; தமது குருவும் அரபி மொழியில் அழுத்தமான பாண்டித்தியம் உடையவரும் கீழ்க்கரையில் வாழ்ந்து வந்தவருமான **ஷெய்கு ஸதக்கத்துல்லாஹ்** அவர்கள் முஹம்மது நபியின் காரணச் சரிதத்தை இசுலாமியக் கிரந்தங்களிலிருந்து திரட்டித் தருவதென்றும், அதை இன்தமிழ்க் கவிதைகளாக உமறு இயற்றித்தரவேண்டும் என்றும் ஏற்பாடு செய்ய நினைத்தார்; எட்டப்ப மன்னனின் அனுமதி பெற்று உமறுப் புலவரைக் கீழ்க்கரைக்கு அழைத்துவந்தார். புலவரின் உடையையும் தோற்றத்தையும் பார்த்துவிட்டு ஸதக்கத்துல்லாஹ் அவர்கள், "இவர் நபிநாதரின் வரலாற்றைப் பாடவல்ல பண்பு பெற்றவரோ!" என முதலில் ஐயங்கொண்டார்;

எனினும் இறுதியில் அவருக்கு உதவி புரிய இசைந்தார் ; சரிதம் திரட்டத் தமக்கு ஓய்வு கிடைக்காமையால் பரங்கிப் பேட்டையில் இருந்த தம் மாணவர் மஹ்மூது நயினு லெப்பை என்பவரிடம் புலவரை அனுப்பினர். லெப்பை அவர்களும் தமது ஆசானின் ஆணைக்கிணங்கிச் சீருச் சரித்திரத்தைத் திரட்டித் தந்தார். உமறு அதைச் செஞ்சொற் கவிதையாகச் சீர்பெற அமைக்கலானர்.

11. நிலையற்ற இவ்வுலகில் மனித எண்ணங்கள் நிலை பெறுவது ஏது? ஒன்றை நினைத்தால் மற்றென்று முன் னிற்கும் ; நினையாத ஒன்று நிகழினும் நிகழும். சீருப் புராணத்தைச் செந்தமிழில் இயற்றுவித்துத் தம் ஆத்ம தாபத்தைத் தீர்க்க நினைத்த சீதக்காதியை இறைவன் தன்பால் ஏற்றுக்கொண்டான். சீதக்காதி இறந்துவிட்டார் எனக் கேட்ட உமறு, கொழுகொம்பு அற்ற கொடிபோலத் துவண்டுபோனர் ; கையற்றுக் கலங்கிக் கதறினர் ; இனிப் புராணத்தை முடித்து அரங்கேற்றுவது அருமையிலும் அருமை என அதைரியம் அடைந்தார்.

12. எதிர்பாராத உதவி புலவருக்குக் கிடைத்தது. பரங்கிப்பேட்டையில் கனவானும் தனவானும் திகழ்ந்தவ ரும், உசேன் நயினர் என்பவரின் புத்திரருமான அபுல் **காசீம் மரக்காயர்** என்பவர் புலவரைப் போற்றிப் பாது காக்க முன்வந்தார் ; உமறைத் தம் இல்லத்திற்கே அழைத்துச் சென்ருர் ; வேண்டிய பொருளுதவி வழங்கினர் ; புராண அரங்கேற்றத்திற்கு ஆவன செய்வதாகக் கூறி, ஆறுதல் அளித்தார் ; அங்ஙனமே அரங்கேற்றமும் செய்வித்தார்.

13. அபுல் காசீம் செய்த பேருதவியைப் புலவர் மறந் திலர் ; தாம் பாடிய சீருவில் ஏறத்தாழ நூறு பாடல்களுக்கு ஒரு பாடல் வீதம் வைத்து, அபுல் காசீமின் வண்மையையும் ஒண்மையையும் வாழ்த்தியுள்ளார் ; இலக்கியம் உள்ளளவும் இன்றமிழ் உள்ளளவும் அபுல்காசீமின் புகழ் அழியாது நிற்கும்படி அமரத்துவம் தந்தார். செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஈடாகுமா ?

### அருஞ்சொற்பொருள்

பாளையப்பட்டு - பாளையக்காரர் ஆட்சியில் உள்ள நிலப்பகுதி. பாவலர் - செய்யுள் இயற்றுபவர். நாவலர் - பேச்சாளர். துகில் - ஆடை. பரிவு - அன்பு. அவலநிலை - துன்பநிலை. புரவலர் - வள்ளல். வண்மை - கொடைத்தன்மை. உந்தப்பட்ட - தள்ளப்பட்ட. ஈடுபாடு - பற்று. கழுவாய் - மீளும் வழி. அமரத்துவம் - அழியாநிலை. ஒண்மை - புகழ். அத்தாணிப் புலவர் - அவைப்புலவர். சீரு - 'ஸீரத்' என்னும் அரபி மொழியின் திரிபு; 'வாழ்க்கை வரலாறு' என்பது பொருள். கொழு கொம்பு - படருவதற்கு ஏற்ற கொம்பு. செம்பணி - நற்செயல். மேதை - அறிஞன். செஞ்சொல் - செம்மையான சொற்கள். கையற்று - செய்வ தறியாது. மரக்காயர் - மரக்கலராயர் என்பதன் மரூஉ.

### கேள்விகள்

1. கடிகைமுத்துப் புலவர் இயற்றிய நூல்கள் எவை ?
2. சேகு முதலியார் யாவர் ? அவர் தொழில் யாது ?
3. 'வாலைவாரிதி' என்பவனைப்பற்றி யாது அறிவீர் ?
4. 'இளங்கன்று பயமறியாது'—இப்பழமொழி வந்துள்ள சந்தர்ப் பம் யாது ?
5. உமறு எவ்வாறு அவைப்புலவரானார் ?
6. சீதக்காதியின் இயல்பான பண்புகள் எவை ?
7. சீதக்காதியின் சிந்தையில் உதித்த 'செம்பணி' யாது ?
8. சீதக்காதியின் விருப்பம் எவ்வாறு நிறைவேறியது ?
9. 'கொழுகொம்பு அற்ற கொடிபோல்'—இதனை உவமேயத்தோடு பொருத்திக் காட்டுக.
10. சீறுப்புராணம் எங்கு, எவர் உதவியால் அரங்கேற்றப்பட்டது ?

### பயிற்சி

1. பொருள் கூறுக :—காளைப் பருவம், கடிகைமுத்துப் புலவர், முகவிலாசம், அத்தாணிப் புலவர், அரங்கேற்றம், சீரு, செஞ்சொல், பண்பாடு, கையற்று, அமரத்துவம், கழுவாய்.

2. வாக்கியங்களில் அமைக்க :—எழில் நலங்கள், நேரடியாய், அறிமுகம், தகுதி பெற்று, வீற்றிருந்த, தவிப்பதற்கு, கீழ்க்கரை, இயற்றித்தர, அமுத்தமான, ஆணைக்கிணங்கி, ஏற்றுக்கொண்டு, அரங்கேற்றம், கலகலத்த, பல்லாண்டு, கொழுகொம்பு, செஞ்சொல், கையற்று, ஆதல், உள்ளளவும், வண்மை, திண்மை, ஒண்மை.

3. சீதக்காதி, சதக்கத்துல்லாஹ், உசேன் நயினார்—இவர்களைப் பற்றித் தனித்தனிக் குறிப்பு எழுதுக.

4. தமது வரலாற்றை உமறுப் புலவரே கூறுவதுபோல வரைக.

# 8. கூட்டுறவு இயக்கம்

திரு. K. S. நாகராசன் அவர்கள், B. A., B.Sc.

[இவ்வாசிரியர் சென்னை விவேகானந்தர் கல்லூரியில் ஆங்கில ஆசிரியராக இருப்பவர்; பல தமிழ் நூல்களின் ஆசிரியர்; 'முதியோர் கல்வித் திட்டம்' பற்றி நூல் எழுதித் தமிழ் வளர்ச்சிக் கழகத்தினரால் ரூ. 500 பரிசளிக்கப்பெற்றவர்.]

1. ஒரு கிராமத்திலோ அல்லது நகரத்திலோ பலதிறப்பட்ட மக்கள் வாழ்கின்றனர். அவர்களுடைய வாழ்க்கை முறைகளும், பழக்க வழக்கங்களும், தேவைகளும் பலதிறப்பட்டன. ஆனால் அவர்கள் அனைவருக்கும் பொதுவான சில பொருளாதாரத் தேவைகள் உள்ளன. அவற்றை நிறைவு செய்துகொள்வதற்காக அவர்கள் தாங்களாகவே ஒன்றுகூடி ஒரு நிலையம் அமைத்துக்கொண்டு, அதன்மூலம் தங்கள் தேவைகளை எளிதாகவும், சிக்கனமாகவும் நிறைவு செய்து கொள்ளல் கூடும். இதற்குச் சான்றாக, ஒரு கிராமத்தில் உள்ள மக்களை எடுத்துக் கொள்வோம். அவர்கள் அனைவருக்கும் அரிசி, உப்புப்போன்ற உணவுப் பண்டங்கள் இன்றியமையாதனவாம். அப்பண்டங்களை அவர்கள் கிராமத்திலுள்ள சில்லறைக் கடையிலிருந்து வாங்கிக் கொள்ளலாம். கிராமத்தார் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரு நிலையம் அமைத்துக்கொள்வார்களாயின், அதன் மூலம் மொத்த வியாபாரிகளிடமிருந்தோ அல்லது உற்பத்தியாளர்களிடமிருந்தோ பண்டங்களை நேரே பெற்றுத் தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்ளலாம். அத்தகைய ஒரு நிலையத்தைக் **கூட்டுறவு நிலையம்** என்று நாம் அழைக்கிறோம்.

2. கூட்டுறவு நிலையங்களால் மக்களுக்கு ஏற்படும் நன்மைகள் எண்ணிறந்தன. மேற்கூறிய சான்றையே எடுத்துக்கொள்வோம்: ஒரு கிராமத்தில் கூட்டுறவுப் பண்டசாலை இருப்பின், அதுவே உற்பத்தியாளரிடமிருந்து நேரே பொருள்களை விலைக்கு வாங்கலாம். இதனால் இடையிலுள்ள மொத்த வியாபாரி, சில்லறை வியாபாரி ஆகியோருக்கு இடமில்லாமற் போகிறது. அவர்கள் அடையும் இலாபத்தைக் கூட்டுறவுப் பண்டசாலையே பெறுகிறது. ஆனால், கூட்

டுறவுப் பண்டசாலையின் சொந்தக்காரர்கள் அதில் பண்டம் வாங்குகின்ற மக்களே ஆவர். ஆதலின் சாமான் வாங்கு வோருக்கு இலாபமும் போய்ச் சேருகிறது. மேலும் கூட் டுறவுப் பண்டசாலைகளில் பண்டங்களைச் சுத்தமாகவும் நாணயமாகவும் விற்கமுடியும். விலைப்பணம் கொடுத்தே சாமான்களை வாங்க வேண்டும் என்ற விதி அங்குக் கடைப் பிடிக்கப்படுவதால், அத்தகைய பண்டசாலைகள் தம் உறுப் பினரிடையே ஓரளவு சிக்கன முறையையும் பரப்புகின்றன.

3. கூட்டுறவு இயக்கம் முதன் முதலாக இங்கிலாந்தில் தோன்றியது. அப்பொழுது கூட்டுறவுப் பண்டசாலைகள் மாத் திரமே உருவெடுத்தன. குறிப்பாகத் தொழிலாளிகளுக்கும், ஏழைகளுக்கும் குறைந்த விலையில் பண்டங்களை விற்க வேண்டும் என்ற குறிக்கோளுடனே அவை துவக்கப்பட்டன. நாளடைவில் கூட்டுறவு இயக்கத்தின் நன்மைகளை உணர்ந்த மற்ற வகுப்பினரும் அதில் பங்குகொள்ள ஆவலுற்றனர். இவ்வியக்கமும் மற்ற நாடுகளுக்குப் பரவத் தொடங்கியது. கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டு பண்டசாலைகளை நடத்துவதேயன்றி, மற்றும் பல பொருளாதாரப் பிரச்னைகளையும் தீர்த்துக்கொள்ளலாம் என்று மக்கள் உணர்ந்தனர். வெவ்வேறு நாடுகளில் கூட் டுறவு இயக்கம் வெவ்வேறு துறைகளில் முன்னேறியது. பால் பண்ணைகள் மிகுந்த 'டென்மார்க்' நாட்டில், பண் ணைப் பொருள்களைக் கூட்டுறவு முறையிலேயே விற்பனை செய்யும் பொருட்டுப் பல நிலையங்கள் தோன்றின. ஜெர் மனி நாட்டில், ஏழைக் குடியானவர்களுக்குக் கடன் கொடுத்து உதவும் நோக்கத்துடன் கூட்டுறவு நிலையங்கள் தோன்றின. இந்தியாவிலும், குடியானவர்களுக்குக் கடன் கொடுத்து உதவும் பொருட்டே கூட்டுறவு நிலையங்கள் முதன் முதலில் ஏற்படுத்தப்பட்டன.

4. இந்தியா ஒரு பயிர்த்தொழில் நாடு. அதன் மக்க ளில் பெரும்பான்மையோர் கிராமங்களில் பயிர்த்தொழிலை நம்பியே வாழ்கின்றனர். மேலும் நம் நாட்டு உழவர் ஏழைகள் ஆதலால் பயிர்த்தொழிலுக்கான செலவுகளுக்கு அவர்கள் ஆண்டுதோறும் கடன் வாங்கும் நிலையில் இருக்

கின்றனர். விதை வாங்குதல், எருவிடுதல், கலப்பை, ஏர் போன்ற பயிர்த்தொழிற் கருவிகளை வாங்குதல் ஆகிய செலவுகளுக்குக் கடன் வாங்க ஏழை உழவர் கிராமத்தி லிருக்கும் செல்வர்களிடம் செல்லவேண்டுபவராகின்றனர். அவர்கள் அதிக வட்டி வாங்குவதுடன், கடன் பத்திரம் எழுது வதிலும் உழவர்களை ஏமாற்றுகிறுர்கள். ஆகவே உழவர் களால் கடனை உரிய காலத்தில் திருப்பித்தர முடிவதில்லை. நாளடைவில் கடனுக்காக, தன் நிலத்தையே விற்றுவிட்டு, உழவன் பல இன்னல்களுக்கு உள்ளாகின்றுன். இத்தகைய சீர்கேடான நிலைமையை இயன்ற வரை தடுத்து ஏழை உழ வர்களுக்குக் குறைந்த வட்டிக்குப் பணம் கொடுத்து உதவும் பொருட்டுக் கூட்டுறவு நிலையங்கள் கிராமங்களில் துவக்கப் பட்டன. அதில் சேரும் உறுப்பினர்கள் ஒரு சிறு தொகையை முதலீடாகப் போடுகிறுர்கள். இந்த முதலீட்டுத் தொகையிலிருந்தும், அரசாங்கத்தினிடமிருந்து கடனுகப் பெறும் தொகையிலிருந்தும் உழவர்களுக்குக் குறைந்த வட்டி யில் கடன் கொடுக்கப்படுகிறது. அக்கடனைப் பல தவணை களில் சிறு தொகைகளாகத் திருப்பிக் கொடுக்க வசதி இருப் பதால், உழவர்கள் கடனை எளிதில் தீர்த்துவிடுகிறுர்கள்.

5. கிராமக் கூட்டுறவு நிலையங்கள் கடன் கொடுப்ப தோடுமட்டுமன்றி, பிற துறைகளிலும் உழவர்களுக்கு உதவ முடியும். ஏதேனும் ஒரு தானியம் பயிர் செய்த உழவன், அதை அருகிலுள்ள நகரத்திற்குக் கொண்டு போய் விற்றுல், அத்தானியத்திற்கு நியாயமான விலை கிடைக்காமற் போக லாம். ஆனுல் கிராமத்திலுள்ள உழவர்கள் தங்கள் தானியங் களைக் கூட்டுறவு நிலையத்தின் மூலம் விற்றுல், அவைகளுக்கு நியாயமான விலை கிடைப்பது திண்ணம். ஏனெனில், கூட் டுறவு நிலையம் ஒரு தனி மனிதனைவிடப் பொருளாதார வலிமை மிகுதியாகப் பெற்றிருப்பதால், வாணிகர் பலருடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி, தன் உறுப்பினர்களுக்கு நியாயமான விலையை வாங்கிக் கொடுக்க இயலும்.

6. கூட்டுறவு இயக்கம் நம் நாட்டில், சிறப்பாகச் சென்னை மாகாணத்தில் மிகவும் வளர்ச்சி அடைந்திருக் கிறது. சென்னை மாகாணத்தில் மட்டும் 13,000-க்கு மேற்

பட்ட கிராமக் கூட்டுறவு நிலேயங்கள் வேலே செய்து வரு கின்றன. அந்நிலேயங்களுக்கு வேண்டிய பணத்தைக் கொடுத்து உதவ ஒவ்வொரு மாவட்டத்திலும் அவற்றை உறுப் பினராகக் கொண்ட 'நடு நிலேயங்கள்' ஏற்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் நிருவகிக்கச் சென்னேயில் ஒரு 'மாகா ணக் கூட்டுறவு பாங்கி' இருக்கிறது.

7. கிராமக் கூட்டுறவு நிலேயங்கள், உழவர்களுக்குக் குறுகிய காலக் கடன்களேக் கொடுத்து உதவுகின்றன. நிலத்தைச் சீர்திருத்துவது, கிணறு தோண்டுவது, விசை இயந்திரங்கள் வாங்குவதுபோன்ற செலவுகளுக்காக, உழவர் களுக்கு நீண்ட காலக் கடன்களும் தேவையாகின்றன. இத்தேவையை நிறைவு செய்யும் பொருட்டுக் கூட்டுறவு முறையில் 'நில அடமான பாங்கிகள்' ஏற்படுத்தப்பட் டுள்ளன. இவற்றிற்கெல்லாம் மேலாகச் சென்னேயில் ஒரு 'நடு நில அடமான பாங்கி'யும் உள்ளது.

8. கடன் கொடுப்பதைத் தவிர, வேறு துறைகளிலும் நம் மாகாணத்தில் கூட்டுறவு இயக்கம் சிறந்த தொண்டாற்றி வருகிறது. பல நகரங்களில் கூட்டுறவுப் பண்டசாலேகள் சிறந்த முறையில் நடைபெற்று வருகின்றன. சென்னேயி லுள்ள 'திருவல்லிக்கேணி நகரக் கூட்டுறவு நிலேயம்' இந்தி யாவிலேயே மிகப் பெரிய கூட்டுறவு பண்டசாலேயாகும். விலேக்கட்டுப்பாடு செய்யப்பட்ட பொருள்களே, மக்களுக்குக் கட்டுப்பாட்டு விலேக்கு விற்பனே செய்யக் கூட்டுறவுப் பண்ட சாலேகள் பெரிதும் பயன்படுகின்றன.

9. கைத்தறி நெசவாளர்கள் பல கூட்டுறவு நிலேயங் களே அமைத்துக்கொண்டிருக்கின்றனர். தங்களுக்கு வேண் டிய நூலேக் கூட்டுறவு முறையில் வாங்குவதுடன், தாங்கள் நெய்யும் துணி வகைகளேயும் அந்நிலேயங்கள் மூலம் அவர்கள் விற்பனே செய்கின்றனர். தங்களுடைய நியாய மான விருப்பங்களே நிறைவேற்றிக் கொள்ளவும் கூட்டுறவு நிலேயங்கள் அவர்களுக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

10. நகரங்களில் நல்ல பால் கிடைப்பது அரிதாயிருப்ப தால் பல கூட்டுறவுப் பால் பண்ணேகளும் கூட்டுறவுப் பால் விற்பனே நிலேயங்களும் தோன்றியுள்ளன. சிறு பண்

ணைகள் வைத்திருப்போர் இந்நிலையங்களில் உறுப்பினரா கின்றனர். தங்கள் பண்ணைகளில் கிடைக்கும் பாலைக் கூட் டுறவு முறையில் விற்பனை செய்வதுடன், தங்கள் மாடு களுக்கு வேண்டும் வைக்கோல், பிண்ணுக்கு முதலிய பொருள்களையும் அவர்கள் அந்நிலையங்கள் மூலம் வாங்கிக் கொள்கிருர்கள்.

11. அண்மையில், இராணுவத்திலிருந்து திரும்பிவந்த போர் வீரர்களுக்காகப் பல கூட்டுறவு நிலையங்களும், மது விலக்கு மூலம் வேலையிழந்த கள்ளிறக்குவோருக்காகக் கூட் டுறவுக் கைத்தொழில் நிலையங்களும் அரசாங்கத்தாரால் தோற்றுவிக்கப்பட்டன. நகரங்களில் இடநெருக்கடியைத் தவிர்க்கவும் எளிய முறையில் வீடு கட்டிக் கொடுக்கவும் வீடு கட்டும் சங்கங்கள் பல கூட்டுறவு முறையில் செயலாற்ற முன் வந்துள்ளன.

12. இவ்விதம் கூட்டுறவு இயக்கம் பல துறைகளிலும் நாட்டிற் பரவியுள்ளது. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு. ஆகவே, மக்கள் ஒன்றுபட்டுத் தத்தம் தேவைகளுக்கேற்றபடி கூட்டுறவு நிலையங்களை ஏற்படுத்திக்கொண்டு பயன்பெற லாம். 'ஒவ்வொருவரும் எல்லோருக்காகவும், எல்லோரும் ஒவ் வொருவருக்காகவும்' என்பதே கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படைத் தத்துவமாகும். இதை நன்குணர்ந்து, நேர் மையாக நடந்துகொள்வோமானுல், நம் நாடு செழிப்புறும்; நம் மக்களின் வாழ்க்கை நிலை உயரும்; எங்கும் இன்பம் பெருகும்.

### அருஞ்சொற்பொருள்

சான்று - உதாரணம். இன்றியமையாதவை - அவசியமானவை. பண்டம் + சாலை = பண்டசாலை. மொத்த வியாபாரி - பொருள்களை மொத்த மாக விற்கும் வியாபாரி. சில்லறை வியாபாரி - பொருள்களைச் சில்லறை யில் (சிறிது சிறிதாக) விற்கும் வியாபாரி. துறை - வழி.

### கேள்விகள்

1. கூட்டுறவு நிலையம் என்பது யாது?
2. கூட்டுறவு இயக்கக் கடையில் சாமான்களை வாங்குவதற்கும் வேறு கடைகளில் வாங்குவதற்கும் உள்ள வேறுபாடு என்ன?

3. கூட்டுறவு இயக்கம் எவ்வாறு தோன்றியது ?

4. கூட்டுறவுச் சங்கத்தை அமைப்பது எப்படி ?

5. கூட்டுறவுச் சங்கத்தால் உழவர் எவ்வாறு நன்மை அடைதல் கூடும் ?

6. கூட்டுறவு இயக்கம் நம் மாகாணத்தில் எவ்வாறு வளர்ந்திருக் கிறது ?

### பயிற்சி

1. சேர்த்து எழுதுக :—இதற்கு + சான்ருக, உப்பு + போன்ற, அ + பண்டம், சில்லறை + கடை, நிலேயத்தை + திற, கூட்டு + உறவு, கூட்டுறவு + பண்டசாலே, போய் + சேர், உரு + எடுத்தன, உறுப்பினர் + இடையே, முன் + ஏறியது, வேறு + வேறு.

2. பிரித்துக் காட்டுக :—பயிர்த்தொழில், திருப்பித்தர, வட்டிக்குப் பணம், முதலீடு, சீட்டுத்தொகை, திருப்பிக்கொடுக்க, சிறுதொகை, கிராமக்கூட்டுறவு, மட்டுமன்றி, கொடுப்பதோடு, பெற்றிருப்பது, வாங்கிக் கொடுக்க, மாகாணக் கூட்டுறவு.

3. வாக்கியங்கள் அமைத்து எழுதுக :—சிக்கனமாக, கூட்டுறவு முறையில், பால் பண்ணே, பல திறப்பட்ட, குறிக்கோள், இன்னல், நடை பெற்று, பண்டசாலே.

4. இப்பாடத்தின் ஒவ்வொரு பத்தியையும் (பாரா) படித்து, ஏற்ற தலேப்புத் தருக.

5. கூட்டுறவு இயக்கம் யாது, அதனே அமைக்கும் முறை, அதன் நலன்கள், மேனுடுகளில் கூட்டுறவு இயக்கம் - இக்குறிப்புக்களேக்கொண்டு 'கூட்டுறவு இயக்கம்' என்ற தலேப்பில் ஒரு கட்டுரை வரைக.

6. நமது மாகாணத்தில் கூட்டுறவுச் சங்கங்கள்' என்னும் தலேப் பில் ஒரு கட்டுரை எழுதுக.

7. 'மாணவர் கூட்டுறவு நிலேயம்' ஒன்றை நீங்கள் அமைப்பதாகக் கொண்டு, அதற்குச் செய்ய வேண்டுவன முதலியன பற்றி ஒரு கட்டுரை வரைக.

8. கூட்டுறவுக் கடைகளுக்கும் பிற பொதுக் கடைகளுக்கும் இடை யில் உள்ள வேறுபாட்டினே விளக்குக.

9. கூட்டுறவு இயக்கத்தால் உழவர்கள் பெரும்பயன் அடையக்கூடும் என்பதை விளக்கிக் காட்டுக.

# 9. சோழமாதேவி

## (நாடகம்)

திரு. வி. நரசிம்ம ஐயர் அவர்கள், M. A.

[இவ்வாசிரியர் பல பள்ளிகளில் தமிழாசிரியராயிருந்து ஓய்வு பெற்ற வர்; பள்ளிக்கூட நூல்கள் எழுதியுள்ளார்; வரலாற்றுத் தொடர்பான நாடகங்களை எழுதுவதில் வல்லுநர். இவர் எழுதியுள்ள "சோழமா தேவி" என்னும் நூலிலிருந்து இக்காட்சி எடுக்கப்பட்டுள்ளது.]

## அங்கம் 2; களம் 6

### கூண்டுக் கிளி

**இடம்:** ஒரு தாழ்ந்த வீடு.
**காலம்:** நள்ளிரவு.
**நடிகர்:** விக்கிரமன், கங்காபெருமானடிகள், மாயாதேவி, சோழமா தேவி.

**முன்தொடர்பு:** முதல் இராசேந்திரனுக்கு மூன்றும் மகனுன வீர ராசேந்திரனுக்கும் சாளுக்கியருக்கும் துங்கபத்திரைப் பிரதேசத்தில் போர் நடந்தபடி யிருந்தது. அப்பொழுது சாளுக்கிய இளவரசனுன ஆறும் **விக்கிரமாதித்தன்** (விக்கிரமன்) தன் புலவரான பில்ஹணருடன் சோணட்டின் படைவன்மையை அறிய மாறுவேடத்தில் வந்தான்; சோழ நாட்டின் பல பகுதிகளிலும் சுற்றினுன். ஒரு நாள் அவன் கொள்ளிடக் கரையில் வீரராசேந்திரன் மகளான-பகைவர் கையில் சிக்க இருந்த-சோழ மாதேவியைக் காப்பாற்றினுன்; அதுமுதல் அவளை மணக்க விரும்பி, அவளுக்கு இடையூறு விளைத்த பகைவர் நடவடிக்கைகளைக் கவனித்தான். பகைவர் தலைவனுன கங்காபெருமானடிகள் அவளைச் சித்தன்னவாசலிற் சிறை வைத்திருப்பதை அறிந்து, விக்கிரமன் அவளை மீட்கும் செய்தி இக் களத்திற் கூறப்பட்டுள்ளது.

[விக்கிரமன் சித்தன்னவாசலில் சமணர் போக்குவரத்தால் ஒரு வாறு அடிகளின் இருப்பிடத்தைத் தெரிந்துகொண்டு, மாதேவியைச் சிறை வைத்திருக்கும் இடத்தையும் அறிந்து கொள்கிறுன். நள்ளிரவில் ஆங்குப்போந்து நிற்கின்றுன். கங்கா பெருமானடிகள் வருகின்றுர்? தாழ்ந்த வீட்டைத் தட்டுகின்றுர். அங்கு மெய்க்காவலாக இருக்கும் மாயா தேவி என்னும் சமண சந்யாசினி எதிர்ப்படுகிறுள்.]

**விக்கிரமன்:** (தன்னுள்) நாம் பகலில் பார்த்த குகை யின் சிறப்பென்ன? இப்பொழுது பார்க்கும் காட்டின் இரு ளென்ன? மனிதரற்ற காடு. ஒரே தனி வீடு. நள்ளிரவு. எங்

கும் அமைதி. ஆந்தையின் அலறல். நரிகளின் நீண்ட ஊளையொலி. இதனூடே என்ன? யாரோ நடமாடுவது போலிருக்கிறதே? அடிகளார்தாம். நலமே! சற்று மறைந்து இருந்து இங்கு நடப்பனவற்றைக் கவனிப்போம்.

[கங்காபெருமானடிகள் வீட்டருகில் வந்து கதவைத் தட்டுகிறார்]

அடிகள்: மாயா, மாயா!

மாயாதேவி: இதோ வந்துவிட்டேன், சுவாமி! இவ்வளவு பொழுது ஆகிவிட்டதா தாங்கள் இங்கு வந்து சேர?

அடிகள்: ஆமாம், ஊரடங்கித்தானே நான் வெளிக் கிளம்ப வேண்டும். இன்று குகைக் கோயிலுக்குப் பலர் வந்து போனதால், ஊரில் நடமாட்டம் மிகுந்திருந்தது. சற்று அரவம் அடங்கியதும் புறப்பட்டு வந்தேன்.

மாயா: இன்று குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி எதுவும் நேரவில்லை. யாவும் அமைதியாகவே இருக்கின்றன.

அடிகள்: கூண்டுக் கிளி எப்படி இருக்கிறது?

மாயா: கிளியா? உண்ணாவிரதம் மேற்கொள்ளப் பழகிக்கொண்டிருக்கிறது.

அடிகள்: அதுவே தக்கது. தானே விரைவில் கட்டறுத்து வீடு பெறுவதற்கு அதுவே தக்க வழி. அவ்வாறே யாகட்டும். நிற்க. கிளி பேறு பெற்றால், இவ்வீட்டினுள்ளே அமைதியாகச் சமாதி எழுப்பிவிடுவோம். நாளாக நாளாக எனது நடமாட்டம் இங்கிருக்கவே, ஐயப்பாடு பலவாக எழலாம். இங்கும் யாரேனும் வந்தாலும் வரலாம். எதற்கும் நாம் விழிப்பாகவே இருந்துவரல் வேண்டும்.

மாயா: சுவாமிகளுக்கே ஐயப்பாடு தோன்றுகிறது போலும்! நானிருக்க அச்சமேன்? நான் மிகவும் கருத்தாகவே இருந்துவருகிறேன்.

அடிகள்: அதற்குச் சொல்ல வரவில்லை. உன்னையும் பலர் காண வரக்கூடும். அதனால்தான் சொல்ல வந்தேன்.

மாயா: நான் பகலெல்லாம் அதோ அம்மரத்தடி யிலேயே யோகத்தில் ஆழ்ந்திருக்கிறேன். என்னைக் காண வருகிறவர்கள் அங்கேயே நின்று என்னைப்பார்த்து வணங்கிப் போய்விடுகிறார்கள். இங்கு ஒரு காக்கை, குருவிகூடக் கிளியை அணுகாது. நீங்கள் கவலைப்பட வேண்டா.

**அடிகள் :** அது சரி. எல்லாம் இன்னும் இரண்டு மூன்று நாட்களுக்குத்தானே. அதன் பின் கிளி பேரின்பம் பெற்றுவிடும்.

**மாயா :** நமது கொள்கைப்படி எவ்வுயிர்க்கும் நாம் அன்பாகவே இருப்போம். நாமாக எவ்வுயிர்க்கும் இடர் உண்டாக்க மாட்டோம். அடியார்கள் வழியாக வீடுபெற அக்கிளி கொடுத்து வைத்திருக்க வேண்டுமே !

**அடிகள் :** கவனமாகவே யிருப்பாய். நான் சென்று வருகின்றேன்.

[அடிகள் வெளியே வருகிருர். மாயா கதவை மூடிவிடுகிருள். மாற்றுருவில் இருக்கும் விக்கிரமன் திடீரென்று வெளிப் படுகிருன்.]

**விக் :** சுவாமிகாள் ! வீணுகக் கிளியை ஏன் தானே வீடு பேறு அடையும்படி விடவேண்டும் ? என்னிடம் ஒப் படைத்துவிடுங்கள். யான் அதனைக் கண்ணுங் கருத்து மாய் இமையில் வைத்துக் காப்பதுபோல் பாலும் பழமும் அளித்துப் பாதுகாப்பேன். தயவுசெய்து என்னிடம் கிளி யைக் கொடுத்துவிடுகிறீர்களா ?

**அடிகள் :** யாரப்பா நீ ! கிளியாவது, வீடாவது, பேரு வது ! நீ என்ன பித்துப் பிடித்தவனே ?

**விக் :** ஐயனே, நீங்கள் பேசிக்கொண்டதிலிருந்து கிளியொன்று இறந்துகொண்டிருக்கிறது என்று அறியலா னேன். 'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' என்னும் கொள்கை யைக் கடைப்பிடிக்கும் மெய்யன்பருள் யானும் ஒருவன்.

**அடிகள் :** அடே ! என்ன கூறுகிருய் ? நீயும் வீடு பேற்றை விரும்புகிருயோ ? இப்பொழுதே பெற்றுக்கொள்.

[என்று கூறிக்கொண்டே சரேலெனத் தம் இடுப்பில் ஒளித்து வைத்திருந்த குத்துவாளை ஓங்கி விக்கிரமன்மேல் பாயத் தொடங்கினர். விக்கிரமன் தன் உடைவாளை வீசித் தற்காத் துக்கொண்டான். ஆவேசம் மேலிட்ட அடிகள் புலியெனப் பாய்ந்தார். விக்கிரமன் மானெனத் துள்ளி ஒதுங்கினன். அடிகளார் மண்ணைக் கௌவினர். விக்கிரமன் உடைவாள் அவர் முதுகைக் கிழித்தது.]

**அடிகள் :** ஆ ! ஆ ! ஐயகோ ! ஆ ! மாயா ! மாயா ! ஓடிவா. உயிருடன் மன்ருடுகிறேன்.

[மாயா கதவைத் திறந்துகொண்டு ஓடோடியும் வந்து அடிகளாரைக் கவனிக்கலானாள். விக்கிரமனும் நொடியளவில் வீட்டினுள் பாய்ந்து சென்று கதவை அடைத்துக்கொண்டான்; வீட்டில் ஒருபுறம் பூட்டியிருந்த கதவை உடைத்து உள்ளே செல்கிறான். விளக்கொளியே இல்லாத அந்த அறையில் எதுவும் புலனாகவில்லை.]

விக்: அப்பா! என்ன இருள்! என்ன நெடி! இஃதொன்றே பாதுகாப்பான இடமாகவுள்ளது. இங்கே யாரையும் காணோமே! ஆ! ஈதென்ன, கீழே யாரோ முனகுவதுபோல் செவிப்படுகிறதே! ஆம், அவள்தான்! அவளேதான்! அன்பே! மாதேவி! மாதேவி! இங்குத் தானிருக்கிறாயா?

[சுருண்டு கீழே படுத்திருந்த மாதேவி இக்குரல் கேட்டு,]

மாதேவி: யாரது, யாரது! அறிந்த குரலாயிருக்கின்றதே!

விக்: மாதேவி, பகைவன் அல்லன் யான். உன்னிடம் முன்பு மோதிரம் பெற்ற வீரனே நான். உன்னை விடுவிக்கவே வந்தேன். சதிகாரன் ஒழிந்தான். புறப்படு, புறப்படு. ஆபத்திற்குப் பாவமில்லை. உன்னால் நடக்க இயலாது. உன்னைத் தாங்கியவாறே வெளியேற்றுகிறேன்.

[விக்கிரமன் மாதேவியைத் தூக்கிச் செல்லல்.]

### அருஞ்சொற்பொருள்

கட்டறுத்து - உடற்கட்டை நீக்கிக்கொண்டு. வீடு - விடுதலை, மோட்சம். பேரின்பம் - மோட்சம். சதிகாரன் - கேடு சூழ்ந்தவன்.

### கேள்விகள்

1. விக்கிரமன் யாவன்?
2. அவன் ஏன் சித்தன்னவாசலுக்குச் சென்றான்?
3. ‘கூண்டுக்கிளி என்பதன் பொருள் யாது?
4. மாதேவி எவ்வாறு மீட்கப்பட்டாள்?

### பயிற்சி

1. இக்காட்சியை விக்கிரமனே கூறுவதுபோல எழுதுக.

2. சோழ மாதேவி சிறை மீட்கப்பட்டதை அடிகள் கூறுவதுபோல வரைக.

3. சோழ மாதேவி தான் சிறைமீட்கப்பட்டதை விளக்கித் தன் தந்தைக்கு எழுதுவதுபோல ஒரு கடிதம் எழுதுக.

# 10. விபுலானந்தரின் நற்பண்புகள்

வித்துவான் R. பழநியாண்டி முதலியார் அவர்கள்

[இவ்வாசிரியர் கடலூர் - தூய பால் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர். இவர் எழுதியுள்ள "முத்தமிழ்ப் புலவர்" என்னும் நூலிலிருந்து இப்பாடம் எடுக்கப்பட்டுள்ளது.]

**விபுலானந்தரின் வரலாற்றுச் சுருக்கம் (கி. பி.) 1894—1947 :** இவர் ஈழநாட்டுத் தமிழர் ; மயில்வாகனர் என்னும் இயற் பெயரினர் ; வேளாளர் ; பி. எஸ்ஸி. பட்டமும் தமிழிற் பண்டிதர் பட்டமும் பெற்றவர் ; துறவியாகி இராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்தவர் ; அம்மடத்தார் நடத்திவரும் பள்ளிகளை வளமுறச் செய்தவர் ; தாமே சில இடங்களிற் பள்ளிகளை வைத்து நடத்தினவர் ; அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராயிருந்தவர் ; தமிழிசை ஆராய்ச்சி செய்து யாழ்நூல் எழுதி அழியாப் புகழ் பெற்றவர் ; வேறு பல கட்டுரைகளும் நூல்கள் சிலவும் எழுதினவர் ; இறுதியில் இலங்கைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராயிருந்து காலமானவர்.

1. **தமிழ்த் தொண்டு :** ஒவ்வொரு தமிழனும் தன் தாய்மொழிக்குத் தன்னுல் இயலும் தொண்டினைச் செய்தல் வேண்டும் என்பது அடிகள் கருத்து. அதனை அவர் பல கூட்டங்களிற் கூறியுள்ளார். அவர் தம் வாழ்க்கையில் அதனைச் செய்து காட்டினுர் ; தம்மளவில் எல்லாத் தமிழ் நூல்களையும் ஐயந்திரிபறக் கற்ருர் ; தாம் ஆராய்ந்தறிந்த உண்மைகளை நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளிப்படுத்தித் தமிழ் மக்கட்கு உதவினுர் ; இறந்தொழிந்த தமிழ் இசை அறிவை **யாழ்நூல்** வாயிலாகப் புதுப்பித்தார். இஃதொன்றே அப்பெரியார் பெயரை நிலைநிறுத்தப் போதியதாகும். அவர் தம்மைக் காணவரும் தமிழ் நண்பர்களுடன் தமிழ் நூல்களைப் பற்றியே பேசுவார் ; அவற்றின் சிறப்பியல்புகளை அவர்கள் மனத்திற் பதியவைத்துத் தமிழின்பால் பற்றுள்ளம் கொள்ளச் செய்வார். முற்றும் துறந்த முனிவராக இருந்தும் அவர் தாய்மொழியினிடம் கொண்டிருந்த பற்று அளவிடற்கரியது என்பது அவர் வாழ்க்கையிலிருந்து நாம் நன்கறியலாம். அடிகளது தமிழ் நடை செய்யுள் நயம் பொருந்தியது ; நல்ல தமிழ்ச் சொற்களைப் பெற்றது ; படிக்கப் படிக்க இன்பம் அளிப்பது. அவர், "தமிழர் சங்க நூற்

களையும் சைவ சித்தாந்த சாத்திரங்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, அவற்றின் சிறப்பை மேனுட்டாரும் பிறரும் அறியுமாறு செய்யவேண்டும்,'' என்று பல சமயங்களிற் கூறியுள்ளார்.

2. **அடிகளும் மறுமலர்ச்சிக்காரரும் :** ''இக்காலத்தில் எழுவாய் பயனிலைப் பொருத்தங்கூட இல்லாமல் தமிழ் எழுதும் மறுமலர்ச்சிக்காரர் பலரால் தமிழ்நடை வளர்ச்சி பெருது. மறுமலர்ச்சி என்பது தமிழுக்கே சிறப்பாக உண்டான இலக்கண வரம்புகளை மீறி எழுதுவதும் பேசுவதுமாகும் என்று சிலர் நினைக்கின்றனர்......பழைய இலக்கியங்களில் இல்லாத மலர்ச்சியையா இந்த மறுமலர்ச்சிக்காரர்கள் கொண்டுவரப் போகிறுர்கள்? பலர் நம் பொக்கிஷங்களான பழந்தமிழ் நூல்களை வெறுக்கின்றனர்; அவற்றைத் தொடுவதும் இழிவெனக் கருதுகின்றனர். அத்தகையோர் கட்டுரைகளும் கதைகளும் பாட்டுகளும் எழுதிக் குவிக்கின்றனர். அவை அனைத்தும் மணமற்ற வெறும் காட்டுப் பூக்களே ஆகும். பழைய நூல்களில் ஊன்றிப் பயின்று தமிழ் மரபும் பண்பாடும் உள்ளத்தில் மலராவிடில், எழுத்திலும் பேச்சிலும் மறுமலர்ச்சி காண்பதருமை. காலப் போக்குக்கும் நாகரிக வளர்ச்சிக்கும் ஏற்பத் தமிழ்நடை மலரவேண்டுவது வரவேற்கத் தக்கது. ஆயின் மரபும் ஒழுங்கும் தவறிப் போவது இயல்பில் அமைந்த அழகைச் சிதைப்பதாகும்...... அருமையாக எழுதக்கூடிய மறுமலர்ச்சி எழுத்தாளர் பலர் தமிழ் இலக்கியங்களிற் பயிற்சி இன்மையாலோ—பயிற்சிக் குறைவினுலோ—சில இடங்களில் வழுக்கி வீழ்வதைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது. அவர்கள் மனம் வைத்துத் தமிழ்நூற் பயிற்சி பெறின், அவர் தொண்டு சிறப்புறும். பழந்தமிழ்நூற் பயிற்சியுடைய புதுமை எழுத்தாளர்களே தமிழ் நாட்டுக்கு இப்பொழுது தேவையானவர்,'' என்று அடிகள் அடிக்கடி கூறுவது வழக்கம்.

3. **அடக்கமுடைமை :** அடிகள் மும்மொழிப் புலவர்; முற்றும் துறந்த பெரியார். எனினும், அவர் தமக்குத் தமிழறிவை ஊட்டிய ஆசிரியர்களிடம் இறுதி நாள்வரை பேரன்புடனும் மரியாதையுடனும் நடந்துவந்தது குறிப்

பிடத் தக்கது. செருக்குற்று மற்றவரை இழிவாகக் கருதும் மனப்பான்மை அடிகளிடம் இருந்ததில்லை. கற்றூர்–கல்லார், முதியவர்–இளைஞர், வறியவர்–செல்வர் ஆக அனைவரிடத்தும் இனிய முகத்துடன் பேசிப் பழகுதல் அவர் இயல்பு.

4. **பிறரை ஊக்குவிக்கும் பண்பு**: பலர் தம் போன்ற புலவரைக் காணின் பொறாமை கொண்டு அவர் முற்போக்கிற்கு ஊறு செய்தல் இயல்பு. ஆயின், சங்கப் புலவர்கள் ஒருவரை ஒருவர் பாராட்டியே பேசியுள்ளனர். அடிகள் நிறைகுடம் ஆதலின், சங்கப் புலவரை ஒத்திருந்தார்; தம் போன்ற புலவர்களை அவர்களது முயற்சியில் ஊக்கித் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்துள்ளனர். நவநீத கிருஷ்ண பாரதியார் என்பவர் பாடிய பாக்களை 'உலகியல் விளக்கம்' எனப் பெயரிட்டுத் தாமே அதற்கு வாழ்த்தும் பதிகமும் வலிந்து தந்து அச்சிடுவித்து வெளிப்படுத்தினர்; அந்நூற் பாக்களை ஆங்கிலத்தில் வரைந்து பாரதியார் புகழையும் பரப்பினர். இந்த உண்மையை நவநீத கிருஷ்ண பாரதியாரே ஒரு கட்டுரையில் வெளிப்படுத்தியுள்ளார்.

5. "எனது யாழ் நூலை அச்சிட அன்பர் ஒருவர் விரும்புகிறூர்" என்று அடிகள் தம் நண்பர் ஒருவரிடம் குறிப்பிட்டார். அந்த நண்பர், "தங்கள் அன்பர் சிறந்த படிப்பாளி போலும்!" என்றூர். அடிகள், "அந்த அன்பர் பெரிய படிப்பாளியல்லர். ஆயின் தமிழ் ஆர்வம் மிக்கவர்; நற்பண்புகள் பெற்றவர்; பெருஞ்செல்வர். தமிழ் நாட்டிலும் ஈழநாட்டிலும் தமிழ் கற்றூர் பலருள்ளும் காணப்படும் பெருங்குறை ஒன்றுண்டு. அஃதாவது, பிறரிடம் நலன் எதுவும் காண விரும்பாமை ஆகும். அவர் பிறர்பாலுள்ள நலன்களைக் கண்டு பொறாமை கொள்கின்றனர்; வெளியில் உதட்டளவில் புகழ்கின்றனரே தவிர உளமாரப் புகழ்வதில்லை. இதனுல் புலவர்கள் தம்முள் மன ஒற்றுமையின்றிச் சிதறுண்டு சிறப்பிழந்து தவிக்கின்றனர்," என்று மிகுந்த வருத்தத்துடன் கூறினூர்.

6. **ஏழை பங்காளர்**: அடிகள் ஏழைகளிடம் எல்லையற்ற அன்பு கொண்டவர்; அவர்கள் முன்னேறத் தம்மால் ஆயின வெல்லாம் செய்துவந்தவர். அநாதை மாணவர் பலர்

அவரால் கல்வியறிவு பெற்று நன்னிலையில் இருந்துவருகின்றனர். அடிகள் தாழ்த்தப்பட்ட மக்களிடம் பேரன்பும் கழிவிரக்கமும் கொண்டவர். அவர்கள் கல்வி யறிவு பெறத் தம்மால் இயன்றன வெல்லாம் சலியாது செய்தார். அண்ணாமலை நகருக்கு அருகில் இருக்கும் சேரியில் அவர் செய்த தொண்டுகொண்டே அவர் 'ஏழை பங்காளர்' என்று கூசாது கூறலாம்.

7. **சமயப் பற்று :** விபுலானந்த அடிகள் சைவ சமயத்திற் பெரும் பற்றுக்கொண்டவர். சைவ மடங்களிடம் தொடர்பு கொண்டவர். திருஆவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், சூரியனூர் கோவில் ஆதீனங்கள் அவரைப் பெருமைப்படுத்தின; அடிகளது யாழ்நூல் ஆராய்ச்சிக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளை உதவின. அடிகள் சைவ சித்தாந்த சாத்திரங்களில் நல்ல பயிற்சி உடையவர்; சைவ சித்தாந்த ஆண்டு விழாக் கூட்டங்களில் தலைமை வகித்த பெருமை அவருக்கே உரியது. அவர் மதுரை மீனாட்சியம்மன்மீது பெரும்பக்தி கொண்டவர்; தாம் சொற்பொழிவாற்றுவதற்கு முன் கடவுள் வாழ்த்தாக மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் உள்ள ஒரு பாடலை அவர் பாடுவது வழக்கம். அடிகள் தில்லைக் கூத்தப் பிரானிடம் எல்லையற்ற பக்தி கொண்டவர்; இந்தியாவில் இருந்த காலங்களில் எல்லாம் தில்லைக்குச் சென்று சில நாட்கள் தங்கி நடனப் பெருமானைத் தரிசிப்பது வழக்கம். சைவர்க்குத் தில்லை சிறந்த தலமாதல் போல வைணவர்க்குச் சீரங்கம் சிறந்த பதியாகும். அங்குக் கார் முகில் வண்ணன் கிடந்த கோலத்திற் காட்சி அளிக்கிறான். நமது அடிகட்கு அப்பெருமானிடத்தும் ஈடுபாடு இருந்தது.

8. **கற்றாரைப் போற்றல் :** 'கற்றலிற் கற்றாரை வழிபடுதல் நன்று' என்று அடிகள் அடிக்கடி கூறுவது வழக்கம். அப்பெரியார் சிறந்த தமிழ்ப்புலவர்களாகிய சுன்னாகம் குமாரசுவாமிப் புலவர், டாக்டர் உ. வே. சாமிநாதையர், வெ. ப. சுப்பிரமணிய முதலியார், மறைமலையடிகள் முதலிய பெருமக்களிடம் மிக்க அன்பும் மதிப்பும் கொண்டிருந்தார். "தமிழை நன்றாகப் படித்த இப்பெருமக்களை நீங்கள் யாத்திரையாகச் சென்று தரிசிக்கவேண்டும்;

அவர்களுடன் பேசிப் பழகவேண்டும்; அவர்களுடன் சிறிது நேரம் பேசுவது பல நூல்களைப் படித்தறிவதற்கு ஒப்பாகும்,'' என்று அடிகள் தம் மாணவர்க்கும் ஈழநாட்டு நண்பர்கட்கும் கூறியுள்ளனர்.

9. **எல்லோரிடத்தும் அன்பு :** அடிகள் எல்லாச் சமயத்தினரையும் நண்பராகப் பெற்றிருந்தார். முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பௌத்தர்கள், சைவர், வைணவர் முதலிய அனைவரும் அவரை நேசித்தனர்; அவருடன் அளவளாவி மகிழ்ந்தனர். அடிகள் அவ்வச் சமயத்தாருடன் அவரவர் சமயத் தொடர்பான செய்திகளைப் பேசி மகிழ்விப்பது வழக்கம்; அத்துடன் சமரச சன்மார்க்கத்தைப் பற்றியும் பேசுவார்; இந்த நண்பர்களுடன் பேசுகையில் சாதி வேறுபாடுகள் இந்து சமய பலத்தைப் போக்கி வருவதை நன்கு விளக்கிக் கூறிச் சமய ஒற்றுமைக்கு எல்லோரும் பாடுபட வேண்டும் என்று கூறி வற்புறுத்துவார்; ''ஒழுக்கமே உயர்ந்தவன்—தாழ்ந்தவன் என்பதை உறுதிப்படுத்தும் அளவு கருவியே தவிரப் பிறப்பன்று,'' என்று கூறுவார்; நாட்டில் உள்ள சாதிச் சண்டை, மதச் சண்டைகள் ஒழிந்து மக்கள் முன்னேறும் நாள் எந்நாள்!' என்று அடிக்கடி கூறி வருந்துவார்.

10. **முடிவுரை :** அடிகளது வாழ்வு தியாக வாழ்வு. அவர் துறவியாக இருந்தார்; கல்விக்கும் சமயத்துக்கும் தமிழுக்கும் தொண்டாற்றினர்; தமிழ்—ஆங்கிலப் பத்திரிகைகட்கு ஆசிரியராக இருந்தார்; தமிழ் ஆராய்ச்சி நூல்கள் எழுதினர்! கருத்தை ஈர்க்கத்தக்க கட்டுரைகளை வெளிப்படுத்தினர்; ஏழை பங்காளராய்த் திகழ்ந்தார்; நாடெங்கும் சொற்பொழிவாற்றி மக்கட்குத் தமிழ்ப்பற்றையும் சமயப்பற்றையும் வளர்த்தார்; 'தொண்டு செய்யவே பிறவி வேண்டும்' என்றார். இராமகிருஷ்ண மடத்து அடிகளுள் தமிழ் மொழிக்குப் பாடு பட்ட முதற் பெரியார் விபுலானந்தர் என்றே கூறலாம். அப் பெரியாரைப் பெற்றெடுத்த ஈழ நாட்டுக்கு நமது நன்றி உரியதாகுக! அவரது தியாக வாழ்வு நமக்கு நல்வழி காட்டுவதாக!

### அருஞ்சொற்பொருள்

சங்க நூல்கள் - புறநானூறு முதலிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள், தொல்காப்பியம் முதலியன. சைவசித்தாந்த சாத்திரங்கள் இவை திருவுந்தியார் முதலிய 14 நூல்கள்; கி. பி. 12, 13, 14-ஆம் நூற்றுண்டுகளைச் சேர்ந்த நூல்கள். ஊன்றி - அழுத்தமாக. பயின்று - கற்று. பண்பாடு - நாகரிகச் சத்து (Culture). மும்மொழி - ஆங்கிலம், தமிழ்,வடமொழி. நிறைகுடம் - கல்வி நிறைந்தவர். நவநீத கிருஷ்ண பாரதியார் - ஈழநாட்டில் உள்ள பெரும் புலவருள் ஒருவர். கழி - மிக்க, உரிச்சொல். கார்முகில் - கரியமேகம். வண்ணன் - நிறத்தவன். ஈடுபாடு; அன்பு. சுன்னுகம் குமாரசுவாமிப் புலவர் - இவர் யாழ்ப்பாணத்தவர் - பெரும் புலவர்; பல நூல்களுக்குப் புத்துரை வரைந்து புகழ்பெற்றவர்.

### கேள்விகள்

1. அடிகள் தமிழுக்குச் செய்துள்ள தொண்டு யாது?
2. சங்க நூல்கள் என்பன யாவை?
3. சைவசித்தாந்த சாத்திர நூல்கள் எவை?
4. எவை மணமற்ற காட்டுப் பூக்கள் ஆகும்?
5. தமிழில் மறுமலர்ச்சி எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பது அடிகள் கருத்தாகும்?
6. தமிழ்நாட்டுக்கு எத்தகைய எழுத்தாளர் இப்பொழுது தேவையானவர்?
7. அடிகள் அடக்கம் மிக்கவர் என்பதை எவற்ருல் அறியலாம்?
8. இக்காலப் புலவர்கள் சிறப்பிழந்து தவிப்பதற்குக் காரணம் என்ன?
9. அடிகள் ஏழை பங்காளர் என்று கூறத்தக்க சான்றுகள் எவை?
10. அடிகளைச் சிறப்பித்த ஆதீனங்கள் எவை?
11. அடிகள் பெரும் புலவர்களைப்பற்றித் தம் மாணவர்க்கும் நண்பர்க்கும் கூறியன யாவை?
12. அடிகள் தம் இந்துசமய நண்பர்களுடன் பேசுகையில் கூறியன யாவை?

### பயிற்சி

1. அடிகளுடைய தமிழ்த்தொண்டும் மறுமலர்ச்சி பற்றிய அவரது கருத்தும் விளக்கி ஒரு கட்டுரை வரைக.
2. அடிகளின் சிறந்த பண்புகளைத் தொகுத்து எழுதுக.
3. இந்து சமயத்தைப்பற்றிய அடிகள் கருத்தினை எழுதி, அது பற்றி உங்கள் கருத்தையும் தெரிவிக்க.

# 11. மலையமான் திருமுடிக்காரி

**வித்துவான் ஆ. பூவராகம் பிள்ளை அவர்கள்**

[இவ்வாசிரியர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர்; சிறந்த புலவர். இப்பாடம் இவர் எழுதியுள்ள "புலவர் பெருமை" என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.]

1. சங்க காலத்தில் வாழ்ந்த **மலையமான் திருமுடிக் காரி** வீரம், கொடை இரண்டிலும் சிறந்து விளங்கினன்; திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தனன். அக்காலத்து விளங்கிய முடிமன்னர், குறுநில மன்னர் யாவரும் தனியே தம் படைகொண்டு அவனை எதிர்த்துப் போர்புரிய அஞ்சினர். அதுமட்டுமின்றி அக் காலத்து மன்னருள் ஒருவர் மற்றொருவரோடு போர்புரியத் துணிந்தால், மலையமான் திருமுடிக்காரிக்குப் பெரும் பொருள் கொடுத்து, அவனைத் தமக்குப் போர்த்துணை வருமாறு அழைப்பர். மலையமானைத் துணையாகப் பெற்ற அரசர் போரில் வெற்றிபெறுதலும், அவனைத் துணையாகப் பெருதர் போரில் தோல்வியுறுதலும் உறுதியாயின. இவ்வாறு மலையமானைத் துணையாக அழைப்பதற்குப் பிற மன்னர்களால் அனுப்பப்படும் தூதர்கள் திருக்கோவலூரில் எப்போதும் காணப்படுவார்கள். 'மலையமானைத் துணையாகப் பெற்று வெற்றிபெற்ற' மன்னனும் அவனைப் புகழ்வான்; அவனைத் துணையாகப் பெருமையால் தோல்வியுற்ற மன்னனும் அவனைப் புகழ்வான்,' என்று வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனர் என்ற புலவர் அவன் வீரத்தை அழகாகப் பாராட்டிக் கூறினர். வென்ற மன்னன், "மலையமானைத் துணையாகப் பெற்றதனுல் யான் வென்றேன்!" என்று கூறுவான்; தோற்ற மன்னன், "மலையமான் பகைவன் பக்கம் துணையாகச் சேர்ந்ததனுல் யான் தோற்றேன்; இன்றேல் யான் தோல்வியுருமல் வெற்றியே பெற்றிருப்பேன்" என்று கூறுவான். இவ்விருவர் கூற்றுகளும் மலையமான் வீரச் சிறப்பையே விளக்குகின்றன அல்லவா?

2. மலையமான் இவ்வாறு போருக்குத் துணையாகச் செல்லுமிடங்களில் அவ்வம் மன்னர் கொடுக்கும் பெரும்

பொருள்களையும் தன்னாட்டிற் கிடைக்கும் பெரும் பொருள் களையும் கொண்டு, 'இல்லை' என்று வந்து இரக்கும் வறியவர்க்கு அவர் வேண்டுமளவும் வழங்குவானாயினன். இவன்பாற் சென்று பொருள் பெறாமல் திரும்பியவர் ஒருவரு மிலர் என்று புகழப்பட்டான். முள்ளூர் மலை இவனுக்குரிய சிறந்த மலையாகும்.

3. இவன் வீரச் சிறப்பைக் கண்டு பிற மன்னர் சிலர் இவனிடத்துப் பகைமை கொள்வராயினர். இவனது துணை பெருமையால் போரில் தோற்ற மன்னர் இவன் வீரச் சிறப் பைக் கண்டு ஒருவாறு புகழ்ந்தனராயினும், இவனிடம் பகைமைகோடல் இயல்பேயன்றோ? அவர்தம் கோபம் பெருகுமாறு மலையமான் ஒரு காரியம் செய்தனன்.

4. கொல்லிமலை மிகச் சிறந்த வளமுடைய மலை. அம் மலையில் தேனும் பலாப்பழமும் மிக அதிகமாகக் கிடைக்கும். அம்மலை வழிவழியாகச் சேர அரசர்க்கு உரியது. ஆயினும், வள்ளல் எழுவர் வாழ்ந்தகால எல்லையில் வல்விலோரி என்ப வன் அம்மலையைத் தனக்குரியதாகக் கொண்டிருந்தனன். அம்மலை அவனுக்கு எவ்வாறு உரியதாயிற்று என்பது தெரிந்திலது.

5. வல்விலோரியும் மிகச் சிறந்த வீரமுடையவன்; அம்பு விடுவதில் மிகச் சிறந்த ஆற்றலும் பயிற்சியுமுடைய வன். அவன் ஓரம்பு தொடுத்து ஒரு விலங்கின்மேல் விடுவா னாயின், அவ்வம்பு அவ்விலங்கினைமட்டும் கொன்றமையாது, அவ்விலங்கைத் துளைத்துக்கொண்டு அப்பாற்சென்று ஆண்டு அதற்கு இலக்காகும் வேறு சில விலங்குகளையும் கொல்லுந் தன்மையதாகும். அவ்வளவு விசையோடு அம்பு தொடுத்துவிடும் ஆற்றலுடையவன் வல்விலோரி.

6. அவ்வல்விலோரியின் ஆட்சிக்குட்பட்டிருந்தகொல்லி மலை, வழிவழியாகத் தங்கட்கு உரிமையுடையது என்பது கொண்டு, அதனைக் கைப்பற்றக் கருதினான் பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர அரசன். ஆனால் பெருஞ் சேரல் இரும்பொறை வல்விலோரியோடு போர்புரிய எண்ணங் கொண்டிலன். வல்விலோரியைத் தான் வெல்லுதல் இயலாது என்றெண்ணியோ, முடிகெழு வேந்தனாகிய தான் குறுநில

மன்னனுகிய வல்விலோரியோடு போர்புரிதல் தன் பெருமைக்கு இழுக்காகும் என்றெண்ணியோ, தான் வல்விலோரியோடு போர் புரியாமல் மலையமான் திருமுடிக்காரியை அழைத்துப் போருக்கனுப்பினுன்.

7. வல்விலோரியும் சிறந்த வீரனுதலின், அவனுக்கும் மலையமானுக்கும் பெரும்போர் நிகழ்தலாயிற்று. ஆயினும், இறுதியாக வல்விலோரி போரிற் கொல்லப்பட்டான் ; மலையமான் வெற்றிபெற்றுன். வெற்றிபெற்ற மலையமான், சேரமன்னன் விருப்பப்படி கொல்லிமலையை அவனுக்கு உரிமையாக்கினுன்.

8. இவ்வாறு மலையமான் வல்விலோரியை வென்று கொல்லிமலையைச் சேரனுக்குக் கொடுத்த செயல், ஏனைய அரசர்களுக்குப் பெருங் கோபத்தையும் பகைமையையும் உண்டாக்கிவிட்டது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனும் அதிகமான் நெடுமானஞ்சியும் மலையமானிடம்மிக்க கோபமும் பகைமையுங் கொண்டு, ஒன்று சேர்ந்து, மலையமானேடு போர்தொடுத்து அவனைஅழித்தனர்.

9. மலையமான் திருமுடிக்காரியை அழிப்பதில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைவிட அதிகமான் நெடுமானஞ்சியே அதிக ஊக்கம்கொண்டு போர்புரிந்தனன். அதனுல், அவனே மலையமானை வென்றழித்தனன் என்று ஔவையார் அதிகமான் நெடுமானஞ்சியைப் புகழ்வராயினர்.

10. மலையமான் மக்களைச் சோழ மன்னன் யானைக் காலிலிட்டுக் கொல்லத் தொடங்கியதைத் தடுத்துக் கோவூர் கிழார் பாடியிருத்தலையும், அதிகமான் கோவலூரை யழித்தான் என்று ஔவையார் பாடியிருத்தலையும் நோக்குமிடத்து, இவ்விருவரும் மலையமானேடு போர்புரிந்து அவனை அழித்தனர் என்றும், இவ்விருவருள் அதிகமான் மலையமானைக் கொல்வதற்கு அதிக ஊக்கம் கொண்டு போர் புரிந்தான் என்றும், மலையமான் இறந்தபின் அவனிடத்துக் கொண்ட பகைமையால் கிள்ளிவளவன் அவன் மக்களையும் கொல்ல முயன்றனன் என்றும் கொள்ளுதல் பொருத்தமாகும்.

11. வல்விலோரியோடு போர் தொடுத்து அவனைக் கொன்றதனுல் மலையமான் திருமுடிக்காரியிடத்து இவ்வாறு

கிள்ளிவளவனும் அதிகமானும் பெரும்பகை கொள்ளக் காரணம் என்னை என்பதை ஆராய்வோம்.

12. கொல்லிமலை உரிமை காரணமாக, மலையமானைக் கொண்டு வல்விலோரியைக் கொல்வித்த பெருஞ்சேரலிரும்பொறை, மற்றோர் உரிமை கருதி அம்மலையமானைக்கொண்டு தன்னையும் கொல்வித்தல் கூடும் என்று அதிகமான் எண்ணினான். சேர மன்னர்களுக்கு அடையாளப் பூமாலையாகிய பனம்பூமாலையே அதிகமானுக்கும் அடையாளப் பூமாலையாயிருந்தது. 'குறுநில மன்னனாகிய அதிகமான் நமது அடையாளப் பூமாலையாகிய பனம்பூ மாலையைத் தனக்கும் அடையாளப் பூமாலையாகக் கொள்வதா' என்று கருதிச் சேரன் மலையமானை ஏவித் தன்னையும் கொல்விக்க முயலலாம் என்று அதிகமான் எண்ணினான். இதற்கு மற்றொரு காரணமும் உண்டு.

13. அக்காலத்துத் தமிழ்மன்னர் தத்தம் ஆட்சிமுறையை நன்கு நடத்தும்பொருட்டு, தத்தம் நாட்டைப் பல பகுதிகளாகப் பிரித்திருந்தனர். அப்பகுதிகளுக்குக் 'கூற்றம்' 'கோட்டம்,' எனப் பெயர்களிடப்பட்டிருந்தன. அவற்றுள் கொல்லிக்கூற்றம் என்றொரு பகுதியுண்டு. கொல்லிமலையும், அதனைத் தொடர்ந்த வேறுசில மலைகளும், ஓரளவு நிலப்பரப்பும் கொண்டது கொல்லிக்கூற்றமாகும். இப்பகுதியில் முக்கியமான கொல்லிமலை வளமிக்க மலையாகும். அக்கொல்லிமலையை வல்விலோரியிடமிருந்து சேரன் பெற்றானாயினும், மற்றுள்ள கொல்லிக்கூற்றத்தையும் கைப்பற்றச் சேரன் மலையமானைத் தன்மீது ஏவுதல் கூடும் என்று அதிகமான் எண்ணினான்.

14. இக்காரணங்களை எண்ணி அதிகமான் அதிக ஊக்கங்கொண்டு, கிள்ளிவளவனைத் துணைக்கொண்டு, மலையமானோடு போர்புரிந்து, அவனை அழித்தனன். மலையமானை அழித்தல் வேண்டும் என்று எண்ணிய அதிகமான், மலையமான் மிக்க பேராற்றல் உடையவனாதலாலும், 'வல்விலோரி' என்று புகழ்பெற்ற ஓரியோடு போர்புரிந்து அவனைக் கொன்றானாதலாலும், தான்மட்டும் படையெடுத்துச் சென்றால் மலையமானை வெல்லுதல் இயலுமோ இயலாதோ

என்று ஐயுற்று வளவனைத் துணைக்கொண்டு செல்வானு யினன்.

15. கிள்ளிவளவன் தன் அண்மையிலுள்ள மலையமான் தனக்கே போர்த் துணையாதலன்றி, பொருள் கொடுப்பார்க் கெல்லாம் போர்த்துணையாகச் சேரலை விரும்பாது வெறுத் தனன்; பிறன் ஒருவன் மிக்க பொருள் கொடுப்பானுயின், அவனுக்காகத் தன்னோடு போர்புரியவும் வருவான் என்றும் மலையமானிடத்தில் ஐயுறவு கொண்டனன். அதனால், அவன் அதிகமானுக்குத் துணையாகச் சேர்ந்தனன். எப்போதும் அரசர் தம் அண்மையிலுள்ள மற்றோரரசன் அதிக வலி யுடையவனுயிருப்பதை விரும்பார். இவ்வியல்பே கிள்ளிவள வனை அதிகமானுடன் சேருமாறு செய்ததென்க.

### அருஞ்சொற்பொருள்

முடிமன்னர் - சேர, சோழ, பாண்டியர். வண்ணக்கன் - நாணய பரிசோதகன். கோடல் - கொள்ளுதல். வல்வில்ஓரி - வலிய வில்லினை யுடைய ஓரி; சிறந்த வில் வீரனை ஓரி. கொல்லிமலை - திருச்சிராப்பள்ளி, சேலம் மாவட்டங்களைப் பிரிக்கும் மலைத்தொடர்; இராசிபுரத்திற்கு ஏழு கல் தொலையில் உள்ளது; இராசிபுரத்தில் உள்ள சிவன் கோவிலில் வல்வில் ஓரியின் சிலை காணப்படுகிறது. பனம்பூமாலை - சேரர்க்குரியது; பாண்டி யர்க்கு வேப்பம்பூமாலையும் சோழர்க்கு ஆத்திமாலையும் உரியது. அண்மை- சமீபம். துஞ்சிய - இறந்த. குளமுற்றம் - ஓர் ஊரின் பெயர்.

### கேள்விகள்

1. மலையமான் பெற்ற செல்வம் எவருக்குப் பயன்பட்டது?
2. ஓரியின் வில்லாற்றல் எத்தகையது?
3. இரும்பொறை ஓரியைத் தாக்க விரும்பியது ஏன்?
4. அதிகமான் காரியைத் தாக்கக் காரணம் யாது?
5. கிள்ளிவளவன் காரியிடம் பகைமைகொள்ளக் காரணம் என்ன?
6. கூற்றம், கோட்டம்: குறிப்பு வரைக.

### பயிற்சி

1. இரக்கும் (வறியவர்), இறக்கும் (வறியவர்); உரியது, உறியது; அளிப்பான், அழிப்பான்; கொல்ல, கொள்ள; அன்மை, அண்மை— பொருள் கூறுக; இவற்றை வாக்கியங்களிற் பயன்படுத்துக.

2. பிரித்துக் காட்டுக:—பெரும்பொருள், குறுநிலம், தனக்குரிய, கொன்றமையாது, பாடியிருத்தல், ஐயுற்று.

3. இப்பாடத்தின் ஒவ்வொரு பத்தியையும் (பாரா) படித்து ஏற்ற தலைப்புத் தருக.

# 12. பால்

திரு R. K. விசுவநாதன் அவர்கள், M.A.

[இவ்வாசிரியர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் விஞ்ஞானப் பேராசிரியராகப் பணியாற்றிவருகிருர் ; எல்லோருக்கும் விளங்கும் வகையில் எளிய தமிழ் நடையில் விஞ்ஞானச் சொற்பொழிவுகள் ஆற்றுவதில் வல்லவர்; 'ஒளியும் ஒலியும்', 'விஞ்ஞானக் காட்சி', 'விசுவரூபம்' முதலிய விஞ்ஞான நூல்களையும் தமிழில் இயற்றியுள்ளார். இக்கட்டுரை இவர் இயற்றிய "சக்தி" என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது.]

1. வேதம் ஏற்பட்ட காலத்திலேயே அன்னத்திற்கு அடுத்தபடியாகப் பாலின் சிறப்பை நம்முன்னேர்கள் உணர்ந்திருக்கிருர்கள். திருமால் பாற்கடலில் படுத்துக்கொண்டிருப்பதாக நம் புராணங்கள் கூறுகின்றன. பாலையும் பாலிலிருந்து கிடைக்கும் பொருள்களையும் பற்றி உயர்த்திப் பேசுவதற்காகத் திருமாலுக்குத் திருட்டுப்பட்டங்கூடக் கட்டிவிட்டார்கள். வெண்ணெய் திருடக் கண்ணன் பல துன்பங்கள் அனுபவித்தான் என்ருல் வெண்ணெய்க்கு வேறு ஒரு நற்சான்றும் வேண்டியதில்லை. யாகங்கள் போன்ற வைதிகச் சடங்குகளுக்கெல்லாம் வெண்ணெயைக் காய்ச்சி அந்நெய்யைத் தான் பயன்படுத்துகிருர்கள். எனவே, பாலைக் கொடுக்கும் பசுவைக் காமதேனு என்று நாம் கொண்டாடுவதிலும் வருடந்தோறும் மாட்டுப் பொங்கல் அன்று அதற்குப் பூசை செய்து வருவதிலும் வியப்பு ஒன்றுமில்லை.

2. தண்ணீர் கலக்காமலேயே பசுவின் பாலில் நூற்றுக்குச் சுமார் எண்பத்தேழு மடங்கு தண்ணீரே இருக்கிறது. பால் விற்பவர்களுக்கு இது தெரியாது போலும்! அதனுடன் முக்கியமாக நூற்றுக்கு நான்கு மடங்கு கொழுப்புச் சத்தும் (Fat), மூன்றரை மடங்கு புரதச் சத்தும் (Protein), ஐந்து மடங்கு சர்க்கரையும் இருக்கின்றன. இந்நான்கு பொருள்களும் பசுவின் பால், ஆட்டின் பால், தாய்ப் பால் முதலிய எல்லாவகைப் பால்களிலும் இருக்கின்றன. ஆனல் அவற்றின் விகிதம் வேறுபடும். உதாரணமாகத் தாய்ப்பாலில் மாட்டின் பாலில் உள்ளதைவிடச் சர்க்கரை அதிகமுண்டு. தாய்ப்பாலில் நூற்றுக்கு ஆறரை மடங்கு சர்க்கரை இருக்கிறது. இதில் புரதச் சத்துக் குறைவு ; நூற்றுக்கு ஒன்றரை

மடங்குதான் இருக்கிறது. எல்லாப் பசுக்களின் பாலிலும் இப்பொருள்கள் எல்லாம் ஒரே அளவிற்கு இருப்பதில்லை; பசுக்களின் உடல் நலத்தையும், அவை உட்கொள்ளும் உணவையும் பொறுத்து வேறுபடுகிறது.

3. பாலிலுள்ள பொருள்கள் அதில் உள்ள தண்ணீரில் கரைந்தும் கரையாமலும் இருக்கின்றன. ஒரு பொருள் தண்ணீரில் நன்றாகக் கரைந்து விட்டால் அக்கரைவு நீர் தண்ணீரைப் போலக் கண்ணுக்குத் தெளிவாகவே தோன்றும். கரையாவிடில் பொருள் சிறிதும் பெரிதுமாக மிதந்து கொண்டிருக்கும்; வண்டலுள்ள தண்ணீரைப் போலத் தோன்றும். பாலில் உள்ள உப்புக்களும், சர்க்கரையும் அதில் நன்றாகக் கரைந்துவிடுகின்றன. ஆனால் புரதச் சத்து, ஆல்புமன் (Albumen) இவை கரைந்தும் கரையாமலும் சிறிய துகள்களாக மிதக்கின்றன. கொழுப்புச் சத்து முற்றிலும் கரையாமல் பெரிய துகள்களாக மிதக்கின்றன. எனவே பால் முழுவதும் ஒரே சீராக இல்லை. அதில் மிதக்கும் பொருள் பெரும்பகுதி கொழுப்புச் சத்துத்தான். இதன் எடை (Density) தண்ணீரின் எடையில் பத்தில் ஒன்பது பங்கு உள்ளது. பாலில் உள்ள திரவப்பகுதி ஏறக்குறையத் தண்ணீரின் எடையைக் கொண்டிருக்கிறது. தவிடும் உமியும் சேர்ந்திருக்கும்போது அதைச் சல்லடையினால் சலித்துத் தவிடு வேறாகவும் உமி வேறாகவும் பிரிக்கிறோம். தவிடும் நொய்யும் கலந்திருக்கும்போது முறத்தினால் புடைத்து அவற்றை வேறாக்குகிறோம். தவிடு, உமி, நொய் இவற்றின் எடை வேற்றுமையினால்தான் இவ்வாறு பிரிக்க முடிகிறது. இதைப் போலவே பாலைக் கடைந்து அதில் உள்ள கொழுப்புச் சத்தையும் திரவப் பகுதியையும் அவற்றின் எடை வேற்றுமையைக் கொண்டு பிரிக்க முடிகிறது.

4. மேல் நாடுகளில் பெரிய பசுப் பண்ணைகள் இருக்கின்றன. நாம் இங்கே கிராமங்களில் எலும்பும் தோலுமாய்க் காணும் பசுக்களைப் போல அங்கே பசுக்களைக் காண முடியாது. அங்குள்ள பசுக்கள் ஒவ்வொன்றின் எடையும் ஆயிரம் பவுண்டுக்கு மேல் இருக்கும். நாள் ஒன்றுக்கு ஐம்பது பவுண்டு பால் கறக்கும் காமதேனுக்கள் இந்தியாவில்

இல்லை ; ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமே இருக்கின்றன. இந்தியாவில் குசேலர்கள் மனிதர்களிடையே மட்டும் இருக்கிறார்கள் என்று நினைக்க வேண்டா ; பசுக்களிடையேயும் அதிகமாக இருக்கிறார்கள். மேல் நாடுகளில் உள்ள பசுக்களின் பால் முழுவதையும் கையினாலேயே கறப்பதற்கு நீண்ட நேரம் ஆகும். எனவே, மேனாட்டார் இயந்திர சாதனத்தினால் பாலைக் கறந்து வருகின்றனர் ; இதற்கு மாட்டின் மடியிலுள்ள நான்கு காம்புகளிலும் நான்கு உலோகக் குமிழ்களைச் செருகிவிடுவர். இக்குமிழ்களின் மேற்புறம் மடியுடன் நன்றாகப் பதிந்திருக்குமாறு செய்யப்பட்டிருக்கும். மின்சாரத்தின் உதவியினால் நான்கு குமிழ்களில் உள்ள காற்றையும் வெளியேற்றுவர். காற்று உறிஞ்சப்படும்போது காம்பின் நுனியும் உறிஞ்சப்படும் ; காம்புகள் விட்டு விட்டு உறிஞ்சப்படுமாறு செய்யப்படும் ; சிறிது நேரத்தில் மடியிலுள்ள பால் முழுவதும் கறக்கப்பட்டுவிடும். சில கருவிகளினால் காம்பின் நுனி உறிஞ்சப்படும்போது காம்பு அமுக்கவும்படும். இதனால் பின்னும் எளிதாகப் பால் கறக்கப்படும்.

5. பால் சீக்கிரத்தில் புளிப்படைந்து கெட்டுவிடுகிறது. அதற்குக் காரணம் இதில் உற்பத்தியாகும் பாக்டீரியா (Bacteria) என்னும் சிறிய ஜீவ அணுக்களாகும். லூயி பாஸ்ட்சர் (Louis Pasteur) என்ற விஞ்ஞானி பால் புளிக்காமல் இருப்பதற்கு வழியைக் கண்டுபிடித்தார். சாராயம் நெடுநாள் வரை கெடாமலிருப்பதற்கு இவர் செய்த சோதனைகள் இதற்குப் பெரிதும் பயன்பட்டன. இவர் இரண்டு வழிகளில் பாலில் பாக்டீரியா ஏற்படாமல் தடுக்கலாம் என்பதை விளக்கினார் ! பாலை அரைமணி நேரம் 62·8 டிகிரி செண்டிகிரேடு சூட்டில் காய்ச்சினால் பாக்டீரியா கிருமிகள் எல்லாம் இறந்துவிடுவதைக் கண்டார். இவ்வாறில்லாமல் பாலைச் சிறிது நேரத்துக்கு 82·2 டிகிரி செண்டிகிரேடு சூட்டில் காய்ச்சி, திடீரென்று குளிரவைத்துவிட்டால் அப்பொழுதும் கிருமிகள் இறந்து விடுவதைக் கண்டார். மேனாட்டார் இவ்வழிகளில் ஒன்றை மேற்கொண்டு பால் கெடாமல் இருக்குமாறு செய்துவருகின்றனர்.

6. இவ்வாறு தயாரித்த பாலைப் புட்டிகளில் அடைத்துப் பல இடங்களுக்கு அனுப்புகின்றனர். பாலில் உள்ள தண்ணீரைச் சுண்டவைத்து, கிருமிகளைப் போக்கிப் புட்டிகளில் அடைத்து வெளிநாடுகளுக்கு அனுப்புகின்றனர் ; புட்டியில் அடைக்கும் முன்னர்ப் பாலில் உள்ள கொழுப்புச் சத்து கண்ணுக்குத் தெரியாதபடி பாலுடன் சீராகக் கலந்துவிடுமாறு செய்வதுண்டு. இதற்குப் பால் மிகச் சிறிய துவாரத்தின் மூலமாகச் செலுத்தப்படும். ஆயிரக்கணக்கான பவுண்டு சக்தியுடன் உதைத்துத் தள்ளப்படும் ஒரு பீச்சானைக் கொண்டு பால் இத்துவாரங்களின் மூலம் செலுத்தப்படும். பால் துவாரங்களைத் தாண்டி வெளிவரும்போது அதில் உள்ள கொழுப்புச் சத்துத் துகள்கள் உருத் தெரியாமல் சிதறிப் பாலுடன் சீராகக் கலந்துவிடுகின்றன.

7. மேல் நாடுகளில் பாலில் உள்ள முக்கியமான பொருள்களைத் தனித்தனியே பிரிக்கப் பல தொழிற்சாலைகள் இருக்கின்றன. பாலிலிருந்து முதன் முதலில் எடுக்கப்பட்ட பொருள் கொழுப்புச் சத்துத்தான். நார்வே நாடுதான் கொழுப்பிலிருந்து வெண்ணெய் எடுத்து அதை முதன் முதலில் வெளிநாடுகளில் வாணிகம் செய்யத் தொடங்கியது. இவ்வாணிகம் பதின்மூன்றும் நூற்றாண்டிலேயே தொடங்கியதாகக் கூறப்படுகிறது. இதைப் பின்பற்றி ஹாலந்து நாடு இவ்வாணிகத்தில் இறங்கிற்று. மேனாட்டினர் சமீபகாலம் வரை வெண்ணெய் எடுப்பதற்கு எளிய முறைகளைத்தான் கையாண்டுவந்தனர். வாய் அகன்ற பாத்திரங்களில் பாலை வைத்துச் சிறிது நேரம் கழித்து, மிதந்து வரும் கொழுப்பை எடுத்துக் கடைந்து வெண்ணெய் எடுத்தனர் ; கொழுப்பில் சிறிது மோரை விட்டுப் புளிக்க வைத்தும் வெண்ணெய் எடுத்துவந்தனர் ; நாம் இன்றும் வீடுகளில் உபயோகிக்கும் மத்துக்களைப் போலவே இவர்கள் உபயோகித்த கருவிகளும் இருந்துவந்தன. இப்பொழுது மைய விலக்கச் சக்தியை மேற்கொண்ட (Centrifugal force) இயந்திர சாதனத்தினால் பாலைக் கடைந்து, லூயி பாஸ்ட்சர் முறையினால் கிருமிகளைப் போக்கி, வெண்ணெயைத் தயாரித்துப் புட்டிகளில் அடைத்து, வாணிகத்திற்கு அனுப்புகின்றனர். இத்

தகைய தொழிற்சாலைகள் அமெரிக்காவில் பல இருக்கின்றன. இத்தொழிற்சாலைகளில் தயாரிக்கப்படும் வெண்ணெய் முழுவதும் கொழுப்புச் சத்து என்று கூறுவதற்கில்லை. இதில் கொழுப்புச்சத்து நூற்றுக்கு எண்பது மடங்குதான் இருக்கிறது; நூற்றுக்கு பதினறு பங்குவரை தண்ணீர் தங்கிவிடுகிறது; நூற்றுக்கு ஒரு பங்கு தயிரும் தங்கிவிடுகிறது.

8. மேனட்டார் கொழுப்புச் சத்தைப் பிரித்தெடுத்த பின் பாலிலிருந்து கேசின் (Casein) என்னும் புரதச் சத்தையும் தொழிற்சாலைகளில் பிரிக்கின்றனர். இது காகிதம் செய்யும் தொழிலுக்கு இன்றியமையாது தேவைப்படுகிறது. காகிதத்திற்கு மெருகு கொடுப்பதற்கும் வர்ணம் கொடுப்பதற்கும் கேசின் சிறந்த பசையாகப் பயன்பட்டுவருகிறது. மிருக கொழுப்புப் பசை, மாவுப் பசை இவற்றைக் காட்டிலும் இப்பசை காகிதத் தொழிலுக்குச் சிறந்ததாக இருப்பதால் இது பெரிதும் வேண்டப்படுகிறது. மேனட்டார் இப்புரதச் சத்து மிகுந்த பாலடைக்கட்டி (Cheese) என்ற உணவுப் பொருளையும் தயாரித்துவருகின்றனர். இப்பொருளில் நூற்றுக்கு நாற்பத்தைந்து மடங்கு புரதச் சத்து இருக்கும். இதில் கொழுப்புச் சத்தும் கலந்திருக்கும். இது நூற்றுக்குச் சுமார் பதினைந்து மடங்குவரை கலந்திருக்கும். மேல்நாட்டவர் வெண்ணெயைக் காட்டிலும் இப்பொருளையே உணவுக்காக விரும்புகிருர்கள். இதில் பல வகையுண்டு. வெண்ணெய், புரதச்சத்து இரண்டும் நீக்கப்பட்ட பின்னர் உள்ள பாலை மோராகச் செய்து, சுகாதார முறையில் புட்டிகளில் அடைத்து, அதையும் மேனட்டினர் விற்கின்றனர்.

9. எல்லாவற்றையும்விடப் பாலிலிருந்து பால் பொடி செய்யும் தொழிற்சாலைகளுக்கே வேலை மிகுதியாகும். மேல்நாட்டாருக்கு நெடுநாட்களுக்கு முன்பே பாலிலிருந்து பொடி செய்யும் வழி தெரியும் என்று நினைக்க இடமிருக்கிறது. மார்க்கோ போலோ என்ற பிரசித்தி பெற்ற யாத்ரிகர் பதின்மூன்ரும் நூற்ருண்டில் நடந்த ஒரு போரில் போர் வீரர்கள் ஒவ்வொருவரும் பத்துப் பவுண்டு பால் பொடி வைத்திருந்ததாகவும், பசித்தபோது அதைத் தண்ணீரில் கரைத்துச் சாப்பிட்டுவந்ததாகவும் எழுதி வைத்திருக்கிருர்.

இப்பொழுது தொழிற்சாலைகளில் பால்பொடி இரண்டு வழிகளில் செய்யப்படுகிறது. எப்பொழுதும் சுழன்றுகொண்டிருக்கும் பெரிய எஃகுப் பிப்பாய்களின் மூலம் நீராவியைச் செலுத்திப் பிப்பாய்களின் வெளிப்புறத்தைச் சூடு செய்கிறார்கள். பிப்பாய்களைச் சூழ்ந்துள்ள காற்றின் இறுக்கத்தைக் குறைக்காமல் அப்படியே வைத்துக்கொள்ளும் கருவிகளும் உண்டு. பிப்பாய்களைச் சூழ்ந்துள்ள இடம் வெற்றிடமாக வைத்துக்கொள்ளும் கருவிகளும் உண்டு. பிப்பாய்களின் வெளிப்புறத்தின்மீது சிறிது சிறிதாகப் பால் ஊற்றப்படும். சூட்டின் விளைவாகப் பால் வற்றிப்போய் அதன்மீது படிந்துவிடுகிறது. இவ்வாறு எல்லாப் பாலையும் மாற்றியவுடன் கத்திகளினால் அதைச் சுரண்டியெடுத்துப் பொடியாக்கிவிடுகிறார்கள். மற்றொரு வழியில் எஃகினால் செய்யப்பட்ட ஓர் சல்லடை அமைப்புப் பெரிய இருப்புக் குழலினுள்ளே சுற்றிக்கொண்டிருக்கும். மேனாட்டார் குழலினுள்ளே சூடான காற்றையும் பாலையும் செலுத்துவர். சூடான காற்றினால் பாலில் உள்ள நீரெல்லாம் நீக்கப்பட்டுச் சல்லடை அமைப்பின்மீது பால் ஏடாகப் படிந்துவிடுகிறது. இதை எடுத்துப் பொடியாக்கிவிடுகின்றனர்.

10. இவ்வாறு பொடிப் பால் தயாரிப்பதற்குச் சாதாரணமாகக் கொழுப்பை நீக்கிய பாலைத்தான் பயன்படுத்துவது வழக்கம். குழந்தைகளுக்குச் சிறந்த உணவு என்று கௌ அண்டு கேட், ஆலென்பரி, க்ளாக்சோ, ஹார்லிக்ஸ் (Cow and Gate, Allenbury, Glaxo, Horlicks) போன்ற பால் பொடிகள் விற்கப்பட்டுவருவதை நாம் அறிவோம். இவை பாலிலிருந்து தயாரிக்கப்பெற்ற பொடிகளே. இவற்றுடன் வேறு பொருள்களும் சேர்க்கப்பட்டுள்ளன. உதாரணமாக ஹார்லிக்ஸில் பால் கொழுப்புடன், கோதுமை பார்லி மாவுகளும், ஸோடியம் பைகார்பனேட், (Sodium Bicarbonate), பொட்டாசியம் பைகார்பனேட் (Potassium Bicarbonate) என்ற இரசாயனப் பொருள்களும் உப்பும் சேர்க்கப்படுகின்றன. விரைவில் செரிக்குமாறு இப்பொடிகள் எல்லாம் சுகாதார முறைகளில் தயாரிக்கப்படுகின்றன. இம்முறை மிகவும் பாராட்டத்தக்கது அல்லவா?



11. சமீபத்தில் சென்னை அரசாங்கத்தார் பொடிப்பால் செய்வதற்குச் சென்னையில் ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்தியிருக்கின்றனர். இங்குப் பாலிலிருந்து பால் பொடி தயாரிக்கவில்லை; பால் பொடியிலிருந்து பால் செய்யப் படுகிறது. இத் தொழிற்சாலையினர் வெளி நாடுகளிலிருந்து கொழுப்புச் சத்து நீக்கப்பட்ட பால் பொடிகளை வாங்கி, அவற்றை இங்குச் சத்துள்ள இயற்கைப் பாலாக மாற்றுகின்றனர்; இதற்குப் பொடியைச் சூடான தண்ணீரில் கரைத்து, 'கரோடின்' சத்து, தேங்காய் எண்ணெய் இவற்றைப் போதுமான அளவுக்குச் சேர்த்துக் கலக்குகின்றனர். 'கரோடின்' சத்து முள்ளங்கியிலிருந்து பெறப்படுகிறது. மின்சார சக்தியின் உதவியினால் நன்றாகக் கலக்கிய பின்னர், இயந்திரத்தின் உதவியினால் கலந்த பொருள்கள் கண்ணுக்குத் தெரியாதபடி பாலுடன் சேருமாறு செய்கின்றனர்; இதனைப் புட்டிகளில் அடைத்து விற்றுவருகின்றனர்.

12. நம் நாட்டில் மாடுகள் மேய்வதற்கு இடங்கள் நிரம்ப இருக்கின்றன. ஆங்காங்கே மாட்டுப் பண்ணைகளை ஏற்படுத்தி அவற்றைப் பாதுகாத்துச் சுகாதார முறையில் இயந்திர சாதனத்தைக் கொண்டு பாலைக் கறந்து, புட்டிகளில் அடைத்து எல்லோருக்கும் வழங்க இடமிருக்கிறது. மேல் நாடுகளில் செய்வது போல வெண்ணெய், கேஸின் போன்ற பொருள்களையும் நாம் தயாரிக்கலாம். அரசாங்கத்தார் இதில் பற்றுக்கொண்டு இதற்கு வேண்டிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தவேண்டுவது இன்றியமையாத கடமையாகும்.

### அருஞ்சொற்பொருள்

வைதிகச் சடங்குகள் - வேத சம்பந்தமான சில நடப்பு முறைகள். காமதேனு - தேவர் உலகத்தில் இருக்கும் ஒரு பசு; அது வேண்டுவார்க்கு வேண்டிய செல்வத்தை அளிக்கும் என்பது வழக்கு. குசேலர் என்பது இங்கு மெலிந்தது என்ற பொருளில் இருக்கிறது.

### கேள்விகள்

1. நம் முன்னோர்கள் பாலின் சிறப்பை நன்கு அறிந்திருந்தார்கள் என்பதனை எவற்றால் அறியலாம்?

2. பசுவின் பாலில் எப்பொருள்கள் எவ்வளவில் கலந்திருக்கின்றன?

3. பால் முழுவதும் ஒரே சீராக இல்லாமைக்குக் காரணம் யாது? அதில் எப்பொருள்கள் மிதந்துகொண்டிருக்கின்றன ?

4. மேல் நாடுகளில் உள்ள பசுக்கள் எத்தகையன ? அவற்றிலிருந்து எவ்வாறு பால் கறக்கிருர்கள் ?

5. பால் புளிக்காமல் இருக்கச் செய்யும் செயல்கள் யாவை ?

6. அமெரிக்காவில் வெண்ணெயை எவ்வாறு பக்குவப்படுத்து கிருர்கள் ?

7. பாலிலிருந்து எடுக்கப்பட்ட புரதச் சத்தை எவற்றுக்குப் பயன் படுத்துகின்ருர்கள் ?

8. "மார்க்கோ போலோ"—என்ற யாத்திரிகர் பால்பொடியைப் பற்றி என்ன குறிப்பிடுகிருர் ? அதனுல் நாம் தெரிந்துகொள்வது யாது ?

9. பால்பொடி செய்யும் இரண்டு முறைகளேப் பற்றி நீ அறிவன யாவை ?

10. குழந்தைகளுக்குச் சிறந்த ஆகாரமான பால் பொடிகள் எவ்வாறு செய்யப்படுகின்றன ?

11. சென்னே அரசாங்கத்தார் ஏற்படுத்தியுள்ள பால்பொடித் தொழிற் சாலேயில் நடைபெறும் செயல்கள் யாவை ?

12. நம் அரசாங்கத்தார் பால் பண்ணேத் தொழிலே எவ்வாறு நடை பெறும்படி செய்யலாம் ?

## பயிற்சி

1. நம் நாட்டில் பால் பண்ணே ஏற்படுவதற்கு ஆதாரமாக உள்ள சாதனங்களேக் குறிப்பிட்டு 20 வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

2. பின்வருவன பற்றிச் சிறு குறிப்பு வரைக :—லூயி பாஸ்ட்சர், கேசின் என்னும் புரதச் சத்து, மார்க்கோ போலோ, கரோடின்.

3. 'நம் நாட்டு வறுமையைப் போக்கப் பசுவைப் பாதுகாத்தல் ஒரு வழி' என்னும் பொருள்பற்றி 15 வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

4. முதற் பத்தியை மூன்றில் ஒன்ருகச் சுருக்கி வரைக.

5. இயந்திரத்தின் மூலம் பால் கறக்கும் வகையினே விளக்குக.

6. 'நம் பசுக்களில் குசேலர்கள்'—இத்தொடருக்கு விளக்கங் கூறி, இவ்வாறு கூறப்படுதற்குரிய காரணங்களே விளக்குக.

7. பாலிலிருந்து பொடி, பொடியிலிருந்து பால் : இவ்விரண்டிற்கு முள்ள வேறுபாட்டினே விளக்குக.

8. லூயி பாஸ்ட்சர் தொண்டு குறித்து 25 வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

9. ஒவ்வொரு பத்தியையும் படித்து ஏற்ற தலேப்புத் தருக.

10. பால் நமக்கு இன்றியமையாத உணவுப் பொருள் என்பதை விளக்கி ஒரு சிறு கட்டுரை வரைக.

# 13. சோழர் காலத்து ஓவியமும் சிற்பமும்

திருவாட்டி R. ஜனுபாய் அம்மையார் அவர்கள், B. Sc. (Hons.)

[இவ்வாசிரியர் திருச்சிராப்பள்ளி—சீதாலட்சுமி இராமசுவாமி கல்லூரி, வேதிக்கலை விரிவுரையாளர்; தமிழறிவும் ஆராய்ச்சிவன்மையும் உடையவர்.]

1. தென் இந்தியாவில் பல்லவர்க்குப் பின்பு செல்வாக்குப் பெற்ற பேரரசராக விளங்கியிருந்தவர் (கி. பி. 900—1300) சோழர் ஆவர். சோழர் வழிவழிச் சைவராதலால், பல்லவர் காலத்தில் வாழ்ந்த நாயன்மார்களால் பாடப்பெற்ற கோவில்களைத் தங்கள் காலத்தில் கற்றளிகளாக்க முற்பட்டனர்; கோவில் பூசை முதலிய முட்டின்றி நடைபெறுதற்கென்று ஏராளமான நிலங்களை மானியங்களாக விட்டனர்; விலையுயர்ந்த ஆடையணிகளை வழங்கினர்; சமயத் தொடர்பாகக் கோவில்களிலேயே இசை, நடனம், நாடகம் முதலிய கலைகளை இசைவாணிகளைக் கொண்டு நடத்துவித்தனர்.

2. இராசராசன் முதலிய சோழப் பேரரசர் மேற்சொன்ன திருப்பணிகளுடன் அமைதி கொள்ளாது, தாமே முயன்று பெரிய கற்றளிகளை உண்டாக்கினர். அவற்றுள் மிகச் சிறந்தவை மூன்று. அவை தஞ்சை இராசராசேச்சரம், கங்கைகொண்ட சோழேச்சரம், இராசராசபுரத்து இராசராசேச்சரம் என்பன. இவை அக்காலக் கட்டடக் கலைக்கும் சிற்பக் கலைக்கும் ஓவியக் கலைக்கும் உறைவிடமாகும்.

3. தஞ்சைப் பெரிய கோவில் எனப்படும் **தஞ்சை—இராசராசேச்சரம்** ஏறத்தாழ ஆறுண்டுகளில் (கி. பி. 1003-1009) கட்டி முடிக்கப்பட்டது. அக்கோயிலில் உள்ள வானளாவிய விமானம் மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோவில் விமானத்தின் பெரிய அமைப்பு என்பதைக் காண, பல்லவர் காலத்துக் கட்டடக்கலை பின்வந்த சோழர் காலத்திலும் தொடர்ந்து வளர்ச்சி பெற்று வந்தது என்பதை நன்கறியலாம். இவ்வாறே பல்லவர் காலத்து ஓவியக்கலையும், சிற்பக் கலையும் சோழர் காலத்தில் பெரிய அளவில் வளர்க்கப்பட்டன என்பதை மேற் சொல்லப்பட்ட மூன்று கோவில்களில் உள்ள ஓவியச் சிற்பங்களைக் கொண்டு கூறலாம்.

4. தஞ்சைப் பெரிய கோவிலின் கருவறையின் புறச் சுவர்களில் இராசராசன் காலத்து ஓவியங்கள் காணப்படு



தஞ்சை - இராசராசேச்சரம்

கின்றன. ஒரு பக்கச் சுவரில் சிவபெருமான் கிழ வேதியராக வந்து அடிமை ஓலையைக் காட்டிச் சுந்தரரது திருமணத்தைத் தடைசெய்து, அவரை ஆட்கொண்ட வரலாற்றைக் குறிக்கும் ஓவியம் காணப்படுகின்றது. மணமண்டபம் அழகாகச் சித் திரிக்கப்பட்டுள்ளது. அதனில் மணத்திற்கு வந்தவர் பலர் கூடியிருக்கின்றனர். சிவபெருமான் கிழவேதியர் வடிவத்திற் காணப்படுகிருர். அவரது ஒரு கையில் குடை இருக்கிறது. மற்ருெரு கையில் ஓலை ஒன்று இருக்கிறது. அப்பெரியார் சுந்தரர்க்கு எதிரில் நிற்கிருர்; சுந்தரர் தமது மணத்தைத் தடைசெய்யவந்த கிழவரை வியப்புடன் நோக்குகிருர். அவ ருக்குப் பின்புறம் திருவெண்ணெய் நல்லூர்க் கோவில் காட்சி அளிக்கிறது.

5. வேருெரு சுவரின் மேற்பகுதியில் திருக்கயிலாய மலை தீட்டப்பட்டுள்ளது. அங்குச் சிவபெருமான் முனிவர்

முதலியவருடன் வீற்றிருக்கிறார். அவருக்குக் கீழ்-நிலவுலகி லிருந்து-சுந்தரர் வெள்ளை யானைமீதும் அவருடைய நண்



சுந்தரர் கயிலை செல்லும் காட்சி

பரும் சேரவேந்தருமான சேரமான் பெருமாள் நாயனார் குதிரைமீதும் கயிலை நோக்கிச் செல்வதாக இரண்டு ஓவி யங்கள் தீட்டப்பட்டுள்ளன. மேல் உள்ள முதற் படத்தைப் பாருங்கள்: யானை எவ்வளவு அழகாக அணிசெய்யப்பட் டுள்ளது! அதன்மீதுள்ள சுந்தரர் அணிந்துள்ள அணி களைக் கூர்ந்து நோக்குங்கள். சுந்தரர் தலைமுடியும் தாடியும் வைத்துள்ளார். கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரர் இவ்வாறுதான் இருந்தனராதல் வேண்டும் என்று பதினோராம் நூற்றாண்டில் கருதப்பட்டு, அம்முறையில் ஓவியரால் இவை தீட்டப்பெற்றிருத்தல் வேண்டும் என்று நாம் நினைக்கலாம். சுந்தரர் கயிலாயம் செல்லும்வரை பாடிக்கொண்டே சென் றனர் என்பது அவருடைய பதிகத்தால் ஊகிக்க இடம் உண்டு. அதற்கேற்ப, ஓவியத்திலும் அவர் கைகளில் தாளங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவை அனைத்தையும் நோக்க, அக்கால ஓவியர் தக்க நூற் சான்றுகளைக் கவனித் தும் செவிவழிச் செய்திகளை உளங்கொண்டுமே இவ்வோவி

யங்களைத் தீட்டியிருத்தல்வேண்டும் எனக் கருதுதல் தவருகாது.

6. அடுத்த ஓவியம் சேரமான் பெருமாளைக் குறிப்பது. அவருடைய தலையலங்காரம், பிற அணிகள் முதலியவற்



சேரமான் கயிலை செல்லும் காட்சி

றைக் கவனியுங்கள். அவர் இவர்ந்து செல்லும் குதிரையின் ஒப்பனையைக் கூர்ந்து நோக்குக. இக்குதிரை யானைக்கு முன்னே கயிலை நோக்கி விரைகின்றது. சேரமான் பெருமாளும் சுந்தரரைப் போலவே முடியும் தாடியும் வைத்துள்ளது கவனிக்கத்தக்கது. இஃது அக்கால வழக்கம் போலும்!

7. மற்றெரு புறச்சுவரில் நடனமாதர் உருவங்கள் தீட்டப்பட்டுள்ளன. அவர்களுடைய கூந்தல் ஒப்பனையும் ஆடையணிகளும் பார்க்கத் தக்கவை. அவை அக்காலத் தமிழ்நாட்டுப் பெண்மணிகள் அணிந்துவந்த நகைகளையும், சிறப்பாக நடன மாதர் அணிவகைகளையும் நமக்கு உணர்த்துவனவாகக் கொள்ளலாம்.

8. தஞ்சைப் பெரிய கோவில் வாயிற்காவலர் உருவச் சிலைகளும், கங்கைகொண்ட சோழேச்சரத்து வாயிற் காவலர்

உருவச் சிலைகளும் ஏறத்தாழப் பதினுன்கடி உயரமுள்ளவை, சிறந்த சிற்ப வேலைப்பாடு கொண்டவை. இராசராசபுரம்—சிவன் கோவிலில் உள்ள இராசராசனது உருவச்சிலையும் அவன் கோப்பெருந் தேவியைக் குறிக்கும் உருவச்சிலையும் மிகுந்த சிற்பவேலைப்பாடு கொண்டவை. அரசன், அரசியர் முடிகள், பலவகை அணிகள் முதலியன கல்லிற் செதுக்கி யுள்ளமை கல்தச்சரது பண்பட்ட வேலைத்திறனை நன் குணர்த்துவதாகும்.

9. கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள கஜலட்சுமி, சண்டேச அனுக்கிரக மூர்த்தி இவர்களை உணர்த்தும் சிற்



கங்கை கொண்ட சோழேச்சரம்

பங்கள் புத்தம் புதியனவாக—உயிருள்ள உருவங்களைப் போலக் காணப்படுதல் நேரிற் கண்டு வியக்கத் தக்கதாகும். அச்சிற்பங்களின் நுண்ணிய வேலைப்பாடுகளையும் பேரழகை யும் என்னென்பது!

10. இராசராசபுரத்து இராசராசேச்சரம் சிற்பக் கலைக்கூடம் என்னலாம். அதன் முன் பகுதியைப் படத்திற்



இராசராசேச்சரம், இராசராசபுரம் (தாராசுரம்).

பாருங்கள் : தன் முன்னோர்களுள் சிறந்த முதலாம் இராச ராசன் தஞ்சையிற் கட்டிய இராசராசேச்சரத்தையும் அவன் திருமகனான கங்கை கொண்ட சோழன் கங்கைகொண்ட சோழபுரத்தில் எடுப்பித்த கங்கைகொண்ட சோழேச்சரத் தையும், இவ்விரண்டிலும் இருந்த சிற்பங்களையும் பார்வை யிட்ட இரண்டாம் இராசராசன், தன் பெயர் என்றும் நின்று நிலவவேண்டிச் **சிற்பக் கலைக்கூடம்** என்று வியந்து பாராட்டத்தக்க இக்கோவிலை அரும்பாடுபட்டு எடுப்பித்தான். இதன் முன் மண்டப அழகு பெரிதும் பாராட்டத்தக்கது ; அற்புத வேலைப்பாடு கொண்டது ; அம்மண்டபம் உருளை களைக் கொண்ட தேர்போலச் செய்யப்பட்டுள்ளது நேரிற் கண்டு களிக்கத்தக்கதாகும்.

11. சைவத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட இவ்விரண் டாம் இராசராசன் இக்கோவிற் கருவறையின் புறச்சுவர்களில் அறுபான் மும்மை நாயன்மார்களின் வாழ்க்கை நிகழ்ச்சி களிற் சிறந்தவற்றைச் சிற்பங்களாகப் பொறித்துள்ளான். தமிழகத்தில் வேறு எந்தக் கோவிலிலும் இக்காட்சியைக் காணல் இயலாது! இவ்வாறே இக்கோவில் மண்டபம் ஒன்றன் சுவரில் சைவப் பெரியார் நூற்றெண்மர் உருவங்களை உணர்த்தும் சிற்பங்கள் ஒரே வரிசையிற் பொறிக்கப்பட்டுள்ள அழகு கண்டு மகிழ்தற்குரியதாகும்.

### அருஞ்சொற்பொருள்

வழிவழி - பரம்பரை பரம்பரையாக. கற்றளி = கல் + தளி. தளி - கோவில். நாயன்மார் - சைவசமய ஆசிரியர். முட்டு - தடை. மானியம் - இறைம் நிலம். இசைவாணிகள் - பாடுமகளிர். இராசராசபுரம் - கும்ப கோணத்தை அடுத்துள்ள தாராசுரம்; இராசராசேச்சுரம் என்பது நாளடைவில் உச்சரிப்பாற் கெட்டுத் 'தாராசுரம்' என்றுயிற்று. உறை விடம் - வாழ்விடம். சுந்தரர் தடுத்தாட்கொள்ளப்பட்ட வரலாற்றைப் பெரியபுராணத்துட் காண்க. திருவெண்ணெய் நல்லூர், விழுப்புரம் - விருத்தாசலம் ரயில்பாதையில் உள்ளது; சுந்தரர் தமது முதல் பதிகத்தை இங்குள்ள கோவிலிற்றான் பாடினர். அணி - அலங்காரம். பதிகம் - திருநொடித்தான்மலைப் பதிகம். செவிவழிச்செய்தி - கர்ணபரம்பரைச் செய்தி. ஒப்பனை - அலங்காரம். பண்பட்ட - அநுபவம் மிக்க. சண்டேசர் - விசாரசருமர் ; சண்டேசுவர நாயனர். இவர் வரலாற்றைப் பெரிய புராணத்

துட் காண்க. இரண்டாம் இராசராசன் - இரண்டாம் குலோத்துங்கற்குப் பின் அரசனானவன். அறுபான் மும்மை - அறுபத்து மூன்று.

### கேள்விகள்

1. சோழர் செய்த திருப்பணிகள் யாவை?

2. சோழர்களே எடுப்பித்த கற்றளிகளிற் சிறந்தவை எவை?

3. தஞ்சைப் பெரியகோவில் விமானத்தையும் மாமல்லபுரம் கடற்கரைக் கோவில் விமானத்தையும் காண்பவர் உணரத்தகும் உண்மை யாது?

4. கிழ வேதியர் திருமண மண்டபத்தில் தோன்றக் காரணம் யாது?

5. கயிலாய யாத்திரையை மேற்கொண்டவர் யாவர்?

6. சுந்தரர், சேரமான் ஓவியங்களால் நாம் அறிவன யாவை?

7. நடனமாதர் ஓவியங்களைக்கொண்டு அறியப்படுவன யாவை?

8. இராசராசபுரத்து இராசராசேச்சரம் பற்றி நீங்கள் அறிவன யாவை?

9. 'சோழர்காலத்து உருவச்சிற்பங்கள்' பற்றி நீங்கள் அறிவன எவை?

### பயிற்சி

1. பொருள் கூறுக :—கற்றளி, இசைவாணிகள், திருப்பணிகள், செவிவழிச் செய்தி, ஓவியம், சிற்பம், உருவச் சிற்பம்.

2. சண்டேச அனுக்கிரக மூர்த்தி—இதில் அடங்கிய வரலாற்றை 15 வரிகளில் எழுதுக.

3. நீவிர் அறிந்த அளவில் பல்லவர் அமைத்த கோவில்கட்கும் சோழர் அமைத்த கோவில்கட்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் குறிப்பிட்டு ஒரு கட்டுரை வரைக.

4. பண்டை ஓவியங்களையும் சிற்பங்களையும் காண்பதால் நாம் பெறும் நன்மையை விளக்கி எழுதுக.

5. நம் நாட்டில் கற்றளிகள் கட்டப்பட்டதன் காரணத்தை விளக்கி வரைக.

6. ஓவியம்—சிற்பம் :—இவற்றின் உயர்வு தாழ்வுகளைப் பற்றி 15 வரிகள் எழுதுக.

7. இந் நுண்கலைகளால் ஒரு நாடு பெருமை அடைகிறது என்பது எங்ஙனம் பொருந்துகிறதென்பதை விளக்கி வரைக.

8. சிறு குறிப்பு வரைக :—தஞ்சை இராசராசேச்சரம், இராசராச புரத்து இராசராசேச்சரம், கங்கைகொண்ட சோழேச்சரம்.

# 14. சொற்பொழிவு

திரு. N. D. சுந்தரவடிவேல் அவர்கள், M. A., L. T.

[இப்பெரியார் சென்னைக் கல்வி இலாகா உதவித் தலைவராவர் (Deputy Director of Public Instruction); தமிழறிவு சிறக்கப் பெற்றவர்; இனிய - எளிய நடையில் சொற்பொழிவாற்றவும் எழுதவும் வல்லவர்; அண்மையில் மேனாட்டுக் கல்வி முறைகளை அறிய ஐரோப்பா சென்று மீண்டவர். சென்னை மாணவர் மன்றத்தின் 20-ஆம் ஆண்டு நிறைவு விழாவின்போது (5—1—'52) மாணவ மாணவியர்க்கு நல்லுரை வழங்கி இப்பெரியார் ஆற்றிய சொற்பொழிவே இங்குத் தரப்பட்டுள்ளது.]

1. மாணவ மாணவியர்களே! உங்கள் பருவம் மீண்டும் கிடைக்காத பருவம்; பொன்போற் போற்றிப் பயன்படுத்தப் படவேண்டும் பருவம். வாய்ப்போ கிடைத்தற்கரிய வாய்ப்பு. தொடக்கப் பள்ளிக்கூடங்களே இல்லாத ஆயிரக் கணக்கான சிற்றூர்களும், படிக்க வாய்ப்பில்லாத பல இலட்சம் மக்களும் உள்ள இந்நாட்டில் உங்களுக்காவது ஏதோ படிக்க வாய்ப்புக் கிடைத்திருக்கின்றதென்றால், அதை எளிதானதாகவோ அலட்சியப்படுத்தக் கூடியதாகவோ கருதாதீர்கள்; இப்பருவத்தையும் வாய்ப்பையும் நன்றாக முழுதும் பயன்படுத்திக்கொள்ளுங்கள்; மாணவப்பருவத்தில் கற்க வேண்டுவதை எல்லாம் கற்றுக்கொள்ளுங்கள்; பெற வேண்டும் திறமைகளை எல்லாம் பெற்றுக்கொள்ளுங்கள்; தேடிக் கொள்ளவேண்டுவன எல்லாம் தேடிக்கொள்ளுங்கள்.

2. கல்வி கரையற்றது: கற்கவேண்டுபவை உங்கள் பாட நூல்களோடு முடிந்துவிட்டனவாக எண்ணாதீர்கள். கற்கவேண்டுபவைகளை அறிமுகப்படுத்துபவைகளே அவை. பாடநூல்களுக்கு அப்பால் பரீட்சைகளுக்குத் தொடர் பில்லாதவை பலவற்றை நீங்கள் கற்றுக்கொள்ளவேண்டும்; படிப்பை முடித்த பின், அவைகளைக் கற்கலாம் என்று மட்டும் காலந் தாழ்த்தாதீர்கள். அன்று குறைந்தால் ஆறுமாதங்கள் தான்.

3. வெறும் ஏட்டுப்படிப்புத் தகவல்களைத்தான் கொடுக்கும்; அறிவொளியைத்தான் வீசும். அவற்றை வாழ்க்கையோடு இணைத்துப் பயன்பெறும் திறமையை நீங்கள் பெற

முயலவேண்டும். வாழ்க்கைக்கு ஊக்கம், உறுதி, உழைப்பு, தன்னம்பிக்கை இன்றியமையாதவை. அவற்றையெல்லாம் நீங்கள் இடைவிடாத பயிற்சியாற் பெறலாம்; அப்படிப் பெறத் தவறவேண்டா.

4. **பிஞ்சிற் பழுக்கவேண்டா :** இளம்பருவத்தே உங்களை மயக்கக்கூடியவை பற்பல.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்ற அறவுரையை மனத்திற் கொண்டு, கல்வியிலே உங்கள் முழுக்கவனத்தையும் செலுத்துங்கள். கல்வியின் பகுதியாகத் தான் நீங்கள் சமூகம், பொருளாதாரம், அரசியல் ஆகியவற்றைப் பற்றிப் படித்துச் சிந்தித்துத் தெளிவுபெற வேண்டும். மாணவர்களாக இருக்கும்போதே அரசியல் வாதிகளாகி விடவேண்டா என்று மட்டும் அறிவுறுத்த விரும்புகிறேன். எதற்கும் காலமுண்டு. காலம் வரும்போது கருத்தோடு செயலாற்ற ஆயத்தம் செய்துகொள்ள வேண்டுவதே மாணவர் கடமை. மாணவர்களாக இருக்கையிலேயே அரசியல் வாதிகளாவது பிஞ்சில் பழுப்பதாகும். அப்பழத்தின் சுவையும் பயனும் எப்படி இருக்குமென்பது நீங்கள் அறியாததன்று.

5. **உடலோம்பல் :** உடலோம்பலின் இன்றியமையாமையை நான் அதிகம் வற்புறுத்தத் தேவை இல்லை. அதன் தேவையையும் சிறப்பையும் உணர்ந்திருந்தாலும் வசதிக்குறைவும் வேறு பொழுதுபோக்குக் கவர்ச்சிகளும் உடற்பயிற்சியை மறக்கச் செய்துவருகின்றன. இது பெருந் தீங்கு. "உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே," என்பது பொருள் நிறைந்த மொழி. உடல்வலிமை இல்லாதவன் எல்லா வலிமைகளும் பெற்றிருந்தாலும், தனக்கும் பிறருக்கும் முழுப்பயன் அற்றவனுகத்தான் இருக்கநேரிடும். எனவே, எப்படியும் ஒழுங்காக உடற்பயிற்சி செய்ய வழி வகை செய்துகொள்ளுங்கள்.

6. **ஒப்புரவு :**

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்."

என்ற பொய்யா மொழியையும் உங்களுக்கு நினைவூட்ட

விரும்புகிறேன். கல்வி, ஏட்டுப் படிப்பு அல்லது தொழிலறிவு ஆகியவற்றை ஊட்டுவதோடு நிற்கக்கூடாது. அது நமக்குக் கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் கற்பிக்க வேண்டும். ஒழுக்கம் என்னும்போது வழக்கமாகக் கூறும் ஐம்பெருங் குற்றங்களை நீக்குவதை மட்டும் நான் குறிக்கவில்லை; மக்களோடு மக்கள் எப்படிப் பழகுவது, எங்கெங்கு எப்படி நடப்பது, பொது இடங்களில் எப்படி நடப்பது என்பவைகளையும் சேர்த்துத்தான் குறிக்கிறேன். கட்டுப்பாடும் ஒழுங்கும் அற்ற அறிவாளி, கூடிய இடமெல் லாம் புரண்டோடிக் கண்டதை யெல்லாம் பாழாக்கும் காட் டாறு போன்று தீமை பயப்பவன் ஆவான். எனவே, கட்டுப் பாட்டையும் ஒழுங்கையும் இளமையிலேயே கற்றுக்கொள்க.

7. **கற்றதனால் ஆய பயன்:** நல்ல உறுதியான உடலும் கூரிய மதியும் கட்டுப்பாடும் ஒழுங்கும் எதற்குப் பயன்படவேண்டும்? யாருக்குப் பயன்படவேண்டும்? ஆக்கத்திற்கா? அழிவிற்கா? தனக்கா? பிறருக்கா?

8. அணுவைப்பிளந்து ஆற்றல் மிக்க சக்தியைக்கண்ட மனித சமுதாயம், அச்சக்தியால் உலகம் என்று அழிக்கப் படுமோ என்று அஞ்சி அஞ்சி அல்லலுறுகின்றதல்லவா? காரணம் என்ன? ஆக்க வேலைக்கு அவற்றைப் பயன்படுத்தத் தவறியதே. அறிவும் வலிவும் வளர்ந்த அளவு, மக்கள் உள்ளம் வளர்ந்தபாடில்லை. ஆகவே, வலிமை எல்லாம், அறிவெல் லாம் இதுவரை 'தான்' என்கிற சிறையிலிருந்து வெளிப்பட வில்லை. தன்பெண்டு, தன்பிள்ளை என்கிற தன்னலம், பொதுநலத்திற்கு ஊறாக நிற்கிறது. 'தான்' என்பதைக் குறைத்து, 'நாம்' என்பதைப் பெருக்கப் பெருக்கத்தான் நாம் மக்கள் நிலையை எய்துவோம். தனி உணர்ச்சி குறைந்து, சமூக உணர்ச்சி வளர வளரத்தான் நம் துன்பங்கள் தொலையும்.

9. **மக்கட்பண்பு:** பழமைக்குப் பழமையாய்ப் புது மைக்குப் புதுமையாய் உள்ள குறள்,

> " அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
> மக்கட்பண் பில்லா தவர்."

என்று இடித்துரைப்பதை மறந்துவிடாதீர்கள். கல்வி

யின் நோக்கம் மக்கட்பண்பைப் பெறுவதே. எது மக்கட் பண்பு என்று சிறிது சிந்திப்போம். மக்கட் பண்பாவது, பிறிதினேய் தந்நோய்போல் நோக்குதலாகும். எனவே, மக்கள் துன்பத்தைத் தன் துன்பமாக எவன் கருதுகிருனே அவனே கல்விமான். மற்றவர்கள் எவ்வளவு அறிந்திருந் தாலும், எத்துணைப் பட்டங்கள் பெற்றிருந்தாலும், எவ்வளவு உயர்ந்த நிலேயில் இருந்தாலும் மக்கள் நிலேயை அடையாத வர்களே. மக்கள் நிலேயை அடையவே நாம் எல்லோரும் விரும்புவோம் என்பது உறுதி. எனவே, நம்மைச் சூழ்ந் துள்ளோர் அடைகிற துன்பங்கள் எவை எவை? அவற்றை நீக்க வழிகள் எவை எவை என்றும் கவனிப்போம்.

10. **துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும்:** வறுமை, அதன் விளேவான பட்டினி; அறியாமை, அதன் விளேவான மூட நம்பிக்கைகள், மூடப் பழக்க வழக்கங்கள்; சாதி ஏற்றத் தாழ்வு, அதன் விளேவான சாதிச் சண்டை; சமயவெறி, அதன் விளேவான சமயப் போராட்டங்கள்; இவற்றின் கூட்டு விளேவான அமைதியின்மை-ஆகிய துன்பங்களே நாம் அநுபவித்துவருகிறோம். இத் துன்பங்களே நீக்க முடியுமா? இப்படியே விட்டுவைக்கலாமா? நீக்கமுடியும், நீக்கவேண்டும் என்பதே என் முடிவு. பிற நாடுகள் செய்து காட்டிய முடிவு மாகும்.

11. **நல்குரவு:** வறுமை சமூகத் தொத்துநோய். அதைப் போக்குவது சமூகத்தின் முதற் கடமை. அதனே எவ் வழியிற் போக்குவது என்பதை நீங்கள் சிந்திக்கவேண்டும். 'உழைப்பைப் பெருக்கி உற்பத்தியைப் பெருக்கினுல் எல்லோரும் வறுமையின்றி வாழலாம் என்பது உண்மையா? பெற்ற பொருள்களே இப்போதுள்ள முறைக்கு மாருக வினி யோகிப்பதன் மூலம் வறுமையைப் போக்குவதா?' என்ற கேள்விகளுக்குப் பதில் என்னிடத்திலிருந்து எதிர் பார்க்கா தீர்கள். இரண்டில் எதைக் கொண்டாலும், இரண்டும் மறந்து விட்ட மற்ருென்றை நான் நினேவூட்டக் கடமைப் பட்டுள்ளேன். அது எது? செலவு முறை; நம் மக்கள் செலவு முறையைக் குறிப்பிடுகிறேன். மயக்கத்திற்கோ, வீண் பெருமைக்கோ ஆனவற்றிற்கு நாம் ஏராளமான செல்வத்தைப்

பாழாக்குகிறோம். அவற்றைத் தடுத்து வாழ்க்கையை நிரந்தர மாக நல்வழிப்படுத்தும் துறைகளுக்கு அதிகம் செலவிடக் கற்றுக்கொள்ளவேண்டும். அளவறிந்து செலவிடத் தெரியாத மக்களை எம்முறையும் காப்பாற்ருது என்பதை மறக்காதீர்கள்.

12. அறியாமை : தற்குறித்தன்மை நமக்குள்ள அடுத்த துன்பம். மக்கட் பெருக்கத்திற்குப் பெயர்போன தைப் போன்றே தற்குறித்தன்மைக்கும் நம் நாடு உலகறிந்த தாய் இருக்கிறது. அறியாமையின் விளைவாய் நம்மிடையே உள்ள மூடநம்பிக்கைகளும் கண்மூடி வழக்கங்களும் எண் ணிறந்தன. நாம் முழுமக்கள் தன்மை அடைவதற்குக் குறுக்கே நிற்கும் இவற்றை யெல்லாம் விரைவில் குழி தோண் டிப் புதைக்கவேண்டும். மன்னர்களாகி விட்டவர்களை மண்ணுங்கட்டி நிலையில் விட்டுவைப்பது இழிவுமட்டுமன்று, பெருந் தீங்குமாகும். எனவே, இத் தலைமுறையின் முழுக் கவனமும் முயற்சியும் 'எல்லோரும் கல்வி கற்றுப் பன்னரும் கலைஞானத்தால், பராக்கிரமத்தால் உன்னத இமயமலைபோல் கீர்த்தி எய்'திடுவதற்கான பணிகளில் திருப்பப்படவேண்டும். இதற்கான பொறுப்பையும் உழைப்பையும் நாட்டு அரசிற்கு மட்டுமே விட்டுவிடாமல் பொது மக்களும் பகிர்ந்துகொள்ள வேண்டும் ; விரைவில் பகிர்ந்துகொண்டு வேகமாகப் பணி புரியவேண்டும். 'அப்படிப் பகிர்ந்துகொள்ள முடியுமா?' என்ற ஐயம் எழலாம். முடியுமென்பதில் எனக்கு ஐயமில்லை. இன்றும் நாட்டில் நடக்கும் 'தர்மங்களை'ப் பார்த்தவர்களுக்கு ஐயமிராது. நாட்டில் நடக்கும் அறங்களையெல்லாம் கல்விக் கூடங்கள் மூலமாக நடக்கும்படி செய்வது நம்முடைய கடமை.

> "அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
> ஆல யம்பதி னுயிரம் நாட்டல்
> * * *
> பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
> பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல்
> அன்ன யாவினும் புண்ணியங் கோடி
> ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்"

என்ற காலத்திற்கேற்ற நல்லுரையை எடுத்துக் காட்டி,

கல்விப்பணிக்கான எல்லா உதவிகளையும் செய்யக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

13. **சாதி வேற்றுமை :** சாதி உயர்வு தாழ்வு நம்மைப் பிடித்துள்ள மற்றொரு பெருநோய்; தமிழர்கள் நல்ல நிலையில் இருந்த காலத்தே இல்லாத நோய்; இடையிலே பெற்ற நோய்; விரைவில் ஒழிக்கப்படவேண்டும் நோய். 'உயர்வு தாழ்வு எங்கு இல்லை? ஒவ்வோர் இடத்தில் ஒவ்வோர் உருவில் இருக்கிறது,' என்கிற முடக்குவாதம் நம்மை முன்னேற வொட்டாமல் தடுக்கும். அவ்வாதத்திற்குச் செவி கொடுத்தால் நீங்கள் மக்கள் தன்மையை எட்ட முடியாது.

14. "எல்லோரும் ஓர்குலம், எல்லோரும் ஓர் இனம்," "யாதும் ஊரே யாவரும் கேளிர்", "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற நல்லுரைகளை நாம் பல்லாண்டுகளாகப் பலப்பல மேடைகளிலும் கேட்டுத்தான் வருகிறோம்; இவற்றைத் தமிழனின் உயர்விற்கு எடுத்துக்காட்டாகப் பயன்படுத்திக்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் உண்மையிலே சாதிகளை விட்டு மக்களாகும் பாதையில் நடக்கிறோமா? தேர்தல்களில் ஆதரவு தேடும் முறையைக் கவனித்தாலே போதுமே. நம்மை விட்டுச் சாதி வெறி போகவில்லை என்பதற்குக் காரணம் என்ன? சாதிகளை வைத்துக்கொண்டே சாதிப்பற்று வேண்டாமென்று கூறிக்கொண்டு பொழுது போக்கு வேலை செய்துகொண்டிருந்தோம். எனவே, இடமும் காலமும் கிடைத்தபோது சாதிவெறி முழு ஆட்டம்ஆடுகிறது. மக்கட் பண்பை மறைக்கும் சாதிப்பற்று ஒழிய வேண்டுமென்றால், சாதிகள் இல்லாத நிலை ஏற்பட வேண்டாவா? அதற்கான வழியை இனித்தானா அறிந்துகொள்ளப் போகிறீர்கள்? அந்நிலை வெறும் விறுவிறுப்பான பேச்சால் கிட்டுமா? கூட்டத்திற் கூடிநின்று, கூடிப் பிதற்றிவிட்டு, நாட்டத்திற் கொள்ளாவிட்டால் ஏற்படுமா? நெஞ்சில் உரத்தோடு நேர்மைத்திறனோடு எல்லாச் செயல்களிலும் சாதியை நீக்கினால் அல்லவா முடியும்? அந்த நேர்மையும் உரமும் உங்களிடம் எதிர்பார்ப்பது அதிகமா?

15. **சமய வெறி :** சமயப்பற்றும் சமயவெறியாக மாறி அடிக்கடி நம்மை அலைக்கழிக்கிறது. சமயம் மனிதனுடைய

தனி விவகாரம். கூட்டு மொத்த வெளிச்சத்திற்காக அதைப் பொது விவகாரமாக்கிப் பகையை வளர்க்கும் வெறியாக மாற்றுவது நல்லதன்று. சமயம் மக்களை ஒழுங்குபடுத்திப் பண்படுத்தாமல் சண்டையை வளர்ப்பதா? சமயத்தின் மதிப்பு அதைப் பின்பற்றுபவர்களின் வேடத்தில் இல்லை, நடையில் இருக்கிறது என்பதை நினைந்து, அதற்கேற்றபடி நடந்துகொள்ளுங்கள்.

16. முடிவுரை: உருவால் மக்களாய்ப் பிறந்த நாம் நிலையால் மக்களாகாமல் இருப்பதற்கான காரணங்கள் சில வற்றை உங்களிடம் காட்டினேன். அவற்றைச் சிந்தித்துப் பார்ப்பீர்கள் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. அதன் விளைவாக உங்களுக்குத் தெளிவு ஏற்படும் என்பதிலும் எனக்கு ஐயமில்லை. உங்கள் தெளிவில் பிறக்கும் நேரிய வழியில் நடக்க உரமும் உறுதியும் இருக்குமா என்பதைக் காலந்தான் காட்டவேண்டும். அத்தகைய உரமும் உறுதியும் பெருக, உங்களுக்குத் துணையாக நிற்கும்படி நாட்டின் நலத்தில் நாட்டமுடைய பெரியோர்களை வணக்கத்துடன் வேண்டிக்கொள்கிறேன்.

“கற்க கசடறக் கற்பவை; கற்றபின்
நிற்க அதற்குத் தக.”

என்ற வள்ளுவரின் வழிகாட்டியை நினைவூட்டுவதோடு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

### அருஞ்சொற்பொருள்

வாய்ப்பு - சந்தர்ப்பம். தகவல் - விவரம். இன்றியமையாதவை - இல்லாமல் முடியாதவை; தேவையானவை. பிஞ்சிற்பழுத்தல் - பருவத்திற்கு ஏலாதவற்றை மேற்கொண்டு வாழ்க்கையைக் கெடுத்துக்கொள்ளுதல். “உடம்பை......தேனே”—இது திருமூலர் வாக்கு; இவர் பாடிய திருமந்திரத்தில் உள்ளது. ஒப்புரவு - ஒற்றுமையுடைமை. விழுப்பம் - சிறப்பு. ஓம்ப - பாதுகாக்க. ஐம்பெருங்குற்றங்கள் - பொய், களவு, கள், காமம், கோபம். ஊறு - கெடுதி. வளரவளர, அஞ்சிஅஞ்சி - அடுக்குத் தொடர்கள். மக்கள் பண்பு - மனிதத் தன்மை. நல்குரவு - வறுமை. தற்குறித்தன்மை - கல்வியின்மை. காலத்திற்கேற்ற நல்லுரை - பாரதியார் வாக்கு—“அன்ன சத்திரம்......எழுத்தறிவித்தல்” விறுவிறுப்பு - இரட்டைக்கிளவி; பிரிந்து பொருள்தராத இரு சொற்கள். விறுவிறுப்பான - உணர்ச்சி மிகுந்த. உரம் - வலிமை. அலைக்கழிக்கிறது - துன்பப்படுகிறது. கசடு - குற்றம். அற - நீங்க. தக - தக்கபடி.

### கேள்விகள்

1. 'வாய்ப்போ கிடைத்தற்கரிய வாய்ப்பு'—இதன் கருத்து யாது?
2. "அன்று குறைந்தால் ஆறு மாதங்கள்தான்."—இடம் சுட்டி விளக்குக.
3. ஏட்டுப் படிப்பின் இயல்பு யாது?
4. வாழ்க்கைக்கு இன்றியமையாதவை யாவை?
5. 'பிஞ்சிற் பழுக்கவேண்டா'—இதன் பொருள் யாது?
6. 'உடலோம்பல்' என்னும் சொல்லால் ஆசிரியர் கூறுவன யாவை?
7. "ஒழுக்கம்......படும்." இக்குறளின் கருத்து யாது?
8. 'ஒழுக்கம்' என்னும் சொல்லால் ஆசிரியர் குறிப்பன யாவை?
9. கட்டுப்பாடும் ஒழுங்கும் அற்ற அறிவாளி எதைப் போன்றவன் ஆவான்?
10. நாம் எப்பொழுது மக்கள் நிலையை எய்துவோம்?
11. நம் துன்பங்கள் எப்பொழுது தொலையும்?
12. "அரம்போலும்.........தவர்" என்னும் குறள் உணர்த்துவது யாது?
13. எது 'மக்கட்பண்பு' எனப்படும்?
14. எவர் மக்கள் நிலையை அடையாதவர்?
15. நாம் எவ்வெத் துன்பங்களை அநுபவித்து வருகின்றோம்?
16. செலவு முறைபற்றி ஆசிரியர் கூறுவது யாது?
17. நாம் எவற்றை விரைவில் குழிதோண்டிப் புதைக்கவேண்டும்? ஏன்?
18. 'காலத்திற்கேற்ற நல்லுரை' யாது?
19. எது முடக்கு வாதம்? அதனால் வரும் தீமை யாது?
20. நாம் எவற்றைப் பலப்பல மேடைகளில் கேட்டுவருகிறோம்?
21. சமயத்தின் மதிப்பு எதில் இருக்கிறது? எதில் இல்லை?
22. நாட்டின் நலத்தில் நாட்டமுடைய பெரியோர் யாது செய்தல் வேண்டும்?
23. "கற்க......தக."—இக்குறளின் கருத்து யாது?

### பயிற்சி

1. 'கல்வியே மனிதனை முழு மனிதன் ஆக்குவது' என்பதை விளக்கி ஒரு கட்டுரை வரைக.
2. இச்சொற்பொழிவில் கூறப்பட்டுள்ள 'நம் துன்பங்களும் அவற்றை நீக்கும் வழிகளும்' என்பதுபற்றி ஒன்றரைப்பக்கத்தின் மிகாமல் ஒரு கட்டுரை எழுதுக.
3. இச் சொற்பொழிவுச் செய்திகளைப் படித்தபிறகு உங்களுக்குத் தோன்றும் எண்ணங்களைத் தொகுத்து வரைக.

குறிப்பு: இத்தகைய சொற்பொழிவுகளைக் கேட்க வாய்ப்பு நேரும் பொழுது, சொற்பொழிவின் குறிப்புக்களைத் தயாரித்துக்கொண்டு பயன் பெறுக. நீங்கள் பேசவும் எழுதவும் அக்குறிப்புக்கள் பெரிதும் பயன்படும்.

# 15. களவியல் கிடைத்த வரலாறு

## (இறையனூர் களவியல் உரை)

### முசிரி ஆசிரியர் நீலகண்டனூர்*

[இறையனூர் களவியலுக்குச் சங்ககால நக்கீரனூர் உரை கூறினூர். அவ்வுரை ஆசிரியர் - மாணவர் வரிசையில்வந்து, கி. பி. ஏழாம் நூற்ருண்டில் நூல் வடிவில் எழுதப்பெற்றது. கீழ்வரும் பகுதி அந்நூலுள் இருப்பது. இது நமக்குக் கி. பி. ஏழாம் நூற்ருண்டில் இருந்த உரைநடையை நன்கு உணர்த்துவதாகும்.]

1. பாண்டியனுடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது. செல்லப், பசி கடுகுதலும், அரசன் சிட்டரையெல்லாங் கூவி, "வம்மின், யான் உங்களைப் புறந்தரகில்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர் போய் நுமக்கறிந்த வாறு புக்கு, நாடு நாடாயினஞான்று என்னை யுள்ளி வம்மின்," என்ருன். என, அரசனை விடுத்து எல்லாரும் போயின பின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர், நாடு மலிய மழை பெய்தது. பெய்த பின்றை அரசன், "இனி நாடு நாடாயிற்ருகலின் நூல்வல்லாரைக் கொணர்க," என்று எல்லாப் பக்கமும் ஆட்போக்க, எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் வல்லாரைத் தலைப் பட்டுக் கொணர்ந்து, "பொருளதிகாரம் வல்லாரைத் தலைப் பட்டிலேம்," என்று வந்தார். வர, அரசனும் புடைபடக் கவன்று, "என்ன! எழுத்துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமெனின், இவை பெற்றும் பெற்றிலேம்," எனச் சொல்லா நிற்ப, மதுரை ஆலவாயில் அழனிறக் கடவுள் சிந்திப்பான்: "என்னை பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று. அதுதானும் ஞானத்திடையதாகலின், யாம் அதனைத் தீர்க்கற்பாலம்," என்று, இவ்வறுபது சூத்திரத்தையுஞ் செய்து மூன்று செப்பிதழகத் தெழுதிப் பீடத்தின் கீழிட்டான்.

---

* முச்சங்க வரலாறும், களவியலுக்கு நக்கீரர் உரைவகுத்தார் என்பதும், அவர்க்குப்பின் அவ்வுரை, ஆசிரியர் - மாணவர் முறையில் கூறப்பட்டு, இறுதியில் தமக்குக் கூறப்பட்டதென்பதும் முசிரி ஆசிரியர் நீலகண்டனூர் கூற்ருகும்.

2. இட்ட பிற்றை ஞான்று, தேவர்குலம் வழிபடுவான் தேவர் கோட்டத்தை எங்குந் துடைத்து, நீர் தெளித்துப் பூவிட்டுப் பீடத்தின்கீழ்ப் பண்டென்றும் அலகிடாதான் அன்று தெய்வத் தவக் குறிப்பினுன் அலகிடுவனென்று உள்ளங்குளிர அலகிட்டான். இட்டாற்கு அவ்வலகினேடும் இதழ் போந்தன. போதரக் கொண்டுபோந்து நோக்கினுற்கு வாய்ப்புடைத்தாயிற்ருேர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப் பார்ப்பான் சிந்திப்பான்: "அரசன் பொருளதி காரம் இன்மையிற் கவல்கின்ருனென்பது பட்டுச் செல்லா நின்றதுணர்ந்து நம்பெருமான் அருளிச் செய்தானுகும்," என்று, தன் அகம் புகாதே கோயிற்றலேக்கடைச் சென்று நின்று, கடைக்காப்பார்க் குணர்த்தக் கடைக்காப்பார் அரசற்குணர்த்த, அரசன் புகுதருகவென்று பார்ப்பானேக் கூவச் சென்று புக்குக் காட்டக் கொண்டு நோக்கி, "இது பொருளதிகாரம்! நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச்செய்தானுகற்பாலது," என்று, அத்திசை நோக்கித் தொழுதுகொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து, "நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்த பொருளதிகாரம்! இதனேக் கொண்டு போய்ப் பொருள் காண்மின்," என, அவர்கள் அதனேக் கொண்டு போந்து கன்மாப்பலகை ஏறியிருந்தாராய்வுழி, எல்லாருந் தாந்தாம் உரைத்த உரையே நன்றென்று சில நாளெல்லாஞ் சென்றன.

### அருஞ்சொற்பொருள்

வற்கடம் - பஞ்சம். சிட்டர் - சான்ருேர். புக்கு - வேறு நாடுகளிற் புகுந்து. உள்ளி - நினேத்து. தலேப்பட்டு - சந்தித்து. புடைபட - மிகவும். கவன்று - வருந்தி. அன்றே - அல்லவா? எழுத்ததிகாரம் - எழுத்தைப்பற்றிய இலக்கணம். பொருளதிகாரம் - அகப்பொருள், புறப் பொருள்களேப் பற்றிய இலக்கண நூல். ஆலவாய் - மதுரையில் உள்ள சிவபெருமான் கோவிற் பெயர்; பின்பு மதுரைக்குப் பெயராயிற்று. அழல் - தீ. கவற்சி - கவலே. தீர்க்கற்பாலம் - தீர்ப்போம். அறுபது சூத்திரம் - இறையனுர் களவியல் என்னும் நூலில் உள்ள அறுபது சூத்திரங்கள். பிற்றை ஞான்று - பிற்பட்டபொழுது. தேவர்குலம் - கோவில். வழிபடுவான் - பூசிப்பவன், அர்ச்சகன். கோட்டம் - கோவில். பண்டு - முன்பு. அலகிடாதான் - பெருக்காதவன். இதழ் - செப்பு

ஏடுகள். கோயில் - அரண்மனை. கடைத்தலை - வாசல். கடைகாப்பார் - வாயிற்காவலர். புகுதருக - வருக. புக்கு - நுழைந்து. கன்மாப்பலகை - சங்கப்பலகை.

### கேள்விகள்

1. பஞ்சத்தில் வாடிய அரசன் புலவர்களிடம் யாது கூறினான்?
2. பஞ்சம் தீர்ந்தவுடன் புலவருள் எவர் கிடைத்தனர்? எவர் கிடைத்திலர்?
3. ஆலவாயன் செய்த அற்புதம் யாது?
4. ஆலவாயன் எழுதிய ஏடுகள் அர்ச்சகனுக்கு எவ்வாறு கிடைத்தன?
5. ஏடுகளைக் கண்டு மகிழ்ந்த அரசன் புலவரை நோக்கி யாது கூறினான்?

### பயிற்சி

1. புறந்தருதல், மலிய, கவற்சி, ஞான்று, அலகிடல், அருளிச் செய்தல், கடுகுதல், வல்லார், செப்பிதழ், நுமக்கறிந்தவாறு, கோட்டம், உள்ளம் குளிர, வாய்ப்புடையது, கடைக்காப்பார், ஆராய்வுழி, நன்றென்று—இவற்றை உங்கள் வாக்கியங்களிற் பயன்படுத்துக.
2. சேர்த்துக் கூறுக:—நன்று + என்று, இருந்து + ஆராய்ந்து, போய் + கண்டார், இதனை + கொண்டுபோ, அருளி + செய்த, காட்ட + கொண்டு, பண்டு + என்றும், அ + அலகு, தலை + கடை, கோவில் + தலைக் கடை.
3. பிரித்து எழுதுக:—நுமக்கறிந்தவாறு, நாடாயின, வல்லாரைக் கொணர்க, சொல்லதிகாரம், பொருளதிகாரம், பொருட்டன்றே, அரசற்குக் கவர்ச்சி, ஞானத்திடையது, இவ்வறுபது.
4. இப்பாடத்தில் வந்து, இன்று வழக்கில் இல்லாத சொற்களைத் தொகுத்து எழுதுக.
5. இப்பாடச் செய்தியை உங்கள் சொந்த நடையில் வரைக.
6. இப்பாடச் செய்தியை பாண்டியனே நமக்குக் கூறுதல் போலக் கூறுக.
7. இப்பாடப் பொருளைச் சிவபெருமானே உமாதேவிக்கு எழுதுவது போல எழுதிக் காட்டுக.
8. இப்பாடச் செய்தியை அருச்சகன் தன் உறவினனுக்கு எழுதுவது போல ஒரு கடிதம் எழுதுக.

———



# NATIONAL TAMIL MALAI

## FORM V—GENERAL COURSE

EDITOR : Dr. M. RAJAMANIKKANAR,
M.A., L.T., M.O.L., PH.D.

THE NATIONAL PUBLISHING CO.,
6, KONDI CHETTY STREET, MADRAS-1

 [PRICE RE. 1/4.